N. ஜெயந்த வேல்.

ஸ்ரீராமஜெயம்

சுகர்நாடி என்னும்

# ஜோதிட சிகாமணி

மூலமும் - உரையும்

திரிசிராபுரம் பீமநகரம் ஜோதிட சித்தாந்தி

கா. இராமசாமிப்பிள்ளையவர்கள்

இயற்றியது

மேற்படியார் மருமகரும், மாணாக்கருமாகிய

சுவாமிமலை ஜோதிட பண்டிதர்

வீ. ஆரியமுத்துப்பிள்ளை அவர்களால்

இதற்கு உரையும், உதாரணச் சக்கரங்களும் இயற்றிச்

சேர்க்கப்பட்டிருக்கின்றன

நான்காம் பதிப்பு

உமையாள் & கோ.,

சேலம்.
சென்னை :

B. R. அரங்கசாமி நாயகர் அவர்களால்

பதிப்பிக்கப்பெற்றது



—

[விலை ரூ. 4 - 0 - 0

# முகவுரை

மாட்சிமை தங்கிய என் ஜனன தேசத்து சுதேசாபிமான முள்ள சகோதரர்களே! இந் நூலினை யான் வெளிப்படுத்த நேரிட்ட காரண மின்னதென இதனடியிற் கூறப்படும் விஷயங்களாற் பகலைப்போல இகலற மிகத் தெளிவாய் விளங்கும்.

சோதிட மென்னும் வார்த்தையின் சாதாரணக் கருத்தாவ தென்னெனில்: இராசி மண்டலத்தில் சூரியன் முதலிய கிரகங்களானவை சுற்றி வருதல், ஒன்றோடொன்று சந்தித்தல், ஒரு ஸ்தானத்தில் சங்கமமா யிருத்தல் ஆகிய பலவித விகற்பங்களைத் தெரிந்து அவற்றால் நேரிடும் சூரிய சந்திர கிரகணங்கள், மழை காலம், கோடை காலம், வேனிற் காலம் முதலிய கால விகற்பங்கள், ஜலப் பிரவாகம், பெரும் புயல் முதலிய விசேட அற்புதங்கள் ஆகியவைகளைத் தெரிந்து கொள்ளும் கணித முறையேயாம். இந்த சாஸ்திரமானது பண்டைக் காலந் தொடுத்து நாகரீக மென்னும் வாசனையுள்ள ஒவ்வொரு ஜாதியாரிடத்தி லும் வழங்கி வந்ததாக அந்தந்தத் தேசச் சரித்திராசிரியர்களாலும், அந்தந்த ஜாதியார்களின் வேதாகம சாஸ்திர புராண கீதங்களினாலும், பூரணமான அனேக திருஷ்டாந்த உதாரண அத்தாக்ஷிகள் மலிந்து கிடக்கின்றன. நமது இந்து வேதாதாரப்படி சோதிடமானது ஷஷ்டாங்கங்களில் முதன் முதலாகிய நேத்திராங்க மென்பது யாவ ருக்கும் தெரிந்த விஷயம். ஏனெனில், நமது கொள்கையின்படி இகபரத் திற்குச் சாதனமாகிய ஒவ்வொரு நற்கருமங்களையும், துற்கருமங்களையுஞ் செய்ய நக்ஷத்திரம், திதி, நாள், வார முதலியவைகள் ஏற்படுத்தப்பட்டு, அவ்விதமே அனேக கோடி நமது இந்து ஜனங்கள் நடந்து வருவது பிரசித்தம்.

இவ்விதமே கிருஸ்தவர்கள் சத்தியவேத புத்தகமாகிய சுவி சேஷத்தில் ஜோதிடமானது பூர்வ காலத்தில் வழங்கி வந்ததாகவும் அனேக திருஷ்டாந்தங்க ளிருக்கின்றன. இந்த சோதிடமானது இந்தி யாவில் பிரபலமா யிருந்ததுபோலவே இதர தேசங்களாகிய அரேபியா, ஐரோப்பியா என்பது துருக்கி, குருசான், ஈரூன், தாரூன் முதலிய தேசங்களிலும் பிரபலமா யிருந்ததாகவும் அநேக சரித்திராசிரியர் மூலமாய்ப் பற்பலவித அத்தாட்சிக ளிருக்கின்றன. இன்னும் குருசான்

தேசத்திலும், எகிப்து தேசத்திலும், அரேபியா தேசத்திலும் அநேக ஜோதிட சித்தாந்திகள் உண்டா யிருந்ததாய் அவரவர்கள் கோர்வை செய்திருக்கிற நூல்களினாலேயே விளங்குகிறது. மேற்கண்ட தேசங்களில் இந்த சாஸ்திரத்தை அரசர்கள் முதல் அடிமைக வீருக எல்லோரும் கையாண்டு வந்ததாக விளங்குகின்றன: பிரதேசங்களாகிய மேற்கண்ட விடங்களில் கையாண்டு வந்ததுபோலவே இவ் விந்து தேசத்தை யரசாண்ட இந்து ராஜாக்கள், மகம்மதிய பாக்ஷாக்கள் ஆகிய பல வம்ச அரசர்களினாலும் வழங்கப்பட்டு வந்து, இந்த சோதிட பண்டிதர்களுக்கு அவரவர்களின் வித்தையின் திறமைக்குத் தக்கபடிக்கு பூஸ்திதி முதலிய வெகுமதிகளையும், விருதுகளையும் கொடுத்திருப்பதையும் இன்றுங் காணலாம். மேற்கண்ட ஐரோப்பியர், மகம்மதியர், இந்துக்கள் ஆகிய அரசர்கள் சமூகத்தில் இந்த சாஸ்திரத்தில் மிக அனுபோகமும், பாண்டித்துவமு முடைய சோதிடர்கள் அவ்வப்போது வெற்றியைப்பற்றியும், தோல்வியைப்பற்றியும், மற்றுஞ் சில விசேஷ நடவடிக்கைகளைப்பற்றியும், சிலரின் மரணாந்தத்தைப்பற்றியும் கணித்தபடியே நடந்திருக்கிறதாய் பின் வரும் திருஷ்டாந்தங்களினால் நன்கு புலப்படும்.

பூலோக சாஸ்திர நூலில் எழுதி யிருக்கிறதாவது:—ஐரோப்பா கண்டத்தில் றாம் தேசத்தை யரசாண்ட ஆஸம் என்னும் அரசருக்கு இராஜ குமாரன் பிறந்தபோது ஜோதிடத்தில் வல்லபராகிய ஒரு பண்டிதர் இந்த இராஜ குமாரர் தம்முடைய 21-வது வயதில் 7-தேசங்களை ஜெயித்து அவற்றை யாள்வார் என ஜாதகம் கணித்தனர். ஆனால், அப்போதிருந்த நிலைமையினால் இந்த ஜோதிட சாஸ்திரியின் பேச்சை நம்புவதற் கேதுவில்லாதிருந்தது. ஆனால் அவர் கணித்தபடியே 21-ம் ஆண்டில் மேற்கண்ட 7-தேசங்களையும் ஜெயித்து அவற்றிற்கு அதிபதி யானா ரென்பதே.

சக்கிரவர்த்திகளின் சரித்திரம் என்னும் நூலில் சொல்லப்பட்டிருக்கிறதாவது:—இந்திய சக்கிரவர்த்தியாகிய தைமூ ரென்னும் அரசர் ஒரு காலத்தில் தம்முடைய பகைஞர்களினாலும், உள்நாட்டு கலகத்தினாலும் வருத்தப்பட்டவரா யிருக்கும்போது அபுதுல்லா லிஸ்ஸாம் என்னும் ஜோதிடர் வந்து சொன்னதாவது, இப்போது வல்லமை ஸ்தானாதிபதியும், கீர்த்தி ஸ்தானாதிபதியும் குரு நோக்கம் பெற்று வைசேடிகாங்கிஷமும், கோபுராங்கிஷமு மடைந்து லாப ஸ்தானத்திற்கு இம்மாதம் 21-ந் தேதி வருகிறபடியால் அப்போது ராஜ சமூகத்தின் சகல கவலையும் சூரியனைக் கண்ட பனியைப்போ லாகிவிடும், எல்லரீப்

பகைஞர்களையும், கலகக்காரர்களையும் அடக்கி அவர்கள் நகரங்களை யெல்லாம் தாங்களே கைக்கொண்டு அந் நகரங்களுக்குத் தாங்களே சக்கிரவர்த்தியாவீ ரெனச் சொன்னார் என்பதே; ஆனால், அப்போது எதிரிகள் நான்கு திக்கிலும் வளைத்துக் கொண்டு பாம்பின், வாய்த் தேரையைப்போல் விழித்துக்கொண் டிருக்கும் சமயமா யிருந்தபடி யாலும், கலகங்கள் அதிக விமரிசையா யிருந்தபடியாலும், இவர் வார்த்தையை நம்புவதற் கிடமில்லா திருந்தபோதிலும், அவர் கணித்த படியே அந்த 21-ந் தேதி அந்த எதிரிகளுள் தத்தமக்குள்ளேயே சண்டை நேரிட்டு ஒருவரோ டொருவர் எதிர்த்துப் பொருத்து, தத்தம் பலங் குன்றி பின்னிடைய, இதுவே தக்க சமயமென அவர்களை யெதிர்த்து ஜெயித்து அவர்களின் நகரங்களை யொவ்வொன்றாய்க் கைக்கொண்டு ஜோசியர் சொன்னபடியே தான் அரசாண்டு வந்தனர்.

பிரான்சு தேசத்தை யரசாண்ட 14-வது லூயிஸ் என்னும் அரசர் பிறந்தபோது அப்போதிருந்த மந்திரி முதலானவர்கள் விலை மதிக்கக் கூடாத பதக்கமொன்று செய்வித்து, அரச குமாரருடைய ஜாதகத்தின் இராசிச் சக்கரத்தை மேற்படி பதக்கத்திற் பதிப்பித்து வைத்தனர்கள்.

அதின் விவரம் :—விருச்சிக லக்கினம் 4-ல் சனியும், இராகுவும்; 5-ல் குருவும்; 6-ல் சூரியனும், புதனும்; 7-ல் சுக்கிரன்; 8-ல் செவ்வாய்; 9-ல் சந்திரன்; 10-ல் கேதுவுமாம்.

இதன் பயனாவது:—ரத்தின மகுடஞ் சூடி யாதொரு குறைவின்றி சிங்காசனபதியா யிருப்ப ரென்பதாம். இதற்கு எத்தனையோ வருஷங் களுக்கு முன் நம் முன்னோர்களால் இயற்றப்பட்ட இதன் சாஸ்திர சுருதியை உதாரணமாக இங்கெழுதுவாம்.

கவி

பண்ணவர்சாமிதானவர்சாமி பாக்கியசாமியிம்மூவர்
பாவுறுகோணகேந்த்ரமாளிகையிற் பதிவுறவவ்வவர்க்கைவையே
திண்ணமாமாக்ஷியுச்சங்களாகச் சிறந்திடத்தீயவர்பார்வை [வான்
திகைக்கப்பாலொழியநல்லவர்கருணை செழித்திடக்கிடைத்தஜாதக
வண்ணமாமகுடஞ்சூடியிராச மாளிகையரியணைமேவி
மதகஜதுரகபதாதிகள்சூழ் வாழ்விடைத்தாழ்விலாதிருந்து
தெண்ணிலாவனையசத்ரசாமர பூசிதையுறீ இவதைபுரியாது
செந்தனிப்பெருங்கோல்செலுத்துவானென்று செப்புவரொப்புவர்
[தீர்ந்தோர்

பிரான்சு தேசத்து நெப்போலியன் சக்கிரவர்த்தியவர்களின் ஜாதகத்தில் கீர்த்தி ஸ்தானத்தில் சனி யிருந்தபடியால் அந்தச் சனி திசையில் அவர் இராச்சியத்தை யிழந்து சிநேகிதர்களால் கைவிடப்பட்டு தனித்து விடுவா ரென்று அப்போதிருந்த ஜோசியரால் சொல்லப் பட்டது போலவே நிறைவேறின விஷயத்தை பிரான்சு பத்திரிகைகளில் பிரசுரிக்கப்பட்டதை நாம் கண்டிருக்கிறோம்.

இன்னும் தற்காலத்தில் அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் பிரசுரிக் கப்படும் அநேக பஞ்சாங்கங்களில் பேர்பெற்றதும் வருஷம் 1-க்கு சுமார் லக்ஷம் காப்பிகள் செலவாகின்றதுமான ஜாத்கில் என்னும் பஞ்சாங் கத்தில் கண்டிருந்ததுபோல் துருக்கிக்கும் கிரீசுக்கும் சண்டை யுண்டான தையும், இந்தியாவில் பம்பாய் முதலிய விடங்களில் வியாதியினாலும், க்ஷாமத்தினாலும் பல்லாயிரம் ஜனங்களிறந்து போனதையும் பிரமாண சாக்ஷியாய் நாம் கண்டோம்.

இவ்விதம் அநேக அத்தாக்ஷிகளினால் பூர்வ காலந்தொடங்கி இந்த ஜோதிட சாஸ்திரமானது நடைபெற்று வருகிறதும். அநேக ரதை யனுசரித்து வருகிறதும் யாவருக்குந் தெரிந்த விஷயமே. இவ்வித அற்புதமான சாஸ்திரமானது ஜோதிட வேஷதாரிகளினால் நாளுக்கு நாள் க்ஷீணதிசை யடைந்து அநேகருக்கு நம்பிக்கை யற்று வருகிறது. மேலும் இப்போது வெளிப்பட்டிருக்கிற ஜோதிட கிரந்தங்கள் அந்த சாஸ்திரப் பயிற்சியை யுடையவர்களுக்கன்றி மற்றவர்களுக்கு வெகுவாய் உபயோகப்படாதவைகளா யிருக்கின்றன.

இன்னின்ன காரணங்களினால் தத்தம் ஜாதக முதலியவைகளை பிறருதவியின்றித் தாங்களே தெரிந்து கொள்ளும்படியான ஒரு கிரந்தம் வெளிப்படுத்தப்பட வேண்டுமென பெருத்த ஆவலுண்டா யிருந்தது. இந்த நன்னோக்கத்துடன் பல நூல்களையும் ஆராய்ந்து வருகையில் சப்த ரிஷிகள் முன்னிலையில் அரங்கேற்றப்பட்ட "சுக்கிர நாடி" யென்னும் நூலானது, மேற்கண்ட கருத்திற் குடன்பாடானதாகக் காணப்பட்டது. ஆனால் அந்தக் கிரந்தம் 12000-ம் செய்யுட்களுள்ள தாகையால், விரிவைப் பற்றி யெல்லோரும் அவ்வளவாய்க் கவனித்தல் கூடாமை. மேலு மதிற் சொல்லப்பட்ட எல்லா விஷயங்களையும் யாவரும் அவ்வளவு எளிதாய்க் கண்டுகொள்வதும் கூடாமை யாகையால், எனக்கு சோதிட ஆசிரியரும், மாமனாருமாகிய கா. இராமசாமிப் பிள்ளை சோதிட சித்தாந்தியவர்களால் ஷை சுக்கிர நாடி சுப்பிரமணியக் கடவுள் 1200-ம் பிரங்கித்திரட்டு

முதலிய கிரந்தங்களில் முக்கியாம்சங்களைத் திரட்டி படிப்போருக்கும், கேட்போருக்கும் ஆநந்தத்தை யுண்டாக்கத்தக்க பலவித சந்தங்களுள்ள பாடல்களாய்ச் செய்வித்திருந்தார். அந்த நூலினால் எல்லோருந் தங்கள் தங்களுக்கு அவசியமானவைகளைத் தெரிந்து கொள்ளக் கூடுமாயினும் அப் பாடல்கள் சற்று கருதலானபடியால் கற்றவர்க ளன்றி மற்றவர் களுக்கு பயன்படாதென அடியேன் அவற்றிற்கு உரை யெழுதினேன். அவ் வுரையுடன் அவற்றின் ராசிப் படங்களு மிருக்கின் யாவருக்கும் களங்கமறத் தெற்றென விளங்குமென நமது நண்பர்களுள் அநேகர் நம்மை வாதித்தபடியால் அவர்களிட்டத்திற் கிணங்கி அதிக கஷ்டத் தோடு ஒவ்வொன்றிற்கும் ராசிப் படங்க ளமைத்து எழுதி யிருக் கின்றேன். இதில் சற்றேறக்குறைய 1500-படங்க ளிருக்கின்றன. இவை ஒவ்வொரு லக்கினத்திற்கு உதாரணமாக எழுதப்பட்டவைக ளானபடியால் மற்ற லக்கினங்களும் இவ்வாறே யமைத்துக் கொள்ளக் கூடுமாகையால், மொத்தம் (1500+12—18000) படங்களாம். மேலும் இதிலடங்கி யிருக்கின்ற யோக பாவக முதலியவைகளைத் தெரிந்து கொள்ள இங்கு சங்கிரகிப்பாம். அவையாவன :—

## இங்கிலீஷ் மாதாரம்ப கணிதச் சக்கரம்

இதனால் சென்ற வருஷங்க ளெத்தனையானாலும், இனி வரும் வருஷங்க ளெத்தனையானாலும், அந்தந்த வருஷத்தின் ஒவ்வொரு மாதாரம்பத்தையும், தேதிகளையும் மிகவும் இலகுவாய்த் தெரிந்து கொள்ளக் கூடும்.

## நட்சத்திர மண்டலம், கிரக மண்டலம் ஆகியவற்றின் வடிவம்

1. ராசி மண்டல வடிவம் ஒவ்வொரு ராசியிலும் நட்சத்திரங்கள் நிலைத்து நிற்கும் வடிவம்.

2. ராசிகளின் பிரகிருதி முதலானவைகள்.

3. ராசியின் லக்ஷணங்கள்.

4. கிரகங்களின் லக்ஷண முதலியவைகள்.

5. சூரியன் ஒவ்வொரு ராசிகளிலும் செல்லுந் தினங்களைக் காட்டும் படம்.

6. சூரியன் ஒவ்வொரு நட்சத்திரங்களிலும் செல்லும் விவரம்.

7. சந்திரன் ஒவ்வொரு ராசிகளிலும், நட்சத்திரங்களிலும் நிற்குஞ் சுத்த நாட்களைக் காட்டும் படம்.

8. கிரகப்பிருதி முதலானவைகள்.

9. நவக்கிரக நட்பாக்ஷி, யுச்சம், பகை மூல திரிகோணங்களடங்கிய படம்.

10. கிரகாதிபத்தியங்கள் முதலியவைகள்.

11. லக்கின மெடுக்கும் விவரம்.

12. இலகுவாய் லக்கின நிச்சயம் அறியும் படங்கள்.

## மங்கள பாவகம்

இது இன்னின்ன காலங்களில் பக்தியுள்ள மனைவி முதலியவர்களை விவாகஞ்செய்து, நற்புத்திரரைப் பெற்று செல்வங் குறையாமல் வாழ்பவர் இன்னார் என்பதாம்.

## பாலாரிஷ்டம்

இது குழந்தை பிறந்தவுடனே அது அரிஷ்டப்படுவதும், 1-2-3-4-5-6-7-8-9-10 ஆகிய இந்த வருஷத்திற்குள் இன்னின்ன நோயினால் அரிஷ்டப் படுவதும் கூறுவதாம்.

## மத்திம ஆயுசு

இது எவ்வர்ண வயதில் இழிவான நோயினால் துன்பமடைந்து மாரகமாவதும், துட்டர்கள் கையாயுதத்தினால் மாரகமாவதும், யானை, குதிரை முதலிய வாகனங்களினால், மாரகமாவதும், அக்கினி, ஜலம், விரணம் முதலியவைகளினால் மாரகமாவதும் கூறுவதாம்.

## பூரண ஆயுசு

இது பூரண ஆயுசு வாழ்ந்திருந்து மாரகமாவது இன்னின்னார் என்பதாம்.

## பூரண பிதுர் பலன்

இது பூரண வயதிருந்து செல்வத்தில் மாரகமாகும், பிதுரை யுடையவர் இன்னு ரென்பதாம்.

## அவபிதுர் பாவகம்

இது துன்பத்தோடு பிதுர் மாரகமாவது ஜாதகன் கெர்ப்பத்தி லிருக்கும்போதே பிதுர் மாரகமாவதும், பிதுர் பரதேசி யாவரென்றது, அதிக நோயினுல் பிதுர் துயரப்படுவது இன்னின்னுர்களென்பதாம்.

## பூரண மாதுர் பலன்

நற்குணம் நற்செய்கையை யுடைய தாயார், பூர்ண வயதுடைய தாயார், பூரண வயதோடு மங்கிலியத்துடன் மாரகமாகும் தாயார், பதிவிரதா தர்மமுடைய தாயார் ஆகியவர்கள் இன்னின்னுர்க ளென்பதாம்.

## அவமங்கல தாயார் பலன்

மங்கிலிய மிழந்தும் கற்பு நிலை தவராத தாயார், மங்கிலிய மிழந்தும் துற்குணத்தை யுடைய தாயார், மங்கிலிய மிழந்து விரணம், கடன், துன்பம் ஆகியவைகளை யுடைய தாயார் இன்னின்னு ரென்பதாம்.

## அற்பாயுள் தாயார் பலன்

ஜாதகன் பிறந்த அரையிலும், ஜாதகன் பிறந்த இரண்டு வருஷத் திலும், ஐந்து வருஷத்திலும் மாரகத்தை யடையும் தாயார் ஆகியவர்கள் இன்னின்னு ரென்பதும், கங்காதீரத்தி லிருந்து தாயார் கர்மஞ் செய்பவ ரின்னு ரென்பதுமாம்.

## துன்மார்க்க தாயார்

புருஷன் மனமும், புத்திரன் மனமும் கொதிக்கும்படி அடாத காரியஞ் செய்யும் தாயார், மங்கல மிழந்தும் அடாத காரியஞ் செய்யுந் தாயார் ஆகியவர்கள் இன்னின்னு ரென்பதாம்.

## சகோதர பாவகம்

உத்தம சகோதரம், அதிக சகோதரம், சுகம், தனம், தைரியம் முதலியவைகளுடைய சகோதரம், பூரண ஆயுளுள்ள சகோதரம், வீரமுள்ள சகோதரம், மூன்று சகோதரம், உயிர்த் துணையாம் சகோதரம், ஜேஷ்டனுக்குள் அடங்கி நடக்கும் சகோதரம் ஆகியவர்க ளின்னின்னு ரென்பதாம்.

## அவ சகோதரம்

சகோதர மின்றித் தனித்தவர், தமக்கு முன் மாரகத்தை யடையும் சகோதரத்தை யுடையவர், எப்போதும் சகோதர மின்றித் தனித்தவர் ஆகியவர்கள் இன்னின்னு ரென்பதாம்.

## களத்திர பாவகம்

உத்தம குணத்தை யுடைய ஸ்திரீ, ஏகதாரமாகிய ஸ்திரீ, பூரண ஆயுளுள்ள ஸ்திரீ, மங்கிலியத்தோடு பூரண வயதுள்ள ஸ்திரீ, சுக போக பாக்கியமுடைய ஸ்திரீ ஆகியவர்கள் இன்னின்னுர்க்கு கிடைக்கு மென்பதாம்.

## சமகளத்திர பாவகம்

களத்திர மிழந்து மறு களத்திர முண்டா மென்பதும், தூர தேசம் போய் வாழுங் களத்திரம், குடும்பத்தில் நிந்தை, துற்குணம், துற் செய்கை, குடும்பத்தை நாசப்படுத்தும் களத்திரம் ஆகியவர்கள் இன்னின் னுர்க் குண்டாகு மென்பதாம்.

## அவகளத்திர பாவகம்

துற்செய்கையுள்ள ஸ்திரீ, பாவ ஜெனன ஸ்திரீ, நீச ஸ்திரீ, விருத்தை, நொண்டி, குருடு ஆகிய குரூப ஸ்திரீகள், நித்திய தரித்திர ஸ்திரீ ஆகியவர்கள் இன்னின்னுர்க்குண்டு மென்பதும், ஏழு ஸ்திரீ விவாகஞ் செய்தும்; தளர்ந்த காலத்தில் புத்திரனுல் பணிவிடை செய்யப் படுபவர்கள் இன்னின்னு ரென்பதுமாம். அன்றியும், புருஷனைக் கொல்வதற்கு ஏதுவு செய்யும் ஸ்திரீயை யுடையவர் இன்னின்னு ரென்பதுமாம்.

## களத்திர மாரகம்

அவரவர்கள் களத்திரம் இன்னின்ன காலத்தில் மாரக மடைவார்க ளென்பதாம்.

## புத்திர பாவகம்

விசேட புத்திரர்கள், யோக புத்திரர்கள், ஏக புத்திரர்கள், கல்வியும் இராஜஸ்ரீகமுடைய புத்திரர்கள் இன்னின்னூர்க்குண்டா மென்பதாம்

## மத்திம புத்திர பாவகம்

அறிவிலி புத்திரன் கர்மம் செய்தல், ஏழு பெண் பிறந்து அதன் மேல் ஒரு ஆண் புத்திர னுண்டாதல், விழலுக் கொப்பாகிய புத்திர னுண்டாதல், அனேக புத்திரர்க ளிருந்தும் கருமத்திற்கொரு புத்திர னுண்டாதல் ஆகியவை இன்னின்னூர்க் கென்பதாம்.

## சுவிகார புத்திர பாவகம்

தத்தாக வேறொருவருடைய பிள்ளையை யெடுத்தல், மகள். பிள்ளையை யெடுத்தல் ஆகியவை இன்னின்னூர்க் கென்பதாம்.

## நபுத்திர ஜாதக பாவகம்

ஆயுள் முழுவதும் புத்திர னில்லாமை இன்னின்னூர்க் கென்பதாம்,

## த்வேஷ புத்திர பாவகம்

பிதாவை வருத்தப்படுத்தி தூஷிக்கும் புத்திரன், நாசகால புத்திரன் கண்ணு, மூக்கு, வாய் இவை யில்லாக் குரூபியான புத்திரன் ஆகியவர்கள் இன்னின்னூர்க் குண்டா மென்பதாம்.

## புத்திர மாரக பாவகம்

புத்திரர்கள் பிறந்தும் நிலைத்திராமல் மாரக மடைந்து சந்ததி யில்லா திருத்தல் இன்னூர்க் கென்பதாம்,

## யோக பாவகம்

இராஜ யோகங்கள், பிரபல பாக்கிய யோகங்கள், கன்பாக்கிய யோகங்கள், தனபாக்கிய யோகங்கள், பிரபுத்வ யோகங்கள், விற்பன்ன யோகங்கள், சோதிட விற்பன்ன யோகங்கள், பிரபல விற்பன்ன யோகங்கள், சம விற்பன்ன யோகங்கள், யோக்யதா யோகங்கள், அதிகார யோகங்கள், வாகனுதிகார யோகங்கள், சமபாக்கிய யோகங்கள், கிரக பாக்கிய யோகங்கள், தியாக யோகங்கள், பிரபல பூபாக்கிய யோகங்கள், சுகானுபவ யோகங்களாகியவை யின்னின்னுர்க் குண்டா மென்பதாம்.

## அவ யோகம்

தாய் பசித்திருக்கத் தான் பொசிக்கும் தரித்திரர்கள், குட்டிச் சுவரி விருந்து ஆயுள் பரியந்தங் காலந் தள்ளுபவர்கள், சாவடி சத்திர மலேபவர்கள், சட்டி யெடுத்து வீடுகள்தோறு மலேபவர்கள், வேலே கிடைத்தாலும் கூலி கிடைக்காதவர்கள், வீணுக் குழைப்பவர்கள், பரத்தையற்குப் பொருளேக் கொடுத்துவிட் டலேபவர்கள், பந்துக்களாற் சுகம் பெறுபவர்கள், பாவஜென்மத்தை யுடையவர்கள் ஆகியவர்கள் இன்னின்ன ரென்பதாம்.

## ஆயுட் பாவகம்

ஜெனன கால நிச்சயம், இலக்கின ஸ்புடம், ஜெனன நாளின் செலவு, தசவர்க்க ஸ்புட விதி, உடல் மகா திசை விதி, திசை வரிசை விவரம், மகா திசையின் புத்தி விவரணம், உயிர்த் திசையின் விதி, உயிர்த் திசா புத்தி விவரணம், இரு திசை கலந்து வருங்கால் நேரிடு மார்க விவரணங்கள், காலச் சக்கர திசைகள், அட்ட வர்க்கங்கள், மாதுர், பிதுர், சகோதரம், களத்திரம், புத்திரன் முதலியோர் மாரக விதி, அரணம், விரணம் நீக்கும் விவரம், எழுவகைத் தோற்றங்கள், தசவர்க்க மடைக்கும் விவரம், தேவாங்கிஷம் 60-ம் எடுக்கும் விவரம், துவாதசாம்சச் சக்கரத்தில் முதலாவது இராசிச் சக்கர விவரம், 2-வது ஓரைச் சக்கரம், 3-வது கடிகைச் சக்கரம், 4-வது ஆரூடச் சக்கரம், 5-வது நட்சத்திரச் சக்கரம், 6-வது காரகச் சக்கரம், 7-வது ஆதரிசச் சக்கரம், 8-வது ஆயுர் பாகச் சக்கரம், 9-வது திரேக்காணச் சக்கரம், 10-வது அங்கிஷச் சக்கரம், 11-வது நவாங்கிஷச் சக்கரம், 12-வது பாபச் சக்கரம் ஆகிய விதிகளேக் கூறுவதுமாம்;

மங்கலப் பொருத்தம், தினப் பொருத்தம், கணப் பொருத்தம், கேந்திரப் பொருத்தம், ஸ்திரீ தீர்க்கப் பொருத்தம், யோனிப்பொருத்தம், இராசிப் பொருத்தம், இராசி நாயகர்ப் பொருத்தம், வசியப் பொருத்தம், ரச்சுப் பொருத்தம், வேதப் பொருத்தம், மரப் பொருத்தம், புட்ப பொருத்தம், ஆயுட் பொருத்தம், திசை, புத்தி வலுச் சிலவு விவரம் ஆகியவைகளைக் கூறுவதுமாம்.

## முதற் பாவகம்

யோகம், யோக்ய தாம்சை, கல்வி, புகழ், வாய்மை, தர்ம குணம், சற்குணம், பாக்ய சுகம், தருமம், அழகு, கல்விச் செல்வம், கலை ஞான தீரம், கவிதா தீரம், வாகட வித்தை, தெய்வ பக்தி, பிரபுத்வ யோகம், அன்னிய தேச வாச சுகம், இரக்ஷிக்குந் தன்மை, வீரத்துவம், புண்ணியம், ஆசார முடைமை, வைணவ பக்தி, சுதேச வாசம், அன்னிய தேச வாசம், அயோக்கிய தாம்சை, பூரண ஆயுள் ஆகிய இவை இன்னின்னார் குண்டா மென்பதாம்.

## இரண்டாம் பாவகம்

பிரபல தனம், இராஜரீகம், மிகுந்த தர்மம், வாக்கு வளம், சோதிட வித்தை, தமிழ் வித்தை, தவம், ஞான நூலுக் காசரியத்துவம், கணித வல்லபம், விநோத வித்தை, சம்பிரதாய வித்தை, வாக்கு ஊனம், துற்வசனம், நேத்திர ஊனம், தங்கம், வெள்ளி, இலை, சட்டி முதலிய பாத்திரங்களி லுண்ணல், மிடறு மயிர், பல்லூனம், செவி நோய், உண்ணும் சுவைப் பிரிவுகள், இரணகளத்தில் மாரக மாதல் ஆகியவை இன்னின்னார்க் குண்டா மென்பதாம்.

## மூன்றும் பாவகம்

சுக சகோதரம், அனேக ரிருத்தல், எத்தனை சகோதர மிருந்தாலும் மாரக மடைதல், முன்னும் பின்னுஞ் சகோதர மில்லாதிருத்தல், மூன்றி லொரு சகோதர நிலைத்தல், பாப வுருவமே சகோதரமாக வருதல், ஆகியவை யின்னின்னார்க் கென்பதும், பொன்னுபரணமும், முத்து நவரத்தினமு மணிபவர்; ஆபரண மிருந்தும் அணிய விதி யில்லாதவர், வீரிய முடையவர், புண்ணியமுங் கண்ணியமு முடையவர், அச்ச முள்ளவர், பரத்தையர் பிரியமுள்ளவர், அண்டின பேரை யாதரிப்பவர், தர்மவான், அடிமையாள் மிகுதி யுடையவர் ஆகியவர்கள் இன்னின்ன ரொன்பதுமாம்.

## நான்காம் பாவகம்

பூரண வயது, மத்திம வயது, துற்குணம் ஆகியவைகளுடைய மாதுர், பசுமாடுகள் அதிகமாய் பால் கொடுக்கும் யோகமுள்ளவர், பல மனைகளுள்ளவர், வித்துவத்துவம், கணக்கில்லாத பூஸ்திதி ஏவலாட்கள் ஆகியவைகளுடையவர் சத்திரம், மடாலயங்கள் ஆகியவைகளில் அலைபவர், கன்று, காலி, பசு முதலியவை விர்த்தியுடையவர், பால் விர்த்தி யில்லாதவர்கள், அன்னிய மனையிற்போய் சுகம் பெறுவர், அயலார் சுகத்தைக் கண்டு பொருமை கொள்பவர்கள் ஆகியவர்கள் இன்னின்னு ரென்பதாம்.

## ஐந்தாம் பாவகம்

சுப்பிரமணியக் கடவுளை தியானிப்பவர், தெய்வமே யில்லை யென் பவர், அந்திய காலத்தில் புத்திரரைப் பெறுபவர், புத்திர பௌத்திரர்களை யுடையவர், 6-7 புத்திரர்கள் நிலைக்கப் பெற்றவர், சுகபுத்திரர்களை யுடையவர், அதிக புத்திரர்களை யுடையவர், யௌவன காலத்தில் புத்திரனைப் பெறுபவர், மலடர்கள், புத்திரருண்டாகியும் நிலைக்கப் பெருதவர்கள், பூரண வயதுடைய பிதுரை யுடையவர், மாதுர் பிதுர் இருவரும் ஏககாலத்தில் மாரகத்தை யடையும் யோகத்தை யுடையவர், மாதுர் பிதுர் கருமம் செய்யாமல் அயல் தேசம் போபவர்கள், ராஜரீகனு யிருந்து தன் மகனுக்குச் செல்வ பாக்கியங்களைக் கொடுத்து மாரக மடைபவர், யானை, குதிரை, சிவிகை, பூமி, அடிமை யாட்கள், தெய்வ பக்தி முதலியவைகளை யுடையவர்கள் ஆகியவர்கள் இன்னின்னு ரென்பதாம்.

## ஆரும் பாவகம்

முடிவு நாள் வரையில் பாதகனுய்ப் பொருளை யழித்து தான் மாரக மான பின் கடன் தீரும் யோகத்தை யுடையவர், மார்பு நோய் புண்கள், தொந்த மேக ரோக வியாதி, சுரம் உதிர நோய், அம்மை முதலியவை களில் மாரகமாகிறவர்கள், திட சரீர முடையவர்கள் நோயில்லா யோக முடையவர், காராக்கிரக முடையவர், பகையை வெல்பவர், ரொண முள்ளவர் ஆகியவர்கள் இன்னின்னு ரென்பதாம்.

## ஏழாம் பாவகம்

1-3-4 தாரமுடையவர்கள், இத்தனை தாரமுடையவர்கள், இன்ன காலத்தில் கல்யாண முடிக்கப் பெறுபவர், தங்கம் பொன் வியாபாரஞ் செய்பவர், புலால் விற்பவர், ஆகியவர்கள் இன்னின்னு ரென்பதாம்.

## எட்டாம் பாவகம்

திருடர்கள் பூரண வயதுடையவர்கள், காயத்தினலும், சூட்டினலும், பிளவை நோயினலும், அச்சத்தினனும் மாரக மடைபவர்கள் இன்னின்ன ரென்பதும், பிதுர், மாதுர், சகோதரம், களத்திரம், புத்திரன் முதலியோர் மாரகமாகும். விதி விவாகமாகுங் காலம் ஆகியவை கிரக ஸ்புட ரீதியாய் எடுக்கும் விதி யின்னின்ன தென்பதுமாம்.

## ஒன்பதாம் பாவகம்

பாக்கிய யோகம், பாவ ஜெனனம், ஆடை யன்ன மில்லா தலைதல், சற்குருவை யடுத்து முத்தி பெறுதல், குருத்துரோகம், பிதுர்த் துவேஷம், வித்தையும் பக்தியுள்ள மனைவி, பாக்கிய யோகங்கள், பிதுர் மாரகம் ஆகியவைகள் இன்னின்னர்க் குண்டா மென்பதாம்.

## பத்தாம் பாவகம்

சந்நியாசியா யிருந்து உண்மை யறிபவர்கள், சைவ சித்தாந்தி யாகிற வர்கள், மகா தீர்த்த மாடுபவர்கள், யாகாதி கிர்த்தியம் செய்பவர்கள், சிவனடியார்கள், உத்யோகம், பூமி, யோக முள்ளவர்கள், அன்பில்லார், மாதுர், பிதுர், களத்திரம், சகோதரம், புத்திரன் முதலியவர்களுக்கு கர்மஞ் செய்பவர்கள் ஆகியவர்கள் இன்னின்ன ரென்பதாம்.

## பதினெரும் பாவகம்

வாகனம், கல்வி, பாக்கியம், தர்மம், சத்தியம், லாபம், மோக்ஷம், புதை பொருளிச்சை முதலியவற்றை யுடையவர்கள் நட்ட மில்லாமல் யோக முள்ள தமையனை யுடையவர்கள் விதியில்லாமல் மார்க்க மற்று அலைபவர், பரத்தையர்களுக்கு பொருளழித்து வருத்தப்படுபவர், தொட்ட காரியங்க ளெல்லாம் பலித மில்லாதவர், யாவரையும் மனம் வெறுக்கப் பேசுபவர், நற்செய்கை யில்லாதவர், நரகர்க்களுக்குக் குருக்களாகு பவர்கள், சூதாடுபவர்கள், வீணர், தமையனைச் சதாகாலமுந் துன்பஞ் செய்பவர்கள் ஆகியவர்கள் இன்னின்ன ரென்பதாம்.

## பனிரெண்டாம் பாவகம்

பூமி, பொருள், தந்தை முதலியவர்களை யிழந்து அலைபவர்கள், புத்திர சம்பத்து, ராஜநீகம், தனம், சிவயோகம், பூரணபுள் தர்ம முதலியவைகளை

யுடையவர்கள், பரதேசியாய்த் திரிபவர்கள், தலைவனை யிழந்து செயலற்று அலைபவர், தாய்க்கு நன்மை செய்யாத தீயர்: அருமையில்லாதவர்கள், சிலநாள் குறைந்து போபவர்கள் ஆகியவர்கள் இன்னின்னாரென்பதாம்.

இன்னின்ன விஷயங்கள் இவ்வளவு தெளிவாயும், பூரண ஆதார பலத்துடனும், ஒவ்வொன்றிற்கும் தனித்தனி உதாரண ராசிச் சக்கரத்துடனும் அடங்கிய கிரந்தம் இதுவரையில் தமிழில் வெளிப்பட்டிருப்பதாய்த் தோற்றப்படவில்லை. "கடுகைத் துளைத்தேழு கடலைப் புகட்டினது போல்" அந்த பெரு நூற்களை யிவ்வளவு சங்கிரகமாகவுங் கூடிய வரையில் தேடிப் பிடித்து ஆடியைப்போல மிகவுந் தெளிவாகவுஞ் செய்யப்பட்டிருக்கின்றது. இதற்காக எடுக்கப்பட்ட தேக சிரமமும், திரவிய விரயமும் எத்துணைத் தென்பது இந்நூலை வாசிக்கும் ஒவ்வொரு நுண்ணறிவாளர்களும் பிற ரெடுத்துரைக்காமலே தாம் தாமே தெரிந்து கொள்ளக் கூடுமென்பது உலகறிந்த விஷயம், இவ்வளவு விஷயங்க ளடங்கிய அருமையாகிய இக் கிரந்தம் ஒவ்வொருவரிடத்தும் கட்டாயம் இருக்கற்பாலது. ஏனெனில் ஒரு கெடுதி சம்பவிக்கு முன் அதை முற்றிலும் நிவர்த்தித்துக் கொள்ளக் கூடா விட்டாலும் ஒருவாறு கூடிய வரையில் சாக்கிரதையாயிருக்க ஒரு தூண்டுகோல் போலாம். ஜாதகமாவது என்னேவெனில், ஒருவர் நடந்தொழுக வேண்டிய ஒழுங்கைக் காண்பிக்கும் படமேயாம். ஆகையால் ஷை ஜாதகத்தின் விதி முறைகளை இந்நூல் மிகவும் விரிவாகவும், தெளிவாகவும் எடுத்துக் காட்டுமாகையால் உற்ற சமயத்தில் ஊன்றுகோல்போல் நின்று அருகி லிருந்து அறிவைப் புகட்டும் ஒரு மந்திரியைப்போல் இகபரத்திற்குச் சாதகமாகிய காரியங்களில் நற் புத்தியையும், தந்திரோபாயங்களையும், உற்சாகத்தையும் இந் நூல் தன்னைக் கைக் கொண்டு ஆதரிக்கும் ஒவ்வொருவருக்கு முண்டுபண்ணி யுதவி புரியும். ஆகையால் இதனாலுண்டாகும் பிரயோசனங்கள் பல. இதனைக் கைக்கொண்டு ஆதரித்து அனுபவித்து வருபவர்களே தெரிந்து கொள்ளக் கூடுமாகையால் அவை யெல்லாவற்றையும் இங்கு எழுதுவது அனுவசியம்.

எனதருமைத் தந்தையாகிய மகா கனம் பொருந்திய ஜோதிட சித்தாந்தி - வீரப்பிள்ளை யவர்களின் மாணாக்கரும், எனது ஆசிரியரும் மாமனுருமாகிய கா. இராமசாமிப் பிள்ளை ஜோதிட சித்தாந்தி யவர்கள் செய்த மூல பாடத்திலுள்ள யாப்புப் பிழை முதலியவைகளைக் களைந்து சொன்னயம், பொருள்நயம் பெறத் திருத்திக் கொடுத்தவரும், மேற்படி

கிரந்த கர்த்தா அவர்களுக்கு அன்னியோன்ய சிநேகிதருமாகிய வித்வ சேகரர் - களம் வீரப்ப செட்டியா ரவர்களுக்கும்,

இந் நூலினை அச்சிட முயற்சி செய்தவரும், இந் நூலுக்கு வேண்டிய சில முக்கிய விஷயங்களை பார்வி, இந்துஸ்தானி முதலிய ஜோதிட நூற்களிலிருந்து எடுத்துதவினரும், எனது பால்ய சிநேகிதரும், யூநானி வைத்திய தாதுவிர்த்தி போதினி முதலிய பல யூநானி வைத்திய சாஸ்திர கிரந்த கர்த்தாவுமாகிய மகா கனம் பொருந்திய அக்கீம்-பா. முகம்மது அப்துல்லா சாயபு அவர்களுக்கும்,

இதனை அச்சிடப் பொருளுதவியும், மற்றும் பற்பல சகாயமுஞ் செய்தவருமாகிய மகா கனம் செருக்கூர் - கோட்டைய நாயுடு அவர்களுக்கும், நான் எனது இருதய பூர்வமாய் நன்றி யறிந்தவனு யிருக்கிறேன்.

இந் நூலிற்குச் 'சுகர் நாடி' யென்னும் ஜோதிட சிகாமணி யெனப் பெயர் கூறியது யாது காரணம்பற்றி யெனில், இஃது சுக்கிர நாடி, சுப்பிரமண்யம், பன்னீராயிரம், பீரங்கித் திரட்டு முதலிய ஜோதிடப் பெரு நூல்களின் முக்கியாம்சங்களையே எடுத்துச் சொன்ன போதிலும், பெரும் பாலும் சுக்கிர நாடி கிரந்த முக்கியாம்ச சங்கிரக மானபடியால் மிகுதி பற்றி சுக்கிர நாடி யென்னும், ஜோதிட சிகாமணி, ஜோதிட நூல்களுக் கெல்லாம் சிரோரத்தினம் போன்ற நூல் என அருத்தமாவதுமேயாம்.

இந் நூலானது தன்னை மிக்க சிரத்தையோடும், உண்மையான மன தோடும் விரும்பிக் கைக்கொண்டு, அலட்சியஞ் செய்யாமல் ஆதியோ டந்தமாய் ஆராய்ச்சி செய்யும் ஒவ்வொருவருக்கும் இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலமாகிய முக்காலங்களையும் பகற்காலத்தில் காக்ஷிப் பொருள் யாவற்றும் கண்ணிற்குப் புலப்படுவது போல விளக்கிக் காட்டும்.

குடும்பமாகிய பிதுர், மாதுர், பாலர், சகோதரம், மனைவி ஆகியவர் களின் யோகாவயோகங்களையும், குணுகுணங்களையும் இந்நூல் எடுத்துக் காண்பிப்பதால் இது ஒவ்வொரு குடும்பத்திலும் இருக்க வேண்டியது மிகவும் அவசியம். ஆகையால் இந்நூலிற் சொல்லப்பட்டிருக்கிற ஒவ்வொரு பாவகங்களையும், விதிகளையும் ஆதியோடந்தமாய்க் கவனித்து முறையாக வாசித்துத் தத்தம் புத்தியில் அவகாசப்படுத்தித் தங்கள் தங்கள் ஜாதக முதலியவைகளின் பலாபலன்களைக் கண்டு தெரிந்து முறையே இகபர சாதக காரியங்களை நிறைவேற்றி இனிது வாழ்வார்களாக.

## அவையடக்கம்

சீர்பெற்ற ஜோதிடர்கள் கவியிலக்கண மகிமை
    தேர்ந்தநற்புலவ ரென்னுஞ்
செய்ய தினகரன்முன்னொரு மின்மினியி னொளியெனத்
    திறமையறியாத சிறியன்
பேர்பெற்ற சுகர்காதி ஜோதிட சிகாமணிப்
    பெயர்கொளின்னூற் குறைதனைப்
பேதையாகிய வரிஞ னெழுதினே னிதிலுள்ள
    பிழையகற்றிடுவர் பெரியோர்
பார்மேவு மறிவுடைய ஞானியர்கள் கலைவலோர்
    பாவணர் சோதிடர்களும்
பண்புதைய யோடமென முற்றுமிவன் மீதுநற்
    பக்ஷமறவா திருக்க
நேர்பெற்ற ராமனடி யும்மெனது நாவதனி
    னின்றுவிளையாடு பவளும்
நீங்கா திருந்தருட் டந்திந்த நூற்குமா
    நிலைமைதந் தாள்க நிதமே.

முற்றிற்று.

# சிறப்புப்பாயிரம்

## தஞ்சாவூர் ஜில்லா, மேகளத்தூர், வித்வ சேகரர்

## *வீரப்ப செட்டியாரவர்களியற்றியது*

### ஆசிரியப்பா

*திங்கண்வளைந்துவிண் கங்கைமுடியளவி*
*மங்குன்மிலைந்தொரு சங்கரனிகரிய*
*திரிசிரகிரியி னொருசிறைவிரியுந்*
*தண்டாமரைமலர வண்டாரோடையின்*
*முழுநீர்நீந்திக் கழுநீர்மாந்திக்*
*கவையடிக்கவரி துவையடித்துளக்கலின்*
*வெருவியுகண்டெழு பருவியற்செஞ்சேல்*
*அள்ளற்பள்ளத் தகளீரம்பண்ணையின்*
*வள்ளக்கமல மணமலிகுவளை*
*களைதெறுமுழத்தியர் வளைதெறக்கைநெரித்*
*தழுநரிற்புகுந்துதங் கொழுநரைத்தழுவவக்*
*கள்ளுண்டயர்ந்து தள்ளுண்டநிலையினர்*
*பறித்தநாறெறிந்து வெறித்தனரோடி*
*மலைக்கெதிரிட்ட குலைக்கதிர்ச்சூட்டிடைத்*
*தாவினரேறக் காவிடைமேய்ந்த*
*பசுநிரைகன்றொடு முசுநிரைக்கணம்வெறிஇ*
*அறுங்கோடேறுபு பெருங்காடேறப்*
*பாய்ந்துமைம்முகிலுட றேய்ந்துகிழித்தாங்*
*கிந்துமண்டலத்துக் கொந்தளித்தெழுந்து*
*குமுதநண்புறுமத னமுதங்குதட்டி*
*யுழன்றுகுழன்று சுழன்றுகழன்று*
*நளிர்மீனென்னவிண் மிளிர்மீன்குலப்பணை*
*குதர்த்துச்சிதர்த்து மதர்த்துநின்றுதிர்த்து*

மேற்போய்வானப் பாற்பாய்தங்கையை
இருகரையலேயப் பெருகுநீர்க்கலக்கியுட்
பாந்தியுநீந்தியு மாந்தியும்வாந்திசெய்
தெழுந்துமேற்போகித் தொழுந்தகைத்தருவின்
பொதும்பரின்மலர்த்தேன் றதும்புறப்பாய்ந்து
சுரும்பினம்விரும்பின வரும்பினமுகுத்தாங்
கெண்டினவண்டின வண்டினமண்டின
பொம்மெனவெழும்ப வம்மலர்ச்சினேபல
முறித்துச்செறித்துக் கறித்துக்கொறித்தாண்
டண்டமுகட்டினே விண்டறக்கீண்டு
திறந்தொடுங்கலிலாப் புறந்தொடுமுந்நீர்
சுறவொடும்விளையாட் டுறநெடிதுநீஇயிவன்
மீண்டளிமருங்குழல் பூண்டளிகருங்குழல்
அரும்பின்முறுவற் கரும்பின்மொழியினர்
சுணங்கமிழ்ந்தொளிருஞ் சுணங்கமிழ்வனமுலே
மலேக்கனநின்றிழி யலேக்களபச்செங்
குங்குமவோடையிற் றங்குமக்குளிரிற்
சோகமும்வெருளும் போகநின்றுலவும்
வீமநகரினன் காமனிகரினன்
முல்லேப்புலத்தவர் தொல்லேக்குலத்தவன்
காத்தபெருமாள் கழலினேமறவாக்
காத்தபெருமாள் கடுந்தவத்துதித்தோன்
வானுட்சிகொண்ட வட்டமீனனேய
மீனுட்சிதிருமணி மெல்வயிற்றுதித்தோன்
சீரகநிவந்த வேரகமுவந்த
வாசன்வீரப்ப சோசியனுமத்
திருமானுக்கற் கொருமானுக்கன்
அன்றியுமவனுக் கொன்றியமருமான்
ஈதலாலந்த மாதயாநிதிதன்
புத்திரனரிய முத்துவிவேகிக்
குவந்துபெண்கொடுத்துத் தவந்திகழ்சோதிட

வித்தையுங்கொடுத்த மெய்த்திருவாளன்
வேலைமலைக்கொட மிழ்த்தமெடுத்தாற்றொழுஞ்
சோலைமலைக்குச் சுதந்தரமாமன்
சச்சிதானந்த மெய்ச்சிதாம்பரத்துக்
குறவுபூண்டலகுடல் மயலொருமுப்பகைத்
துறவுபூண்டமைந்த சுதந்தரஞானி
பொன்னினைப்பெண்ணினைப் புவியினைவெறுத்துமற்
றென்னினைப்பெரும விட்டம்வைத்துடையோன்
வரதராசேந்தரன் மாதவமைந்தன்
றுரைசாமிவேட்குச் சொந்தச்சினேகன்
சுப்பிரமணிய உடையாரொருப்பிறந்
துள்ளநட்பாட்சியை யுள்ளவுள்ளுருகுவோன்
பண்ணுச்சாமி பதந்தொழுமாரை
யண்ணுச்சாமிமாற் கருமைச்சினேகிதன்
மங்கிலியத்திரு வளர்கடையக்குடிச்
சங்கிலிமுத்து தணப்பூருமுத்து
இழுக்குதன்மதத்து வழுக்கித்தளர்நடைப்
பொருப்பையூர்வீதித் திருப்பையூராட்சிக்
கரசிரகுபதிமாற் கிரசிதகுன்றம்
தராசுநாக்கென்னநி சந்தெரிந்துரைக்கு
மிராசுநாயக்கற் கிரண்டுகண்ணனையான்
துங்கர்நாயக்கர் றூன்குலத்துதித்த
சிங்கர்நாயக்கர் செல்வச்சினேகன்
விச்சுவகுலத்தி லுச்சனெனத்தச
நூறுமுகன்புக ழாறுமுகம்பெயர்
ஒருவனுக்கிசைந்த திருவருணையன்
ஏகநாயகன்சி ரிறைஞ்சியநிலை
மேகநாயக்கர் விரும்பியமணியனென்
மந்தாப்பிள்ளை மணிமலைநிகர்புயச்
சந்தரப்பிள்ளை சுகிர்தசினேகன்
தன்மரணப்பெருஞ் சற்குணம்படைத்த

தன்மரணத்தையான் சக்குறுந்தன்மைபின்
என்மரணந்தா னிருந்துகாணுமையிச்
சொன்மரணுந்தத் துங்கொளண்டத்தோன்
இராமசாமி யெனும்பெயர்தழைத்த
பராவருசோதிடம் பாவலர்சிங்கம்
அயன்குகன்கும்ப ஞதிமேயார்தொகுத்த
வியன்பெறுங்கணித வேதம்விரித்துப்
பாலியம்வாலிபப் பருவங்கல்வி
வாலியசெல்வம் வண்மைதிண்மை
யாயுட்காலத் தளவைதிசைபுத்தி
போயுட்புகுங்கதிப் புணப்பொடுணர்ப்புத்
துன்னிருபிறவிச் சூழ்ச்சிமாட்சி
பன்னிருதானப் பயன்முதலியாவையும்
துணிதருசொற்பொரு ளெக்கிவிளக்கிச்
கணிதசிகாமணி யெனும்பெயர்காட்டி
தந்தன னுலகிடைத் தவத்தோர்
அந்தணர்புலவ ரனைவரும்பெறவே.

## இதுவுமது

வேறு

செங்கரும்புபோற்கணிதநன் னூலைக்குமாரவேள்செய்தானந்தப்
பைங்கரும்பின்சாறேபோற்சுக்கிரனடிக்கிரந்தம்பகர்ந்தான்வெள்ளி
பொங்கமிகும்பாகாக்கியகத்தியன் றந்தான்வீமபுரத்தோர்கோமான்
எங்கள்மணிராமசாமிக்குரிசில்சருக்கரையாவியற்றினனே.

முன்னருளைப்பெற்றதந்தைகாத்தபெருமாளூரவோன்முதற்றன்வாக்காற்
சொன்னபெயரதிராமசாமியுன்குரவனெடுமாதுலன்வீரப்ப
மன்னனுனக்கிட்டபெயர்சோதிடசித்தாந்திமதியாற்கொண்ட
தென்னபெயரெனினுலகோர்கணிதசிகாமணிநீயேயென்கின்றூரால்.

புலவுநீர்க்கடலுலகிற்கணிதசிகாமணியெனவோர்புதுநூற்கண்டோம்
உலவுமதன்சொற்கனிவுபொருட்செறிவுத்திட்பநுட்பமுய்த்துநோக்கிற்
குலவுமிந்நூர்செயராமசாமிப்பேர்தாங்கியயன்கும்பன்சுங்கன் [மால்
இலகுருவொன்றெடுத்தனரோவிவனேசோதிடக்கலையோஎன்சொல்வே

## இதுவுமது

சதையினிக்குமணியுகக்கும்பணைவீமபுரிராமசாமிசெய்த
விதையினிக்குவலையமுளார்கணிதசிகாமணியென்பாரிதுகேட்டோர்க்குச்
சுதையினிக்குமாபுலவோர்கவியினிக்குமாமுனுளசுகிர்தமான
கதையினிக்குமாவென்னின்மற்றிதன்மதுரப்பதமெவரேகணிக்கவல்லார்.

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

எப்புலவரெக்கணிதரெவர்க்குமேலோய்
இறந்தனையேயெனவருந்தியிருந்தேனிப்பாற்
சொப்பனத்துமழியாநூற்சொரூபனுகிச்
சோதிடசிகாமணிப்பேர்சூடிநீடி
இப்புவனத்தெந்நாளுமிருக்கின்றாய்நீ
யென்றுகண்டபிறகுதுயரெல்லாந்தீர்ந்தேன்
விப்பர்குலமணிவிளக்கேவிமலமேவும்
வீமபுரிராமசாமிக்கோமானே.

திரிசிரபுரம், வரகனகர், இலக்கண உபாத்தியாயர்

## ஆ. கா. பிச்சை யிபுருஹீம் புலவரவர்க ளியற்றியது

### நேரிசையாசிரியப்பா

பெருங்கட லுடீஇய மருங்குடை யுலகத்துப்
பெருமையுஞ் சிறுமையும் புதுமையு மாக்கமு
மாயபல் பொருளு மேயதன் னுண்மை
மருட்கையிற் றெளிக்கு மருட்கை வானவன்
விரா அய்மனம் படுக்கும் பரா அய் தாபதர்
மாறுவழி சென்மார் தேறு பூரியர்
செய்வினை விருப்பொடு வெறுப்பு வையாது
சமநிலைத் தாயின் வியனிலைக் கடவு
ளறிவுப்பயன் பெறுவான் செறீஇய நோக்கத்து
மண்ணென்று தலைஇய வெண்ணெண் பொருண்முத
லெழுமையு முணர்த்தும் விழுமிய பொருளுண்
மாக்களின் கரும நிகழ்ச்சி யாக்கங்
காலங் கண்ணிய மும்மைத் தாதல்
விளக்குபு வதூஉம் வினைமுதல் பலவு
மல்லபிற யாவு மெல்லை காண்மார்
நான்குதலை யிட்ட வறுபான் கலையுட்
சோதிடப் பெயரிய மாதிடத் ததனைக்
கூறியருண் முதனூ லூறுடை நாளு
மிகுதலிற் குறைதலிற் செகுதரு வளிபிற
மாய்வினை தரூஉ நோய்பல பலவு
மறிவுபுறம் போக்கும் வறுமையு மேனவும்
முடைமையிற் சிரிய தடைதரு மறிவினர்
கடைபோக வுணர்தற் கிடையீடு படுதலி
னுனித்துணர் வான்றோர் கனிப்பொடு பெறீஇ

யுச்சிமேற் கொளுஉ மெச்சுபு மகிழப்
பிறந்த ஞான்று சிறந்தமர் காலப்
பகுதிமுதல் குறித்த மிகுதிறத் தெவருந்
தத்தமக் கியன்றது தழீஇ யுத்தமத்தி
னிகழ்கின்றது நிகழ் வதுபிற புகழ்
வெளிமையிற் கொளுஉ விடாகன் றிருப்ப
வோதுநர்க் கினிய சோதிட சிகாமணி
யெனத்தகு பெயர்கொடே வனைத்தொடு மளித்தனன்
குங்குமக் குயவழித் தங்குஞ் சேஎய்க்குத்
தாயமு தளித்தென வாய்பல மடைக்கட்
சூட்டுநெல் லகணிக் கூட்டுணூஉம் புனற்பெருக்
கார்ப்பரு தடைகரை பேர்ப்புறு தாணைச்
சென்னீரோக் கெதிர்ந்து பொன்னியா றொழுகுந்
திரிசிர புரத்தின் விரிசிய வாழ்க்கை
யடுக்கன்முடி விளக்கென வெடுங்குமெண் ணளவையிற்
பொருளினை யளக்கும் பொருணூல் சொன்னூ
லாருடஞ் சோதிட மங்கமனை முதற்பிற
தன்னிகர் போக்கித் துன்னிய வுணர்ச்சியின்
முனிவனென் சிறப்புத் தனிமையிற் பெறத் தகு
நாமமிய லிராம சாமியம் புலவ
லெந்நா லிந்நான் முன்னூ லெனப்படு
நன்னூ லிந்நா லென்னுமந் நூற்குக்
கனியிற் பாலி னினிமைபிரித் தெடுத்தென
கருத்துப் பதப்பொருள் காட்டொடு திருத்து
மின்றியமை யாவுரை யொன்றிவண் டருகெனக்
கலையினவ் வாசான் றலைமா ணுக்கனென்
றமையப் பெற்ற கமைஇய மருகன்
பேரிய லொருங்குண ராரிய முத்தெனுந்

தலைமைப் புலமைகொ ளிலைமையோன் றன்பார்
பன்முறை வேண்டிபு மன்னுமது பெறீஇத்
தன்னையொப் புறுத்தலிற் சென்னை யகவயிற்
கெழீஇய வாழ்க்கை தழீஇய மதிப்பி
னுயுள்வே தத்தின் மேயபதி னெண்மரு
மோருரு வெடுத்தென நேருறாஉந் தவமுற
றபுதரா முகம்ம தபுதுல்லா வென்
றேவரும் புகழு மாவரும் பெயரினன்
வாணிபத் துறையெனு மாணியற் கடலுன்
முளைக்குமிள ஞாயிறெனு விளக்குமதி யின்பினன்
கோட்டைய நாபுடெனக் குலவிய புகழின
னுய விருவரு மச்சிற்
பதித்துவெளிப் படுத்தினர் மதிப்புமிகப் பெறவே.

திரிசிரபுரம் வாசகாகர்

## கு. சோமசுந்தர உபாத்தியாயரவர்கள்

## இயற்றியது

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

கடல்புடைசூழ் புவியதனிற் றிரிகால முணர்ந்திடுவோன்
 கனத்தமாக்க
டிடமுறுநற் கணிதரில்லஞ் சேரலுமன் னோர்மகிழ்ந்து
 செப்பாராகி
லடல்முழுதும் பரிகொடுத்து நிலைகளங் குந்தன்மையறிந்
 தளியாற்றாமே
படர்மதியாற் காலமொரு மூன்றினையுந் தேர்ந்துகொளும்
 பரிசாய்மாதோ.

சோதிடசிகா மணியென் றொருநூலையீன் றளித்தான்
 சோதிடத்தில்
வாதிடவே றொருவரின்றித் தானேநின் றரசுபுரி
 மகிபனெப்பா
வோதிடவென் றூற்புகரும் பொன்னுமலாற் பிறருவமைக்
 குரிமையாகா
மாதிட்வா னுகுமொரு ராமசாமிப் பெயர்கொண்
 மாட்சியோனே.

இப்பெரியோன் புகலிந்நூற் குரைபுனைந்தா னவன்மாட்டே
 யெண்ணிற்றேர்ந்த
செப்பரிய சீடனுமாய் மருகனுமாய்த் தோன்றிவளஞ்
 செறிந்துலாவு
மெய்ப்பெரு நூலேனுமொரு பதிநான்கா முரையிழைக்கு
 மியலோனெம்மோ
டப்பமுதமென நட்டோனரிய முத்தெனுநாம
 னதிவல்லோனே.

இந் நூலாசிரிய ரவர்கள் மருமகனும், சிஷ்யருமாகிய சாமிமலை

## சோதிடம் வீ. ஆரியமுத்து பிள்ளையவர்கள் இயற்றியது

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

என்குரு வென்றரன்புகழுங் குமாரவேள் பொதியமலைக்
  கிருந்தோன்சூரன்
றன்குருவிம் மூவர்சொன்ன நூற்றிரட்டிக் கணிதசிகா
  மணிப்பேர்சாற்றி
நன்குருவ விளக்கெனத்தந்தான் வீமபுரிக் குடைய
  நாதனென்மா
மன்குரு வென்னத்தைமக னிராமசாமிப் பெரும்பேர்
  வனைத்துளானே.

இதுவுமது

முருகனகத் தியன்புக ரிம்மூவர்சொன்ன சோதிடநூன்
  முறையையாரும்
பருகநகத்திடை யெழுத்தின் பான்மைபோற் கணிதசிகா
  மணிப்பாச்சொன்னான்
மருகனகத் தன்புடைய மாணாக்க னென்னவென்னை
  மகிழ்ந்துகைக்கொண்
டருகனகக் கலைபுணர்ந்து மிராமசாமித் திருப்பே
  ரமைந்தகோவே.

இதுவுமது

கனக்கரிய னிருசரணங் கனவிடத்து மறவாதான்
  கணிதநூலுக்
கெனக்கரியந் தனைன்படைத்தா னெனக்கணித சிகாமணிநூ
  வியற்றினொனன்
றனக்கரிய மாமனார்சோ திடநூற் காசிரியன்
  றமிழ்நூலான்றோன்
சினக்கரி யகழிவீம புரிராம சாமிச்சோ திடச்
  சிங்கேறே.

திரிசிரபுரம் பீமநகர்

## சோதிடம் ரா. சோலைமலைப் பிள்ளையவர்கள்

## இயற்றியது

பூமணமாருஞ்சோலைசூழ்வீம
　　புரத்தினன்பொதுவர்தங்குலத்தோன்
புண்ணியவான்காத்தபெருமாளீன்ற
　　புத்திரசிகாமணியெனக்கு
மாமனுங்குருவுமாமணிஞான
　　மணிசிந்தாமணிநபோமணியின்
மணிநவமணியிராமசாமிப்பேர்
　　மகாமணிகண்மணிமதுரத்
தேமண்ணிறைந்தபாக்களாற்கணித
　　சிகாமணியென்றொருபெருநூற்
றிரட்டினனதுதான்சோதிடக்கலைஞர்
　　செல்வமோவவர்மனத்தேனோ
சேமநன்னிதியோவவர்விளைநிலமோ
　　செங்கண்ணோவவர்திருமுகமோ
திரவியமிருப்போவவர்மனைவிளக்கோ
　　சீவனோயாதெனத்தெரியேன்.

---

திரிசிரபுரம் பீமநகர் டிறப்ட்ஸ்மேன்,

## துரைசாமி நாயகரவர்கள் இயற்றியது

மன்னுமெழில் வீமபுரி வாதரா சேந்திரமால்
　　மைந்தனுழிப்
பொன்னுரியற்கடிமை துரைசாமியென்பே ரெனக்கிளமைப்
　　போதேவாய்த்த
வின்னுயிர்நேய னிராமசாமி மஹாகணித நன்னூற்
　　கிறைவன்செய்த
மின்னுமிகழ்கணித சிகாமணியவன்றன் மெய்யுருப்போல்
　　விளங்கிற்றம்மா.

குன்றத்தூர்

## மதுரகவி மாணிக்க முதலியாரவர்கள்

## இயற்றியது

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

பன்னுதமிழ்ப்புலமை மிகுமிராமசாமிப்
பாவலன் செய்சோதிடநூற் கினியபாவின்
நன்னர்நவநீதமெடுத் துதவுமாங்கே
நனிவளஞ்சேர் பீமநகர் நயக்கவந்த
உன்னருசீரார்யமுத்துப் பெரியோனுய்ந்த
வுரைவரைந்தானதற்குவமை யுளதாச்சேடன்
சொன்னபெருந்தோஷத் தானுப்பிளந்து
தொய்யலுறீஇத்தலமேன் மண்சுமக்கின்றானே.

---

திரிசிரபுரம், வாகனேரி

## ம. பொன்னுசாமி பிள்ளையவர்கள்

## இயற்றியது

மாதிரிசிரபுரமிராமசாமிசொன்னகணிதசிகா
மணியைக்கேட்டு
வேதமதிற்சாகைகள்போற்பாகம்வகையிப்படியார்
விரிப்பரிந்த
மேதகுநூலச்சியன்றவுடனெனக்குமொன்றுதர
வேண்டுமென்னப்
போதனும்வந்திவனகரிப்பொருப்பினிடையிருந்துதவம்
புரிகின்றானே.

திரிசிரபுரம் பீமநகர்

## இராசு நாயகரவர்கள்

## இயற்றியது

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

போதிடவன் கலைகளுணர்புலவனிரு வருங்கயிலைப்
பொருப்புட்போத
மாதிடவன் வீமபுரிராமசாமிக் கணித
வல்லோன் சொன்ன
சோதிடசிகாமணி போற்சொன்மினென முன்புசிகைச்
சுடர் கண்டேனென்
றோதிடப்பெற்றதுபோது மென்றகல குகன்மலைவா
யொதுங்கினனே.

---

திரிசிரபுரம் பீமநகர்

## வே. சுப்பிரமணிய வுடையாரவர்கள்

## இயற்றியது

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

பொங்கவரும்பாற்கடலி னமுதையரி திரட்டிமுற்றும்
புலவர்க்கீய்ந்தான்
இங்கவருங்கல்லாத வெவருமுக்காலத் தெளிவாமமுதை
யின்பாய்
நுங்கவருந்தாது கணிதக்கடலைக் கடைந்துசிகாமணி
நூற்றந்தான்
றுங்கவருந் தீபமன்ன ராமசாமிக் கணிதத்
துரைச்சிங்கமே.

சென்னை - இந்து யூனியன் அச்சுக்கூடத்தின் அதிபர்

## பிருங்கி - இராமசாமி முதலியாரவர்கள்

## இயற்றியது

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

நவராசக்கோண்முறையுநாண்முறையுமாண்முறையி
னன்காராய்த
றவராசசங்கரமாமுனியும்வியந்தரிதென்றூன்
றூனன்னூலை
விவராசறுதிசிரம்பத்தமிழ்க்கவியாலியாவருக்கும்
விளக்கினான்பொ
துவராசகுலதீபன்றுரைராமசாமியிளஞ்
சுடரோன்மன்னோ.

---

சென்னை: சோதிடம்

## உருத்திரகோடியா பிள்ளையவர்கள்

## இயற்றியது

திரிகாலங்கண்டறிந்த சித்தர்களுமொருகாலந்
திகைப்புந்தேர்ந்து
புரிகாலமொன்றுமுள வெனக்குறிக்குஞ் சோதிடநூற்
புணர்ப்பையாருந்
தெரிகாலமிவன்கால மென்றெவரும் வியப்பமறை
திறந்துதந்தான்
அரிகாலங்கடுத்தவ னிராமசாமிக்கணித
வரசரேறே.

சென்னை:

## அ. பெ. தம்புசாமி பிள்ளையவர்கள்

## இயற்றியது

தெள்ளுவர்நீர்க்கடலுடுத்தசெகதலத்து முனிவரருஞ்
சித்தராரும்
விள்ளுவர்மற்றெவர்க் கெளிதென்றுரைக்க விரீஇக்கிடந்த
விழுக்கணிதநூலை
வள்ளுவர்புரோகிதர்க்கு மற்றெவர்க்குங் தற்றுரைக்கும்
வண்ணஞ்செய்தான்
றுள்ளுவராற் புனல்வீமபுரிராமசாமி மஹா
சுகிர்தவானே.

சென்னை மாபுஸ்கான்தேவடி யூறனி தாதுவிர்த்திபோதினி எனும்

நூலாசிரியராகிய

## அக்கீம் பா. முகம்மது அப்துல்லா சாயபு அவர்கள்

## இயற்றியது

எல்ஃசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

இரவியாதிநவநலோரிராசிமண்டலத்திலே
இருபதோடுமேழுமானதாரகைக்கணிடையிலே
விரவியோடிமீள்வுறுஞ்சதாகதிப்படர்ச்சியில்
மேவுகாலவரையறைக்கணிதனூல்விரித்தனன்
புரவியோடியிரதமோட்வதினெழும்சராகமேற்
பொங்கியோடிவானகம்புதைக்கும்வீமபுரியுளான்
அரவிநாடகங்குளித்தவண்ணலார்குலத்தினன்
அறமுருக்கொடுதையனுமிராமசாமியறிஞனே.

தஞ்சாவூர் ஜில்லா திருப்பையூர்

## இரகுபதி மளவாராயரவர்கள்

## இயற்றியது

மனவாக்குக்கெட்டாது மண்ணுவிண்ணுந்திசைமுகனும்
மயங்கமுன்னோர்
சொனவாக்கம் படைத்தகன்ற சோதிடவண்பாற்கடலைத்
துருவிமாவிற்
பனவாக்கு நயவமுதைக் கணிதசிகாமணிநாமம்
பரப்பித் தந்தான்
கனவாக்குமுலகேனு மிராமசாமித் தவச்சிங்
காரன்மாதோ.

திரிசிரபுரம் பாலக்கரை யாதவாள் தெருவிலிருக்கும்

## சோதிடம் - முத்தையக் கோனாரவர்கள்

## இயற்றியது

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

மணப்பொருத்தம்பாலர்தன்மைமளப்பருவங்கல்விசெல்வம்
வண்மைதத்தங்
குணப்பொருத்தமாயுணிலைக்குரிப்பனைத்தும்பன்னிரண்டுதானக்
கோளும்
வணப்பொருத்தப்பாக்களினால் வகுத்துரைத்தான்கணிதசிகா
மணிநூலன்பாற்
றணப்பொருத்த ரிடத்துமிலி ராமசாமிப் பெரும்பேர்
தழைத்துளோனே.

மஹாவித்வான் சித்தாந்த ரத்தினுகரம், அரன்வாயல்

## வெங்கடசுப்பு பிள்ளையவர்கள் இயற்றியது

அறுசீர்க்கழி நெடி லாசிரிய விருத்தம்

சொல்வளரு முத்தமிழின் சங்கவொலிச் செய்யுளெங்குஞ்
சுவையரு நாற்
சொல்வளரு முத்தமிழின் சங்கவொலிச் செய்யுளெங்குந்
தோலா வெற்றி
வில்வளருஞ் செங்கைமுடிக் காவலர்க ளொழுக்கமெங்கு
மீய வாவி
வில்வளருஞ் செங்கைமுடிக் காவலர்க ளொழுக்கமெங்கு
மிளிர்சோ ணாட்டுள்,

அந்நாட்டு மங்கைதிருப் பங்கேரு கானனமென்
றறைதற் பாற்று
யந்நாட்டு நகர்நாப்ப ணவண்முலைபோல் வளர்ந்தோங்கு
மசலக் கோயிற்
பைந்நாட்டக் குவளையுருட் சுகந்தகுந்த ளாம்பிகையோர்
பாகர் மார்பிற்
பைந்நாட்டப் பணித்தாயு மானசெல்வர்க் கினியசிராப்
பள்ளி தன்பால்,

காமபுரி போலுமெனப் பற்பலகா மரைக்காட்டுங்
கருணை பூத்த
சோமபுரி போலுமெனக் குளிர்முகசோ மரைக்காட்டுஞ்
சொன்னத் தாலா
மேமபுரி போலுமெனப் பொன்னெடுமா ளிகைகாட்டு
மிணையில் சீரார்
வீமபுரி புரிந்தபெருந் தவப்பயனு யங்கவொளிர்
விளக்க மிச்கோன்,

மாதவனங் கண்ணபிரான் முன்னமவ தரித்ததிரு
மரபென் றோங்கும்
யாதவர்தங் குலத்துவந்தோன் மாராம சாமிப்பே
ரியற்பா வல்லோன்

வேதவழி விரிந்தொளிர்சோ திடமுழுது முணர்ந்தவற்றை
விளங்க யார்க்கும்
ஓதவருள் கொடுதமிழாற் சோதிட சிகாமணியென்
றொருநூ லாக்கி,

திங்களின் முற்பிறையின் வளர்ந்துறக் கிரகநாயகர்பேர்
திகழு மன்னோர்
தங்களர சாட்சியுச்சம் பகைநீசந் தானுதி
பதிக டம்பேர்
இங்களவி லவருதவும் பயனியம்பி னூற்குப்பா
யிரமா வைத்து
மங்களபா வந்தொடங்கிப் பாலாரிட் டத்தினொடு
வரிசை யாக,

ஆயுளுறு பிதுர்மாதுர் துணைவர் களத்திரமைந்த
ரவர்சேர் யோக
மேயவிலக் கினகிரக புடந்தசவர்க் கந்தெளித்து
விளங்கு சீவன்
பாயவுடற் கெய்துதிசா புத்திமிகு காலசக்ரப்
பாங்கு காட்டி
ரேயமுட னட்டவர்க்க நிரியாண காலமிவை
நிகழ்த்திப் பின்னர்,

துவாதசரா சிகளினவக் கிரகநிலை பலாபலங்கள்
சோதித் தோதித்
தவாதவொரு மெய்க்கணித ஞானக்கண் மானிடர்க்குத்
தந்தாங் கீந்தா
னிவாதவர்கண் மணியனையான் புகழுடம்பே போற்சிறக்கு
மிந்நூ லோடிங்
கொவாதபிற சோதிடநூற் கிறைமை பூண்டொளிர்மாண்
புளக்க ணோர்ந்து,

விஞ்சைபல வினைபதியென் றுலகமெலா மதிக்கநனி
விளங்கா நிற்குந்
தஞ்சைவள நகர்க்கணித்தா மேல்வளமென் கிராமத்திற்
றழைந்து வாழ்வோ

னெஞ்சையற நெறிக்காக்கும் வணிகவே ளாண்மரபி
னிலவுஞ் சைவன்
மஞ்சைநிகர் கவிமழைபெய் வீரப்ப செட்டியென
வருபா வாணன்,

ஏட்டுறுபல் காலிகித வழுக்களைந்தி யாப்பியலோ
டியைபி லாத
பாட்டுகளைச் சொன்னயமும் பொருணயமும் பெறத்திருத்திப்
பரிவோ டிந்நீர்
நாட்டுறைசெந் தமிழுணரு மாந்தரெளி துணர்ந்துவப்ப
நல்கப் பாடங்
கேட்டுளவா றிந்நூலிற் றன்குருமா துலன்கருத்தின்
கிளர்ச்சி தோன்ற,

சீரியசோ திடப்புலவர் கருத்தொடுதன் னநுபவமுந்
திகழ்வித் தாழின்
காரியகா ரணங்காட்டுஞ் சோதிடசி காமணியைக்
கருணை யாலே
மாரியைநேர் சற்குணவா னீரகங்கொ ளேரகத்து
வளர்வே ளன்று
ஞாரியமுத்துப் பிள்ளையுறை வரைந்து பதிப்பித்தா
னச்சின் மாதோ.

அஷ்டாவதானம்,

## பூவை-கலியாணசுந்தர முதலியாரவர்கள் இயற்றியது

பதினான்குசீர் விருத்தம்

தேய்த்துணர்த்தண் டலைகளுறுஞ் சிரபுரத்துப் பீமநகர்த்
திலகனென நாளும் வாழ்ந்த
திகழ்கணித வாருடச் சிங்கமிரா மச்சாமி
திரள்வேந்தர் நனிகொண் டாட

வீர்தனனற் சோதிடசி காமணியென் றொருபனுவ
லேய்ந்தபத் தழகு மேவி
யிலங்குறுகற் பனையலங் காரநவ ரசமனைத்து
மேற்றபல பாக்க டம்மா

லேந்துபுக ழிந்நூலி னருமையனு பவித்தெவர்க்கு
மிசைக்குமவன் மருக னான
வெண்ணருஞ்சீர் வாய்ந்தவா ரியமுத்துக் கவிஞனிந்நா
ளிருங்கடனீ ருண்டு விண்ணி

னீந்துமழை யெனச்சந்தக் கவிபொழியும் வீரப்ப
னெனும்புலவர் சிகாம ணிநன்
னேர்மையுடன் புரைதிருத்தித் தரவச்சி லினிதேற்றி
நிலைத்தபுகழ் பெற்றிட் டானால்.

# பொருளடக்கம்

ஜோதிட சிகாமணியின்

# அநுபந்தம்

## 27 - நக்ஷத்திரங்களில் செய்யும் சுப காரியங்கள்

* வேதசாஸ்தி ராப்பியாச விவாகோப நயனமும்
விதைகளை விதைத்தல் கர்ப்பம்
ஆதன யாகங்கள் யாத்திரை செயல்நன்று
அன்னப் பிராசன நாமகரணம்
நூதன பரணங்க ளாடைகளை வாங்குதல்
நுட்பமாய் சித்திர மெழுதல்
சாதனமாய் பொன்னேரு கட்டவு மஸ்வனியில்
சந்தோஷ முண்டாக்குமே.

1. அஸ்வனி நக்ஷத்திரத்தில்: பூ முடித்தல், கர்ப்பாதானம், விவாகம், அன்னப் பிராசனம், நாமகரணம், உபநயனம், குதிரை வாங்க, வேதசாஸ்திராப்பியாசம், நூதன ஆடையாபரணம், வாகனம் வாங்க, பூண, பட்டாபிஷேகம், கிரகாரம்பம், சித்திரம், ரத்தின மிழைத்தல், பொன்னேர் கட்ட, விதைக்க, தெங்கு பலா மா முதலிய பல விருக்ஷங்கள் வைக்க, யாகம் செய்ய, யாத்திரை செய்ய, தேவதா பிரதிஷ்டை, கிரகப் பிரவேசம் முதலியனவும் செய்ய உத்தமம்.

2. பரணியில்: மூலிகையை உபயோகிக்க, ஜலத்தில் படகு முதலாகியவை விட, தீர்த்த யாத்திரையில் திதி முதலானவை செய்ய, யாக சாலையில் அடுப்பிடவும்.

3. கிருத்திகையில்: சுரங்கம் வெட்ட, ஓமாரம்பம் செய்ய, மடப்பள்ளி சமையல் முதலாகியவைகள் செய்ய, விருக்ஷங்கள் வெட்ட, கடன் நீக்க, வாகனாதிகள் விற்கவும் நன்று.

---

* இவ் விருபத்தேழு நக்ஷத்திரங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோர் செய்யுள் உள. அவை யாவையும் முழுமையும் அச்சிட இவ்வேடிடந் தராமையால் முதல் நக்ஷத்திரத்திற்கு மாத்திரம் செய்யுள் வைத்திருக்கின்றது. இப்படியே கண்டு கொள்க.

4. ரோகணியில்: ருது சாந்தி, பூ முடித்தல், சீமந்தம், விஷ்ணு பலி, நாமகரணம், விருந்துண்ணல், உபநயனம், வித்தியாப்பியாசம், ஆலய ஆரம்பம், விவாகம், ஆடையாபரண மணிதல், பட்டாபிஷேகம், பல்லக் கேருதல், கிரஹப் பிரவேசம், கிராமப் பிரவேசம், கும்பாபிஷேகம், யாகம், நவக்கிரக சாந்தி, வியாபார ஆரம்பம், தானியங்களை இருப்பு வைக்க, கிணறு வெட்ட, வாசக்கால் நாட்ட, புத்தகங்கள் பத்திரிகைகள் பிரசுரஞ் செய்யவும்.

5. மிருக சீரிடத்தில்: விவாகம் முதலியனவும், உபநயனம், வித்தியாரம்பம், ஆபரணம் பூணுதல், வாகனம் வாங்க, மனை கோல, கிராமப் பிரவேசம், பொன்னேர் கட்ட, விதைக்க, யாத்திரை செய்யவும்.

6. திருவாதிரையில்: சூளைக்கு நெருப்பு வைக்க, ஆயுத அப்பியாசம், மந்திரம் செபிக்கவும்.

7. புனர்பூசத்தில்: பூ முடித்தல், சீமந்த முதலியனவும், அதிகாரம் பெறுதல், வாஸ்து சாந்தி, கிரஹப் பிரவேசம், யாத்திரை, வியாபார ஆரம்பம், பந்தக்கால், முகூர்த்தம், விவாகம், கோடி வஸ்திரம் தரிக்கவும்.

8. பூசத்தில்: ருது சாந்தி, பூ முடித்தல், சீமந்தம், நாமகரணம், முடிவாங்க, விருந்துண்ண, அன்னப் பிராசனம், வித்தியாரம்பம், சௌளோப நயனம், கர்ணபரணம் பூண, சாஸ்திராப்பியாசம், பசு வாங்க, விவசாயம் செய்ய, யாத்திரை செய்ய, ஆலோசனைசபை கூட, சிம்மாசன மேற, வாஸ்து சாந்தி செய்ய, விரதாரம்பம், குரு உபதேசம், நடனம், கரும்பு நடவும்.

9. ஆயிலியத்தில்: ஜெபம் பூர்த்தி செய்ய, நவக்கிரக சாந்திசெய்ய, ஆயுதம் கொள்ள, கிணற்றில் கல் கட்டிடம் கட்டவும்.

10. மகத்தில்: மந்திர பிரயோகம், கசம் எடுக்கவும்.

11. பூரத்தில்: சித்திர மெழுத, ஆயுதப் பிரயோகம் செய்ய, கிரக பாதையை நிவர்த்தி செய்யவும்.

12. உத்திரத்தில்: கர்ப்பாதானம், பூ முடித்தல், சீமந்த முதலியவும், கிரகப் பிரவேசம், விதைவிதைக்க, தேவதா பிரதிஷ்டையும் செய்யவும்.

13. அஸ்தத்தில்: ருது சாந்தி, கர்ப்பாதன முதலியவும், காது குத்த, வித்தியாரம்பம், சாஸ்திர அப்பியாசம் செய்ய, விதைவிதைக்க, வியாபாரம் ஆரம்பம், பொன்னேர் கட்ட, மந்திரம் ஜெபிக்க, யாத்திரை,

கும்பாபிஷேகம், கிணறு வெட்ட, நந்தவனம் வைக்க, கிரகாரம்பம், ராஜ தரிசனம், கிரகப் பிரவேசமும்.

14. சித்திரையில்: கர்ப்பாதானம், பூ முடித்தல், நாமகரணம் முடி வாங்க, கர்ணாபரணம், வித்தியாரம்பம், உபநயனம், விவாகம், வேத சாஸ்திர ஆரம்பம், வஸ்திராபரணம் கொள்ள, குதிரை வாங்க, தீக்ஷா வைராக்கியங்கொள்ள, நாட்டியம் ஆரம்பிக்க, அவுஷதம் செய்ய, தேவதா பிரதிஷ்டை செய்ய, கிரகாரம்பம், கிரகப் பிரவேசமும்.

15. சுவாதியில்: கர்ப்பாதானம், பூ முடித்தல், நாமகரணம், முடி வாங்க, அன்னப் பிராசனம், வித்தியாரம்பம், ஜோதிடம், வைத்ய சாஸ்திர மாரம்பிக்க, விவாகம், சங்கீதம், வாகனம் வாங்க, விவசாயம், கும்பாபிஷேகம் செய்ய, கிரகப் பிரவேசம், கோடி யுடுக்க, புத்தகங்கள், பத்திரிகைகள் பிரசுரஞ் செய்ய.

16. விசாகத்தில்: விவசாயத்தால் உர்பத்தியாகிய தானியங்கள் அறுக்க, கிணறு, தடாகங்களை சீர்திருத்த.

17. அனுஷத்தில்: ருது சாந்தி முதலியனவும், வித்தியாரம்பம், கோடியுடுத்தல், ஆபரணம் கொள்ள, கிரகப் பிரவேசம், வாசற்கால் வைக்க, தூண் நாட்ட, தானிய மிருப்பு வைக்க, முகூர்த்தக்கால் நட, தேவதா பிரதிஷ்டையும்.

18. கேட்டையில்: ஆபரணம் அழித்துச் செய்ய, சூளைபோட, ராஜ விவகாரந் துவக்க, ஆயுதத்தால் செய்யவேண்டிய வேலைகள் ஆரம்பிக்க, யந்திரம் செய்ய, சேவகாளை வைக்க, கடன் வாங்க, வாகன மாற்றவும்.

19. மூலத்தில்: ருது சாந்தி, பூ முடித்தல், சீமந்தம், பேரை மாற்றி வைக்க, விருந்துண்ண, வித்தியாப்பியாசம், விவாகம், ஆபரணம் தரிக்க, யாக யெக்கிய தீக்ஷாரம்பம் செய்ய, விதை விதைக்க, பல விருக்ஷங்கள் வைக்க, கிணறுவெட்ட, மந்திரம் ஜெபிக்க.

20. பூராடத்தில்: கணிதாரம்பம், கரும்பு நட, முத்து பவழம் வாங்க, பழைய கிணறுகளை சீர்திருத்த, கடன் விமோசனஞ் செய்ய.

21. உத்திராடத்தில்: கர்ப்பாதானம், பூ முடித்தல், வித்தியாப்பியாசம், பட்டாபிஷேகம், கிராமங்களிலும், வீடுகளிலும் சங்கு ஸ்தாபனம் செய்ய.

22. திருவோணத்தில்: ருதுசாந்தி முதலியவும், அன்னப்பிராசனம், காது குத்த, விஷ்ணு கும்பாபிஷேகம், கிரகாரம்பம், ஓம சாந்தி, மந்திராப்பியாசம், பொன்னேர் கட்ட, விதைக்க, தீர்த்த ஸ்நானம்.

23 அவிட்டத்தில்: பூ முடித்தல், நாமகரணம், முடி வாங்க, காது குத்த, விருந்துண்ண, ஆபரணம் பூண, உபநயனம், வித்தியாரம்பம், பட்டாபிஷேகம், வாகனமேறுதல், கிரகப் பிரவேசம், சங்கீதாரம்பம், வியாபாரம் ஆரம்பிக்கவும்.

24. சதயத்தில்: கர்ப்பதானம், பூ முடித்தல், குதிரை வாங்க, வியாபார கணக்கு முடிக்க, பூமி கொள்ள, கிரகம் வாங்க.

25. பூரட்டாதியில்: கபிலை, எத்தம் முதலியன ஸ்தாபிக்க, மந்திரம் ஜெபிக்க, விவகாரம் முடிவு செய்ய.

26. உத்திரட்டாதியில்: ருது சாந்தி முதலியவும், சகல விருட்சம் வைக்க, கோபுர ஆலயாரம்பம், கிரகாரம்பமும்.

27. ரேவதியில்: ருது சாந்தி முதலியவும், விவாகம், சாஸ்திராப்பியாசம், கோடியுடுக்க, ஆபரணம் தரித்தல், ராஜ தரிசனம், விதை விதைக்க, யாத்திரை, கும்பாபிஷேகம் செய்ய உத்தமம்.

## இங்கிலீஷ் மாதாரம்ப கணிதச் சக்காம்

| உ | 31 | 28 | 31 | 30 | 31 | 31 | 31 | 31 | 30 | 31 | 30 | 31 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| தெய்வம் | ஜனவரி | பிட்ரவரி | மார்ச்சு | ஏப்ரல் | மே | ஜூன் | ஜூலை | ஆகஸ்டு | செப்டம் | அக்டோ | நவம்பர் | டிசமபர் |
| 1 | திங்கள் | வியாழம் | வியாழம் | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | சனி | திங்கள் | வியாழ | சனி |
| 2 | செவ்வா | வெள்ளி | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | திங்கள் | வியாழம் | ஞாயிறு | செவ்வா | வெள்ள் | ஞாயிறு |
| 3 | புதன் | சனி | சனி | செவ்வா | வியாழம் | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | திங்கள் |
| 4 | வியாழம் | ஞாயிறு | திங்கள் | வியாழம் | சனி | செவ்வா | வியாழம் | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங் ள் | புதன் |
| 5 | சனி | செவ்வா | செவ்வா | வெவ் ளி | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | வியாழம் | சனி | செவ்வா | வியாழம் |
| 6 | ஞாயிறு | புதன் | புதன் | சனி | திங்கள் | வியாழம் | சனி | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | வெள்ளி |

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 7 | திங்கள் | வியாழம் | வியாழம் | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | சனி | திங்கள் | வியாழம் | சனி |
| 8 | செவ்வா | வெள்ளி | வெள்ளி | செவ்வா | வியாழம் | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | திங்கள் |
| 9 | வியாழம் | சனி | சனி | புதன் | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | செவ்வா | வியாழம் | ஞாயிறு | செவ்வா |
| 10 | வெள்ளி | திங்கள் | திங்கள் | வியாழம் | சனி | செவ்வா | வியாழம் | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | புதன் |
| 11 | சனி | செவ்வா | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | வியாழம் | சனி | செவ்வா | வியாழம் |
| 12 | ஞாயிறு | புதன் | வியாழம் | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | சனி | திங்கள் | வியாழம் | சனி |
| 13 | செவ்வா | வெள்ளி | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | திங்கள் | வியாழம் | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | ஞாயிறு |
| 14 | புதன் | சனி | சனி | செவ்வா | வியாழம் | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | திங்கள் |
| 15 | வியாழம் | ஞாயிறு | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | செவ்வா | வியாழம் | ஞாயிறு | செவ்வா |
| 16 | வெள்ளி | திங்கள் | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | வியாழம் | சனி | செவ்வா | வியாழம் |
| 17 | ஞாயிறு | புதன் | புதன் | சனி | திங்கள் | வியாழம் | சனி | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | வெள்ளி |
| 18 | திங்கள் | வியாழம் | வியாழம் | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | சனி | திங்கள் | வியாழம் | சனி |

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 19 | செவ்வா | வெள்ளி | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | திங்கள் | வியாழம் | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | ஞாயிறு |
| 20 | புதன் | சனி | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | செவ்வா | வியாழம் | ஞாயிறு | செவ்வா |
| 21 | வெள்ளி | திங்கள் | திங்கள் | வியாழம் | சனி | செவ்வா | வியாழம் | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | புதன் |
| 22 | சனி | செவ்வா | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | வியாழம் | சனி | செவ்வா | வியாழம் |
| 23 | ஞாயிறு | புதன் | புதன் | சனி | திங்கள் | வியாழம் | சனி | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | வெள்ளி |
| 24 | திங்கள் | வியாழம் | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | திங்கள் | வியாழம் | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | ஞாயிறு |
| 25 | புதன் | சனி | சனி | செவ்வா | வியாழம் | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | திங்கள் |
| 26 | வியாழம் | ஞாயிறு | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | செவ்வா | வியாழம் | ஞாயிறு | செவ்வா |
| 27 | வெள்ளி | திங்கள் | திங்கள் | வியாழம் | சனி | செவ்வா | வியாழம் | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | புதன் |
| 28 | சனி | செவ்வா | புதன் | சனி | திங்கள் | வியாழம் | சனி | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | வெள்ளி |

முற்றிற்று.

## 213

(இ - ள்.) செவ்வாய் 11-க்குடையவரோடு கூடி 9-ல் நிற்கவும், அவர்களை குரு பார்க்கவும், அல்லது 3-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு சகோதர தோஷமுஞ் சிலது நிலைப்பு முண்டாம்.

| | | செ சந் | |
|---|---|---|---|
| | இராசிச் | சக்காம். | |
| | | | சனி |
| | குரு | | ல |

## 214

(இ - ள்.) இலக்கினாதிபதி கேதுவோடு கூடி 3-ல் நிற்கவும், 3-க்குடையவர் சூரியன், புதன் ஆகிய மூவருங் கூடி கேந்திரமடையவும், 7-ல் சந்திரனிற்கவும், 11-ல் சுக்கிரனிற்கவும், குரு 5-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு விக்கிரகம்போல் பல சகோதரருண்டு; அதினால் ஓர் சகோதரன் தவப்பயனைக் கிடைத்து செல்வ மடைவனும்.

| | சனி கே | | குரு |
|---|---|---|---|
| ல | இராசிச் | சக்கரம். | |
| | | | சந் |
| சு | சூ-பு செ | ரா | |

## 215

(இ - ள்.) 12-1-11-க்குடையவர்களாகிய மூவரும் கூடி 4-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு சகோதரனுண்டாம்.

| | | | |
|---|---|---|---|
| | இராசிச் | சக்காம். | ல |
| | | | |
| | | பு-ச சு | |

[2] குருவும், 3-4-க் குரியவர்களுமாகிய மூவருங் கூடி நிற்கவும், அவர்களை இராகு, செவ்வாய் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு சகோதரருண்டாம்.

| | கே | | ல |
|---|---|---|---|
| | இராசிச் | சக்கரம் | |
| | | | |
| குரு சூ-பு | | ரா | செ |

| | | ல-பு சு | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| குரு செ-ச | சக்கரம். | | |
| | | | |

[3] சர ராசியில் 11-3-க்குடையவர்களும், செவ்வாய் ஆகிய மூவருங் கூடி நிற்கவும், இலக்கினாதிபதியும் 5-க்குடையவருங் கூடி இலக்கினத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு சகோதரருண்டாம்.

## 216

| சு | | | |
|---|---|---|---|
| சூ-பு | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| ல | சனி சந் | குரு | செ |

(இ-ள்.) 3-8-க்குடையவர்களாகிய இருவருங் கூடி 12-ம் இடத்தில் நிற்கவும், குரு 11-ல் அமரவும், 5-க்குரியவர் 10-ல் நிற்கவும், சந்திரனுக்கு 11-க்குடையவரும், சூரியனும் கூடி 3-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு சகோதரருண்டாம்.

## 217

| செ சனி | சூ | | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| சந் | சக்கரம். | | |
| | | | ல குரு |

(இ-ள்.) 3-க்குடையவர் 5-க்குடையவரோடு கூடி 7-ல் நிற்கவும், அவர்களை குரு பார்க்கவும், 5-ம் இடத்தில் 11-க்குடையவர் நிற்கவும், 12-க்குடையவர் 8-லும் நிற்கப்பெற்ற ஜாதகருக்கு விரையஞ் செய்யும் கருத்தையுடைய சகோதரனுண்டாம்.

## 218

| | | | சந் செ |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| பு | | ல | |

(இ-ள்.) 9-ம் இடத்தில் 10-க்குடையவரோடு செவ்வாய் கூடி நிற்கவும், 9-க்குடையவர் 3-ல் நிற்கப்பெற்ற ஜாதகருக்கு உத்தம சகோதரனுண்டாம்.

| | ல | | |
|---|---|---|---|
| செ சூ | இராசிச் | | |
| | சக்கரம் | | சந் |
| | | | |

[2] இலக்கினாதிபதியும், 5-க்குடையவரோடு கூடி 11-ம் இடத்தில் நிற்கவும்; அவர்களை 4-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு உத்தம சகோதரருண்டாம்.




[3] 3-க்குடையவர் 11-ம் இடத்தில் நிற்கவும், 11-க்குடையவர் 3-ல் நிற்கவும், இவர்கள் நட்பாயிருந்து குரு பார்வையும் பெற்ற ஜாதகருக்கு உத்தம சகோதர முண்டாம்.

## 219

(இ - ள்.) முன்கூறிய புண்ணிய ஜாதகத்திற்கு 3-பேர் சகோதர முள்ளவர்களாயுங் கூறியதில் சகோதர வலிமையும், இன்பமும், குணமும், வார்த்தை தவராதவராயும் உடையவர்களாம்.

## 220

### நொண்டிச்சிந்து




(இ - ள்.) 3-4-க்குடையவர்கள் கூடி 4-ல் நிற்கவும், அவர்களை 10-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு இசைந்த போகமுடைய சகோதர ருண்டாம்.




[2] 12-க்குடையவர் 10-ல் நிற்கவும். 10-க்குடையவர் 12-ல் நிற்கவும், 11-க்குடையவர் 4-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு முன் பிறந்தவர் பாப ஜெனனமாம்.




[3] 11-2 க்குடையவர்கள் கூடி உச்சமடைந்து நிற்கப்பெற்ற ஜாதகரின் முன் சகோதரரால் சுத்தியும், புத்தியும், சித்தியும், அடைபவராம்.

[4] 3-க்குடையவர் 10-ல் நிற்கவும், 10-க்குடையவர் 3-ல் நிற்கவும், குரு 2-ல் அமரவும் பெற்ற ஜாதகருக்கு கீழ்ப்பட்ட யோகமுடைய இளைய சகோதர ருண்டாம்.




[5] 4-7-3-க்குடையவர்களாகிய மூவருங் கூடி 9-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு மேல் யோகமுஞ் செல்வம் உடைய இளைய சகோதர ருண்டாம்.




[6] 3-க்குடையவர் 8-ல் நிற்கவும், 3-ம் இடத்திற்கு 10-க்குடையவர் 2-க்குடையவரோடு கூடி நிற்கப் பெற்ற ஜாதகருடைய சொற்படிக் கேட்டுப் பிழைக்கும் இளைய சகோதர ருண்டாம்.




## அவ சகோதரம்

[7] இனி அவ சகோதர பாவகத்தை தேர்ந்த மட்டும் கூறுகின்றனம். அதை அமுதமென பிரியத்தோடு கருத்துட்கொண்டு அதிலுள்ள பிழைகளை திருத்தஞ் செய்து பொருத்துக் கொள்வீராகவும்.

**221**

(இ - ள்.) 3-க்குடையவர் 6-லும் 6-க்குடையவர் 3-லுமாக மாறி நிற்கவும், சனிக்கு 7-ம் இடத்திற் சந்திரன், செவ்வாய், ராகு ஆகிய மூவருங் கூடி நிற்கப் பெற்ற ஜாதகன் ஒருவனேயாகும்.



[2] சனியும் செவ்வாயுங் கூடி 3-ல் நிற்கவும், லக்கினாதிபதி சூரியனோடு கூடி நிற்கவும், அவர்களை பாபர்கள் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகர் ஏகனென்றும் தவறி பிறக்குமாகில் அரிஷ்ட்டப் படுமாம்.

| ரா | | ல | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | செ சனி |
| சு கு | | | |
| | சந் குரு | | கே |

## 222

(இ - ள்.) 8-ம் இடத்தில் 3-12-க்குடையவர்கள் நிற்தவும், சந்திரனுக்கு 6-ல் சனிநிற்கவும், சந்திரனோடு ராகு கூடவும் சுக்கிரன் சனிக்கு 5-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் தவஞ்செய்தபோதினும் சகோதர மில்லையாம்.

| பு | சு செ கு | | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | சந் கே |
| ரா | | | |
| சனி | | | ல |

## 223

(இ - ள்.) 3-க்குடையவர் 6-ல் நிற்கவும் 6-க்குடையவர், லக்கினத்தில் நிற்கவும், 7-ம் இடத்தில் சனி, செவ்வாய் நிற்கவும் பெற்ற ஜாதகர் ஒருவனேயாம்.

| | | | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | ல குரு |
| செ சனி | | | |
| பு | | | |

[2] 5-11-க்குடையவர்களும், செவ்வாய் சனி ஆகிய நால்வருங் கூடி 7-ல் நிற்கவும், 7-க்குடையவர் 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் ஏகனும்.

| | | | |
|---|---|---|---|
| சந் | இராசிச் சக்கரம். | | செ ச சு |
| ல | | | |
| | | | |

[3] 3-க்குடையவருஞ் செவ்வாயுங் கூடி 8-ல் நிற்கவும், சனி 3-ம் இடத்தை பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு சகோதர மில்லையாம். பிறக்கில் மரிப்பனும்.

| | | | ல |
|---|---|---|---|
| சனி | இராசிச் சக்கரம். | | |
| செ கு | | | |
| | | | |

## 224




(இ - ள்.) பாபர்கள் 3-ல் பகை பெற்று நின்று 9-ம் இடத்தை பார்க்கவும் சனிக்கு 4-ம் இடத்தில் செவ்வாய் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு சித்திரத்திலும் சகோதரர் பொருந்தி யிரார்களாம்.




[2] சனி இலக்கினத்தில் நிற்கவும், 5-ம் இடத்தில் செவ்வாய் இராகுவோடு கூடி நிற்கவும், சந்திரன் பலங் குறைந்து நிற்கப் பெற்ற ஜாதகருக்கு சொற்பனத்திலுஞ் சகோதர மில்லையாம்.

## 225




(இ - ள்.) 8-ம் இடத்தில் செவ்வாய், குரு, சுக்கிரன் ஆகிய மூவரும் நிற்கவும், 8-3-க்குடையவர்கள் கூடி 6-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்குச் சகோதரம் பிறந்த போதிலும் அரிஷ்டமாகுமாம்.




[2] வக்கரானுகிய செவ்வாய் 5-ல் நிற்கவும், அதற்கு 7-ல் சந்திரனிற்கவும், 3-ம் இடத்தில் சூரியன், சுக்கிரன், புதன் ஆகிய மூவரும் நிற்கப்பெற்ற ஜாதகருக்கு சொற்பனத்திலும் சகோதர மில்லையாம்.

## 226

(இ - ள்.) இராகு, செவ்வாய், சூரியன் ஆகிய மூவருங் கூடி 2-ல் நிற்கவும், புதன் 3-ம் இடத்தில் நிற்கவும், 8-ம் இடத்திற் கேது நிற்கவும், 12-ம் இடத்தில் சனி நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு சொற்பனத்திலும் சகோதர மில்லையாம்.

| | | சனி | ல |
|---|---|---|---|
| | இராசிச் | | ராகு செ |
| கே | சக்கரம். | | பு |
| | | | |

## 227

(இ - ள்.) சந்திரன் டாபர்களோடு கூடி 3-ல் நிற்கவும், அவர்களை சனியும், இராகுவும் பார்க்கப்பெற்ற ஜாதகருக்குச் சகோதர தோஷமாம்.

| | ல சனி | | ச-சூ செ |
|---|---|---|---|
| கே | இராசிச் | | |
| | சக்கரம். | | ரா |
| | | | |

[2]. இராகு 6-ல் நிற்கவும், செவ்வாய் நீசமடையவும், சந்திரன் சனியோடு கூடி 3-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு சகோதர மில்லையாம். ஆனல், நூறுகோடி தவங்கள் செய்தாலும் நொண்டி, குருடு சகோதரங்களில்லையாம்.

| | | கே | ல |
|---|---|---|---|
| | இராசிச் | | செ |
| | சக்கரம். | | சந் சனி |
| | ரா | | |

## 228

(இ - ள்.) 3-க்குடையவர் 6-ல் நிற்கவும், 9-ம் இடத்தில் செவ்வாய் நிற்கவும், அவரை சனி பார்க்கவும், குரு 3-ம் இடத்தையும், 3-க்குடையவரையும், சகோதரகாரகனையும் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகருக்கு சகோதரம் மேற்கூறிய வண்ணமேயாம்.

| | | | ல |
|---|---|---|---|
| செ | இராசிச் | | |
| குரு | சக்கரம். | | |
| சனி | சூ | | |

## 229




(இ - ள்.) 8-க்குடையவர் 3-ம் இடத்தில் நின்று 3-க்குடையவரை பகைத்து நிற்கப் பெற்ற ஜாதகரின் பின் சகோதரரையும், முன் சகோதரரையும், மாரகமும், பாதகமுஞ் செய்யுமாம்.

## 230




(இ - ள்.) 3-8-க்குடையவர்களாகிய இருவருங் கூடி 12-ல் நிற்கவும், 10-க்குடையவர் 3-ல் நிற்கவும், 8-க்குடையவர் 3-ம் இடத்தைப் பகைத்து பார்க்கவும் பெற்ற ஜாதகரின் உரிமை சகோதரனை மாரகஞ் செய்யுமாம்.

## 231




(இ - ள்.) 3-ம் இடத்தையும், 3-க்குடையவரையும், 3-ம் இடத்திற்கு 6-8-12-க்குடையவர்கள் பகைத்துப் பார்க்கப் பெற்ற ஜாதகருக்கு சகோதர தோஷமாம்.

## 232




(இ - ள்.) 3-ம் இடத்திற்கு 8-க்குடையவர் 3-ல் நட்புபெற்று நிற்கவும், 3-ம் இடத்திற்கு 12-க்குடையவர் இலக்கினத்திற்கு 12-ல் நிற்கவும், 3-க்குடையவர் 8-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகரின் சகோதரரை தோஷஞ் செய்யுமாம்.

## 233




(இ - ள்.) 8-12-க்குடையவரும், ராகுவும் ஆகிய மூவரும் கூடி 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு சகோதர தோஷமாம்.

## 234




(இ - ள்.) 3-க்குடையவர் 2-ல் நிற்கவும், 3-ம் இடத்தை 8-க்குடையவர் பார்க்கவும், ராகு லக்கினத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கும் சகோதர தோஷமாம், தோஷம் செய்யாவிடில் ஜாதக மாரக முண்டாம்.

## 235




(இ - ள்.) சகோதர காரகனாகிய செவ்வாய் பலஹீனப்பட்டு 10-ம் இடத்தில் நிற்கவும், அச் செவ்வாய்க்கு 12-க்குடையவர் லக்கினத்திற்கு 12-ம் இடத்தில் நிற்கவும், 3-க்குடையவர் செவ்வாயோடு கூடி நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு சகோதர தோஷமாம்.

## 236




(இ - ள்.) சந்திரன் 4-ம் இடத்திற் பலங்குறைந்து நிற்கவும், 10-ம் இடத்தில் சனியோடு ராகு கூடி நிற்கவும், செவ்வாயும், புதனும், 11-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகரின் வம்சத்துக்கு ஆபத்து நேரிடுமென்றுங் கூறியது.

## (236 - முதல் 265 - வரையில் வசனமாகக் கூறியது.)

தும்பிக்கை யாழ்வாரின் றிருத்தாள் துதித்து கூறுவோமாக. சகோதர பாவகத்தை தின்னமாகச் செப்பில் மாதா பிதாவுக்கு வேறு பலன் கூறவேண்டுவதில்லையே வெனில் அண்ட பகிரண்டமாகிய அடங்காத வெளியை மண்டலமாகிய 2-ராசிக்குள் கூறுவார்போல ஒன்று முதல் பனிரண்டா யுள்ள ராசிகளுக்கு எவ்விதப் பெயர் இயம்புவதெனில் ராசி ஒன்றுக்கு அநேக நாமமிருக்கினும் முக்கியமா யுள்ள பெயரை ஒவ்வொன்று கூறுவோம். அதாவது: 1. லக்கினம், 2. வாக்கு, 3. சகோதரம், 4. மாதுர், 5. புத்திரன், 6. ரோகம், 7. களத்திரம், 8. ஆயுள், 9. பாக்கியம், 10. கருமம், 11. லாபம், 12. மோக்ஷ வீடு இவைகளை முந்தியும் கூறியுமுளம். அவைகளைக் கூறுமிடங்களில் கூறல் வேண்டும். அதுவல்லாமல் வழிமுறையாக, நான்கா மிடங்கொண்டு, பூரண மாதாவாக கூறுமிடத்து 4-ம் இடத்திற்கு 9-ம் இட ம் ஜாதகற்கு மோக்ஷ ஸ்தான மென்றும், 2-ம் இடம் புத்திர ஸ்தான மென்றும், 4-ம் இடம் களத்திர ஸ்தான மென்றும், 8-ம் இடம் 11-ம் இடமென்றும், 5-ம் இடம் ஆயுள் ஸ்தானமென்றும், 6-ம் இடம் பாக்கிய ஸ்தான மென்றும், 7-ம் இடம் கரும ஸ்தான மென்றும், 11-ம் இடம் குடும்ப ஸ்தான மென்றும், 3-ம் இடம் ரோக ஸ்தானமென்றும், 10-ம் இடம் லக்கின மென்றும், 12-ம் இடம் சகோதர ஸ்தானமென்றும் கணிதவல்லோர் கூறுகின்றனர். இவ் விதி பிரமாணம் யாவும் சிலபாக மொன்றி வாராது. எவ்வித மார்க்கத்திற்கும் இதுவே விதியாகவு நேரிடுமாம். அவர்களின் பல வித ஸ்தானந் தெரிந்து பலன்க ளாராய்ந்து கூறவும், இங்கு இது போற் காரகாதியர் வேருக மாட்டார்கள். யாவருக்கும் பொதுவாய் விளங்குமாம். ஆனதால் கிரகாதிகள் நின்ற வலியின் சிறந்து தந்தை, தாய், பந்துகள், சகோதரர், மாமன், சேஷ்டன், புத்திரன், பௌத்திரர், களத்திரம், லாபம் இவ்வாறு பத்து வகையும், ஆன்மாவும், சரீர உறுப்புகள் முதலிய வெல்லாம் கொடுக்கவும், நீக்கவு முள்ள ஸ்தானத்துக் குரியவர்கள் திசை புத்திபாளரென முத்தொழிலுந் தேரி நவக்கிரகங்களுக்குப் பொருந்திய ஆக்ஷி, யுச்சம், பகை, நீசம், வலி தெரிந்து பொது விதிகளையும், உண்மை விதியாய் சகோதர பாவகத்தில் கூறியிருக்கின்றோம். அதாவது: சேட்ட

ஸ்தானம் லாபமென்றும், கனிஸ்டதானம் மூன்றுமிட மென்றும், அவரவர்கள் லக்கினமே ஆதிமுதல் 12-ஈராக நவக்கிரக வலியும் உரிமையும், திசையும் கருமச் சிலவின் வலியும் பார்த்து வரும் பலா பலன்களைக் கொண்டு முன்னோர்கள் சூரியவண்ணங் தெரிந்து பலா பலன்களை கூறுகின்றனம் கேட்பாயாக.

## 266

(இ - ள்.) சந்திர னின்ற ராசியாதிபதி 3-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகன் ஒருவனேயாம். பிறகு வந்தபோதினும் நிலைமை யில்லையாம்.




## 267 - 268

(இ - ள்.) 3-க்குடையவரும், லக்கினாதி பதியும் ஒருவர் மனையி லொருவர் மாறிநிற்க வும், 12-ம் இடத்தில் செவ்வாய் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு சகோதர தோழமாம்.




## 269

(இ - ள்.) சுக்கிரன் 3-ல் நிற்கவும், அவரை 8-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு சகோதர தோழமாம்.




## 270 - 271

(இ - ள்.) லக்கினாதிபதியுங் குருவுங் கூடி 12-ம் இடத்தில் நிற்கவும், 11-க்குடை யவர் 6-ல் நிற்கவும், அவரோடு சேர்ந்தவர் திசையில் 11-ம் இடத்தி லிருந்தவர் புத்தி யில் இச் சாதகனுடைய சேஷ்டர் கனிஷ்ட ரிருவரும் மாரக மாவராம்.



## 272 - 273 - 274




(இ - ள்.) 11-க்குடையவர் இலக்கினாதிபதி சூரியன் ஆகிய மூவருங் கூடி 6-ல் நிற்கவும், அவர்களை, செவ்வாய், சனி பார்க்கவும் பெற்ற ஜாதகருடைய சகோதரம் 11-க்குடையவர் திசையில் செவ்வாய்க்கு 11-க்குடையவர் புத்தியில், அல்லது 7-ல் இருந்தவன் திசையில் செவ்வாய்க்கு 7-க்குடையவர் புத்தியில் சேஷ்டர், கனிஷ்டரிருவரும் மாரகமாம்.

## 275 - 276 - 277 - 278




(இ - ள்.) 11-ம் இடத்திற்கு 8-ல் 3-க்குடையவர் நிற்கவும், அவரை செவ்வாய் பார்க்கவும் பெற்ற ஜாதகரின் சேஷ்டர் 2-6-8-க்குடையவர் திசையில் 11-க்குடையவர் புத்தியில் மாரகமாம். அப்படி கொல்லாவிடில் ஜாதகனை தப்பாமற் கொல்லுமாம். அதன்றி 11-க்குடையவர் 8-ல் நிற்கவும், அவரை 6-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு 6-க்குடையவர் திசையில் சூரியன் புசிப்பில் சேஷ்டன் மாரகமாம்.

## 279 - 280




(இ - ள்.) சந்திரனுக்கு 11-க்குடையவரை செவ்வாய்க்கு 8-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகரின் சேஷ்டன் செவ்வாய் திசையில் சூரியன் அல்லது 11-க்குடையவர் புசிப்பில் தீர்க்க மாரகமாம்.

## 281 - 282




(இ - ள்.) 11-ம் இடத்திற்கு 12-க்குடையவரோடு செவ்வாய் கூடி நிற்கப்பெற்ற ஜாதகரின் சேஷ்டர் 10-க்குடையவர் திசையில் செவ்வாய் புத்தியில் அல்லது 11-க்குடையவர் புசிப்பில் மாரகமாம்.

## 283 - 284 - 285 - 286

(இ - ள்.) செவ்வாயும், 11-க்குடைய வரும் லக்கினத்தில் நிற்கவும், அவருக்கு 11-ல் கேது நிற்கவும், சூரியன் மூன்றில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு சூரிய திசை இராகு புத்தியில் சேஷ்டன் மாரகமாம். ஜாதகருக்கு தோஷ மில்லையாம்.

| | | | |
|---|---|---|---|
| | கே | | ல செ |
| | இராசிச் | | |
| | சக்கரம். | | சூ |
| | | ரா | |

## 287 - 288 - 289 - 290 - 291 - 292

(இ - ள்.) சேஷ்டர், கனிஷ்டர் பாகத்தில் உண்மையாகக் கூறியிருக்கினும், சாஸ்திர விணயங்களோடு தூக்கி மதித்து கணித வரன்முறைப் பிரகாரம் மாரகங் கூறல் வேண்டுமாம். இக் கணிதங் கற்றவர்களுடைய நாவுக்கன்றி மற்றவர்களுக்கு நுழையாதென்றும் இன்னமும் நெறிதவாராது நின்று ஒப்பற்ற கடவுள் பாதமலரை பக்தி விசுவாசஞ் செய்வார்க்கன்றி மற்றவருக்கு பலிதமில்லை யென்றும், இன்னும் முன்னொன்று பின்னொன்று மூலையிலொன்றாய் வஞ்சகம் பேசும் வன்னெஞ்சர்களுக்கு இன்னால் வாய்ப்பதரிதென்று மேலோர் கூறியிருப்பதால் இந்நூல் தெரிந்துகொள்பவர்களுக்கு நல்லோர் நடையை விசுவாசித்து ஞான மனத்தோடு அந்தகாரமின்றி இச் சோதிட நூலை யாவருக்குங் கூறல் வேண்டுமாம்.

## 293

(இ - ள்.) இலக்கினதிபதி 3-ம் இடத்திற்கு 9-ம் இடத்தில் நிற்கவும், 8-க்குடையவர் பாபியாகிய 3-க்குடையவருடன் கூடி 12-ல் நிற்கவும், செவ்வாய் 3-ம் இடத்திற்கு 8-ல் நிற்கவும், இராகுவோடு 11-க்குடையவர் கூடி 4-ம் இடத்தில் நிற்கவும், 3-ம் இடத்தில் 9-10-க்குடையவர்கள் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு துணைவர் ஒருவனே. மற்ற இருவர்களும் கேது திசை, சூரிய புத்தி, சுக்கிர திசை, செவ்வாய் புசிப்பிலும் மாரக மாவராம்.

| | | | |
|---|---|---|---|
| சு ரா | | | |
| கு பு | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| ல | சந் சனி | குரு | செ கே |

## உத்தம களத்திரம்

### 295 - 296

(இ - ள்.) சுக்கிரனும் 7-க்குடையவரும் சுகமாய் நிற்கவும், அவர்களை சுபர்கள் பார்க்கவும், 2-க்குடையவர் ஆக்ஷி யடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு பழுதில்லாத பூரண களத்திரமாகவும், ஏகதாரமாயும், உத்தமியாயும் கிடைப்பாளாம்.




### 297 - 298

(இ - ள்.) 7-ம் இடத்தில் சுபர்கள் நிற்கவும், சுக்கிரன் சுபரோடு கூடி நிற்கவும்' 7-க்குடையவர் ஆக்ஷி உச்ச மடையவும், அவரை பாபர்கள் நோக்காதிருக்கவும் பெற்ற ஜாதகருக்கு அருந்ததி மலைக்கும்படியான கற்பினை யுடைய ஏக களத்திர முண்டாம்.




### 299

(இ - ள்.) 9-ம் இடத்தில் சுக்கிரன் ஆக்ஷி பெற்று நிற்கவும், அதற்கு 7-க்குடையவர் நட்பில் நிற்கவும், குரு 7-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு ஏகதார மென்றுஞ் சொகுசுள்ள தெனவுங் கூறியது.



## 300

(இ - ள்.) சந்திரனுக்கு 7-ல் சுக்கிரனிற்கப் பெற்ற ஜாதகருக்கு முன் கூறிய வண்ணமே களத்திர முண்டாம்.

| | | | சு |
|---|---|---|---|
| | இராசிச் | சக்கரம். | |
| | | | |
| சந் | | ல | |

## 301 - 302

(இ - ள்.) குரு லக்கினாதிபதி 2-க்குடையவர் ஆகிய மூவரும் ஆக்ஷியில் நிற்கவும், 7-க்குடையவர் உச்ச மடையவும், அவருக்கு 7-ல் சந்திரனிற்கவும், அவரை பாபர் பார்க்கா திருக்கவும் பெற்ற ஜாதகருக்கு ஏகதாரமாயும் பெருத்த வாழ்வு உடையவளாய்க் கிடைப்பாளாம்.

| குரு | | ல சு | பு |
|---|---|---|---|
| | இராசிச் | சக்கரம். | சந் |
| செ | | | |
| | | | |

## 303

(இ - ள்.) 2-க்குடையவர் 7-க்குடையவரோடு கூடி நட்பி லிருக்கப் பெற்ற ஜாதகரின் களத்திரம் மேற்கூறிய வண்ணமேயாம்.

| | | | ல-சு குரு |
|---|---|---|---|
| | இராசிச் | சக்கரம். | |
| | | | |
| | | | |

## 304

(இ - ள்.) சுக்கிரனும், 2-க்குடையவரும், 7-க்குடையவருமாகிய மூவரும் 4-ம் இடத்தில் நிற்கவும், அவர்களை பாபர்கள் பார்க்கா திருக்கவும், குரு 7-ல் நிற்கவும், லக்கினத்திற் சந்திர னிற்கவும் பெற்ற ஜாதகருக்கு ஏகதாரமாம்.

| சு-பு சனி | சூ | செ | குரு |
|---|---|---|---|
| | இராசிச் | சக்கரம். | |
| | | | ரா |
| ல சந் | | | |

## 305 - 306

(இ - ள்.) 2-7-க்குடையவர்கள் கூடி 2-ல் நிற்கவும், அவர்களை சுக்கிரன், புதன் பார்க்கப் பெற்ற ஜாதகருக்கு களத்திரம் நற்குணமும், வேதாந்த விசாரணையில்மனமுவந்தவளாயும், உத்தமியாயும் இருப்பளாம்.

| | | | ல |
|---|---|---|---|
| | இராசிச் | சக்கரம். | சந் குரு |
| சு பு | | | |
| | | | |

## 307 - 308




(இ - ள்.) 7-க்குடையவர் கேந்திர மடையவும், அவரைச் சந்திரன் பார்க்கவும், 2-க்குடையவர் உச்ச மடையவும் பெற்ற ஜாதகருக்கு களத்திரஞ் சிவப்பு நிறமும் புண்ணிய சிந்தனையை நிலை நிறுத்துஞ் செல்வ முடையவளா யிருப்பளாம்.

## 309




(இ - ள்.) 7-க்குடையவர் 5-ல் நிற்க வும், அவரை சுபர்கள் கூடி பார்க்கவும், சுபக்கிரகம் 2-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருடைய களத்திரம் மேற்கூறிய வண் ணமேயாம்.

## 310




(இ - ள்.) சுக்கிரன் தனியாக நிற்க வும், அவரை சுபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகருடைய களத்திரம் ஏகமாய் எங்கும் புகழ் பெற்ற தெனவுங் கூறியது.

## 311 - 312




(இ - ள்.) 2-க்குடையவர் உச்சமடை யவும், அவரை 4-க்குடையவர் பார்க்கவும், 7-க்குடையவர் கூடவும், சுக்கிரன் தனியாக நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு மங்கள கலி யாணகுண சிரோன்மணியாய் வாழும் களத் திரமுண்டாம்.

## 313 - 314 - 315 - 316 - 317




(இ - ள்.) செவ்வாய் ஆக்ஷி யடைந்து 8-ம் இடத்தில் நிற்கவும், அவரோடு சூரியன் உச்சமடைந்து கூடி நிற்கப் பெற்ற ஜாதக ருக்கு ஆயுளுள்ள வரையில் ஏகதாரமா யிருந்து மருமகள் கையில் வாழ்வைக் கொடு த்து மங்கிலியத்தோடு முத்தியடைவளாம்.

## 318 - 319 - 320 - 321

(இ - ள்.) 10-க்குடையவர் 9-ல் நிற்கவும், 9-க்குடையவர் சந்திரனுக்கு 2-ல் நிற்கவும், 7-க்குடையவர் இலக்கினத்தில் நிற்கவும், 5-க்குடையவர் 3-க்குடையவரோடு கூடி கேந்திரமடையவும், 12-க்குடையவர் 8-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருடைய களத்திரம் கற்பு நிலையில் அருந்ததியைப் போலும், தர்மத்தில் கற்பக விருக்ஷம் போலும், அழகில் இலக்குமியைப்போலும் வந்து 30-வயதுக்குள் 3-பொருளையுங் கொடுத்துவிட்டு மோக்ஷமடைவளாம். வேறு பெண் இரண்டாந்தாரமாய் வருவளாம்.

| செ சனி | சு | பு | |
|---|---|---|---|
| சூ | இராசிச் சக்கரம். | | |
| சந் | | | |
| | | | ல குரு |

## 322 - 323 - 324

(இ - ள்.) 9-க்குடையவர் சூரியனோடு கூடி நிற்கவும், 4-க்குடையவர் திரிகோணமடையவும், சந்திரன் 11-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு ஆயுள் பரியந்தம் ஏகதாரமாயும், நன்மையாகிய உண்மையோடு குடும்பத்திற் சிறந்தவளென்றுங் கூறியது.

| | சூ சு | | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | சந் |
| குரு | | | |
| | | | ல |

## 325 - 326 - 327

(இ - ள்.) இலக்கினாதிபதி 3-க்குடையவரோடு கூடி 5-ல் நிற்கவும். 12-க்குடையவர் 4-ல் நிற்கவும், 7-க்குடையவர் ஏழிலிருந்து இலக்கினத்தைப் பார்க்கவும், சந்திரனும், செவ்வாயுங் கூடி நிற்கவும், 12-ம் இடத்தில் அவரோடு சனி கூடி நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு களத்திரம் மேற்கூறிய வண்ணமேயாம்.

| | | சனி ரா | ல |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| குரு | செ சந் | சு பு | சூ |

## 328




(இ - ள்.) 11-க்குடையவர் இலக்கினத்தில் நிற்கவும் 2-3-4-க்குடையவர்களாகிய மூவரும் 12-ம் இடத்தில் நிற்கப்பெற்ற ஜாதகருக்கு களத்திரம் மேற்கூறிய வண்ணமே யாம்.

## 329 - 330




(இ - ள்.) இராகு 10-ம் இடத்தில் நிற்கவும், 11-க் குடையவர் 8-ல் நிற்கவும், 9-க் குடையவர் 11-ல் நிற்கப்பெற்ற ஜாதகருக்கு ஏக களத்திரமாயும், செல்வமுடையவளாயும் இருப்பாளாம்.

## 331




(இ - ள்.) 7-9க் குடையவர்கள் கூடி 12-ம் இடத்தில் நிற்கவும், 4க்குடையவரும், வளர்பிறை சந்திரனுங் கூடி 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு களத்திரம் மேற்கூறிய வண்ணமேயாம்.

## 332 - 333 - 334 - 335




(இ - ள்.) இலக்கினதிபதி ஆக்ஷிபெற்று திரிகோண மடையவும், 11-க்குடையவர் 5-ல் நிற்கவும், சந்திரன் 4-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகர் சரஸ்வதி யேய்ணுயும், உத்தம களத்திரங் கிடைத்தும் அதில் புத்திர தவமடைய வில்லையாம்.

## 336 - 337

(இ - ள்.) மேற்கூறிய இத்தன்மையுள்ள களத்திரங்களெல்லாங் கொழுனன் முன்னே கொஞ்சி விளையாடிக்கொண்டும், குங்கும மஞ்சளோடு மோக்ஷமடைவார்களாம். இதுவரையில் உத்தம களத்திரங்களை உள்ளபடி கூறினோம். இனி மத்திம களத்திர பாவகங்களைச் சொல்வோமாக.

## 338

### சமக்ளத்திர பாவகம்

(இ - ள்.) 7-2-க்குடையவர்கள் கூடி திரிகோணங்களில் நிற்கவும், அல்லது கேந்திரங்களிலாகினும், தன் மனைகளிலாகினும் நிற்கப்பெற்ற ஜாதகருக்கும் ஏகதார மென்றுங் கூறியது.




(இ - ள்.) 7-க்குடையவர் 6-8-12ல் இருந்து பாபகர்மம் பெறினும், 7-க்குடையவரை பார்த்தவர்கள் தொகையே தாரத்தினது கையெனவும், 7-க்குடையவர் சுபர்களோடு கூடி 11-ல் நிற்கவும், அவரை சேர்ந்தவர்கள் தொகை ஏகாதாரமாய்க் கிடைக்குமென்றும் மேற்கூறியவர் இருந்த 11-ம் இடம் ஸ்திர ராசியாகவும், உபய ராசியாகவு மிருந்தால் இச்சாதகருக்கு நற்குணமுள்ள மனைவி செறியுடனிருப்பளாம் மேற்கூறிய 11-ம் இடம் சர ராசியாகில் சிலநாளிருந்து மரிப்பளென்றுங் கூறப்படும்.

## 339

(இ - ள்.) கன்னியா லக்கினத்திற் சென்னமாக சந்திரன், சனி இவர்கள் கூடி கேந்திரம் அல்லது திரிகோண மடையவும், சுக்கிரன் வலிப்பெற்றிருக்கவும், 9-க்குடையவரும், கூவ்வாறு நிற்கப்பெற்ற ஜாதகர் நூறு பெண்களை மணஞ் செய்பவராம்.



[2] சுக்கிரன் பலஹீனப்பட்டு சனியும், சந்திரனும் வலுப் பெற்று நிற்கில் பல பெண்களை மோகிப்பனும். சனி கேந்திர மடை யவும், குரு 5-ல் நிற்கவும், சந்திரன் 11-ம் இடத்தில் நிற்கவும், புதன் கேந்திர மடையப் பெற்ற ஜாதகருக்கு ஏகதாரமென்றும் அப் பெண்ணை மணஞ் செய்வதற்கு முந்தி மோகித்திருப்பானென்று கூறுக.

## 340

(இ - ள்.) சர ராசியில் 7-க்குடையவரிருந்தால் 2-தார மென வும். திர ராசியி லிருந்தால் ஏகதார மெனவும், உபய ராசியி லிருந் தால் தார மிருக்கத் தார நடத்துவ ரென்றும் கூறப்பட்டது. 7-ம் இடத்தைப் பார்த்தவர் தீயராகில் தாரமிருந்து தாரம் வருமென் றும், மேற்கூறிய ஸ்தானத்தை நல்லோர் பார்க்கின் தார மிருக்கத் தாரம் வருமெனவுங் கொள்க.

[2] 7-க்குடையவர், 2-க்குடையவர், சுக்கிரன் ஆகிய மூவர் கள் கூடி பாபர் சேர்க்கை பட்டு 6-8-12-ல் நிற்கவும், அவர்களோடு சேர்ந்திருப்பவர்கள் தொகை யெத்தனையோ அத்தனை களத்திரஞ் செய்வா ரென்றும், மேற்கூறிய கிரகத்தில் நல்லவர்களாரோ அவர் கள் இனிய களத்திர மென்று பாபர்கள் எல்லாம் அன்னிய ஸ்திரி, சேர்க்கையென்றுங் கூறியது.

## 341

(இ - ள்.) 7-2-க்குடையவர்கள் சுக் கிரன் ஆகிய மூவரும் பாபருடன் கூடி 6-8-12-ல் நிற்கவும், குரு 7-ம் இடத்தைப் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகன் ஒரு பெண்ணையு மணஞ் செய்யாமல், கனவிலும் நினைக்காதவனுய் தனியனுவனும்.

| குரு | | | கே |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | ல |
| | | | |
| சனி செகு சசுரா | பு | | |

| குரு | | | பு |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| சந் | | | ல |

[2] 7-ம் இடத்திலும், சந்திரனுக்கு 7-ம் இடத்திலும் சுபர்கள் நிற்கவும் பெற்ற ஜாதகர்களுக்கு சுப களத்திரம் உண்டாகுமே தவிர மற்றவர்களுக்கு மாறி நடக்குமாம்.

## 342

| குரு சந் | | சூ-பு ரா | செ |
|---|---|---|---|
| | இராசிச் | | சு |
| சனி | சக்கரம். | | |
| | கே | ல | |

(இ - ள்.) 7-க்குடையவர் 9-ல் நிற்கவும், அவரை குருவுக்குங் கேந்திரமாகிய நட்பு ராசியில் நிற்கவும், சனி 4-ம் இடத்தில் ஆக்ஷிபெற்று நிற்கவும், சுக்கிரன் 10-ம் இடத்தில் நிற்கவும், குருவும், சந்திரனும் 6-ல் நிற்கவும், சூரியனும் 9-க்குடையவரும் கூடி இராகு சம்பந்தப்பட்டு நிற்கவும் பெற்ற ஜாதகர் உத்தமப் பெண்ணை இலக்கினுதிபதி திசையில் 4-க்குடையவர் புசிப்பில் மங்களஞ்செய்து உண்மை மைந்தரைப் பெற்று 17-ஞ சுகித்து சந்திர திசை, புதன் புத்தியில் களத்திரமிறந்து, சுக்கிரன் புசிப்பில் மறு களத்திரம் செய்து அதினுல் சுகம் பெறுவராம்.

## 343

(இ - ள்.) தாரகாரகனுகிய குருவும், தாரகனுகிய சந்திரனும் தனித்தனியாக 6-8-12-ல் நீசமடைந்து நிற்கப்பெற்ற ஜாதகருக்கு களத்திரமில்லையென்றுங் கூறியது.

[2] சூரியனும் குருவும் கூடி 7-ம் இடத்தையாகினும், இலக்கினத்தையாகினும் பார்க்கப்பெற்ற ஜாதகருக்கு களத்திரம் வந்தவுடன் மாரக மாவளாம்.

[3] சுக்கிரனிருந்த ராதியாதிபதி 8-6-12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு மேற்கூறிய விதிப்படி களத்திரம் அரிஷ்டப்படுவதுமன்றி சோர நாயகியும் அரிஷ்டப் படுவளாம்.

[4] சுக்கிரன், செவ்வாய், குரு சந்திரன், சூரியன் ஆகிய ஐவருங் கூட ஓர் வீட்டில் நிற்கவும் பெற்ற ஜாதகர் காலமுள்ளளவும் மன்மதன் கணையால் வருந்தி புத்தியீனர்களும் இவனை மதிக்காமல் காம நோயால் வருந்துவனும்.




344




(இ-ள்.) சந்திரன், சூரியன், புதன், சனி, சுக்கிரன் ஆகிய ஐவருங் கூடி ஒரு ராசியில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு மரண முள்ளளவும் விவாக மில்லை யென்றுங் கூறவும்.

[2] மேற்கூறிய ஜாதகருக்கு குரு ஏழிலிருந்தாலும் பார்த்தாலும் அவ்வித பலனும். இன்னும் 7-க்குடையவர் நட்போடு கூடி லக்கினத்தை நோக்கினாலும், மேற்கூறிய வண்ணமாக யிருந்தும் தூர தேசத்தில் வாழ்வாராம்.




[3] 6-2-7-க்குடையவர்களாகிய மூவரும் பாபர்களோடு கூடி லக்கினத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு களத்திரம் உண்மையில்லாது அன்னிய புருஷனிடத்தில் திருட்டு நாய்போல் சுகிப்பாளாம்.

345




(இ - ள்.) சுக்கிரனும் 7-6-க்குடையவராகிய மூவர்களுங் கூடி ஒரு ராசியில் நிற்கவும் பெற்ற ஜாதகனை நம்பி ஓர் பெண்ணை விவாகஞ் செய்வது பாவமாம்.




[2] 2-3-க்குடையவர்களாகிய இருவரும் 8-ல் நிற்கவும், 6-க்குடையவர் 12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் கட்டுக் கடங்காத மேல்பட்ட ரோகத்தால் தன் மனைவியைப் பார்த்து துயரப்படுவானும்.

[3] லக்கினம் தனுசு மீனமா யிருக்க புதனும் அவரோடு சில் பாபர்களுங் கூடி சந்திரர் அஸ்தமன மடையவும், சுபஸ்தானங்களில் பகைவர்கள் கூடி அங்கிசமடையவும், நீசர்கள் 7-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு சத்தியமில்லாத கபடியாயும் அல்லது குலத்துக்கு நிந்தையுடைய களத்திரமாயும் வாய்ப்பாளாம்.

346

(இ - ள்.) குரு 7-க்குடையவராகி சூரியனோடு கூடி நீச ராசிக்குள் பாபர்களால் நோக்கமடைந்து செவ்வாய் சனியினுடைய அங்கிஷமேறி நிற்கப் பெற்ற ஜாதகருடைய மனைவி பார்ப்பவர்களுக்கு சற்குண முடையவள்போ லிருந்து மெள்ள அன்னிய புருஷனைச் சேருஞ் சமர்த்தியாம்.

[2] சுக்கிரன் 7-க்குடையவராகி பாபர்களோடு கூடி பாபர்களுக்கடைந்து நவாங்கிசமேறி நிற்கப் பெற்ற ஜாதகருக்கு வந்த மனைவி இவன் மனந் துடிக்கும்படி அன்னிய புருஷனைப் புணர்ந்து விடியுமுன் தன் மனையில்வந் துறங்குவளாம்.

347




(இ - ள்.) 7-க்குடையவர் பாபருடன் கூடி 2-ம் இடத்தில் நிற்கவும், அவரை செவ்வாய் பார்க்கவும் பெற்ற ஜாதகருடைய மனைவி அன்னிய புருஷனைச் சேர்ந்து புத்திரனை பெறுவாளாம்.




[2] 7-க்குடையவர் லக்கினாதிபதியோடு கூடி 6-8-12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு விவாகமே இல்லையென்றிருக்கினும் குரு திசை வரில் விவாக முண்டாம்.




[3] 7-ம் இடத்தில் செவ்வாய் சுக்கிரன் கூடி நிற்கப் பெற்ற ஜாதகன் அமங்கலையை புணர்வானும்.




[4] 12-ம் இடத்தில் 8-க்குடையவரும் சந்திரனும் செவ்வாய் ஆகிய மூவரும் நிற்கப் பெற்ற ஜாதகன் தமையன் மனைவியை இச்சிப்பானும்.

[5] 7-ம் இடத்தி லிருந்தவர்களும் அதற்குடையவரும் பாபர்களா யிருக்கில் இச் சாதகருடைய மனைவி ரோக முடையவளாம் மேற்கூறிய பாபர்கள் 2-ம் இடத்திற் கூடி நிற்க அக் கூட்டத்தில் ஒரு சுபக்கிரகமேனு மிலலாவிடில் ஜாதகன் குடும்பமு மில்லையாம்.

## அவ களத்திரம்

### 348

(இ - ள்.) 8-ம் இடத்தில் 12-க்குடையவர் நிற்கவும், அவரை பாபர்கள் பார்க்கவும், 7-ம் இடத்தில் 6-க்குடையவர் நிற்கவும், அவரையும் பாபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகன் மடையனாகி தன் குல முறமையை விட்டு மேலான குலத்து மங்கையரைப் புணர அச்சமில்லாதவனாவானும்.

| | | ரா | சு |
|---|---|---|---|
| | இராசிச் | | செ |
| | சக்கரம். | | |
| ல | கே | | சனி |

[2] 2-க்குடையவர் பலங் குறைந்து 7-க்குடையவரோடு கூடி 8-ல் நிற்கவும், 8-க்குடையவர் 7-ல் நிற்கவும், அவரை பாபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகன் மேற்கூறிய வண்ண முடையவனேயாம்.

| சனி | | பு | சு குரு |
|---|---|---|---|
| செ | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| | ல | | |

### 349

(இ - ள்.) 7-ம் இடத்தில் 2-7-க்குடையவர்கள் நிற்கவும், சுக்கிரனும், 5-க்குடையவரும் 12-ல் நிற்கப்பெற்ற ஜாதகன் கழுதைக்கொப்பாய் முறை தவறி அத்தை மகள் பெற்ற மகளை விகர்ப்பமில்லாது புணர்வானும்.

| | | சு | ல |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| குரு சந் | | | |

[2] குருவும், 7-க்குடையவரும் பகையோடு 5-ம் இடத்தில் நிற்கவும், 5-க்குடையவர் இராகுவோடு கூடி 8-ம் இடத்தில் நிற்கவும், அவர்களை பாபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகர் மேற்கூறியவண்ண முடையவனே யாம்.

| | | சனி ரா | |
|---|---|---|---|
| குரு செ | இராசிச் | | |
| | சக்கரம் | | |
| | சூ கே | ல | |

## 350

(இ-ள்.) 7-க்குடையவர் பாபரோடு கூடி நிற்கவும், இராகு 7-ம் இடத்தில் வலுப் பெற்று நிற்கவும், இராகுவை கேந்திரத்தி னின்று பாபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகன் களத்திரத்தை மனம் நோகச்செய்து தெருவில் அலையவிட்டு இவன் பள்ளர், பறையர், விருத்தை, நொண்டி, குருடு இவர்களைப் புணர்ந்து வருந்தும் பதடியாய் நிற்பானும்.




## 351

(இ-ள்.) சனி 7-க்குடையவராயிருந்து 6-8-12-ல் நிற்கப் பெற்ற ஜாதகன் வேசை மனையில் சார்வனும்.

[2] 2-க்குடையவர் சனி, இராகு ஆகிய மூவரும் 6-8-12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் முன் கூறியவண்ண முடையவனே யாம்.




[3] இராகு, சுக்கிரன் 7-க்குடையவர் ஆகிய மூவரும் 7-ல் நிற்கவும், அவர்களை பாபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகன் ஆவி நொந்து தகப்பன் தேடிய பொருளை யெல் லாம் வேசைக்கு கொடுத்து விட்டு இவன் பதடியாய் நிற்பானும்.



## 352

(இ - ள்.) இலக்கினம் குரு வீடா யிருக்க, அக் குரு சில பாபிகளுடன் கூடி நீசபங்கம் பகையடைய அல்லது சந்திராம் சத்தில் நிற்கவும், 7-க்குடையவர் சனி வீட்டில் நிற்கவும், அவரைச் சனி பார்க்கவும், 7-க்கு 9-க்குடையவர் ஏழிலேனும் சனி யிடத்திலேனும் நிற்கப்பெற்ற ஜாதகன் மனை யாளை கொடுத்து ஜீவனஞ் செய்யுந் தரித் திரனும்.

| ல | | | |
|---|---|---|---|
| பு | இராசிச் சக்கரம். | | |
| த-கு செ | | | |
| சனி சு | | | |

## 353

(இ - ள்.) இலக்கினத்தில் நீசர்கள் நிற்கவும், 7-ல் குருவும், ராகுவும் நிற்கவும், அல்லது 7-ம் இடத்தைப்பார்க்கவும் பெற்ற ஜாதகரின் மனைவியை ஆசைப்பட்டு வருந் துர்ச்சனர்களுக்கு நன்கு முறை பாராட்டிக் கொடுத்து இவனும் வேசி மனைகள் தோறுந் திரிந்து அலைவானும்.

| | குரு ரா | | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | | ல-சு கே | |

## 354

(இ - ள்.) சந்திரன் 12-ல் ஆகினும், ஏழிலாகினும் பாபர் அம்சத்திலாகினும் நிற் கவும், சுக்கிரன் கொடிய பாபிகளோடு கூடி 8-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகரின் மனைவி தன் கணவனுடைய பகைவரோடு கூடி புணர்வதுமன்றி பகைவன் சொற்கேட்டு புருடனுடைய உயிரை துர்மரணப்படுத்தி விட்டு நகர மடைவாளாம்.

| | செ சு சனி | | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | |
| | | | சந் |
| | | | ல |

## 355

(இ - ள்.) சந்திரன், சுக்கிரன், குரு, புதன் ஆகிய நால்வரும் 7-ம் இடத்திற்கு திரிகோணமடையவும், அவர்களை 8-க்குடை யவர் பார்க்கவும், அல்லது சேர்ந்து நிற்க வும் பெற்ற ஜாதகருக்கு மனைவி பலவித மாகச் சேருவளாம்.

| | சந்-பு சு-கு | | ல |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | சனி |
| | | | |
| | | | |




[2] 8-ம் இடத்திற் சுக்கிரனிற்கவும், 7-க்குடையவர் 4-ல் நிற்கவும், பாபர்கள் 9-ல நிற்கவும் பெற்ற ஜாதகன் வேசியர்கள் சுகத்தில் மயங்கி யிருப்பானும்.




[3] 2-ம் இடத்திலும் 7-ம் இடத்திலும் பாபர்கள் நிற்கவும், புதனும் செவ்வாயும் வலி குறைந்து நிற்கவும், 8-க்குடையவரோடு சனி கூடி 5-ம் இடத்தைப் பார்க்கவும் பெற்ற ஜாதகனுக்கு வேசியைப்போல் மனைவி வருவாளாம்.




[4] சந்திரன், சுக்கிரன், சனி, செவ்வாய் ஆகிய நால்வர்களும் 7-ல் நிற்கவும், இவர்களை பாபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு விவாக மில்லையாம். அப்படி விவாகம் நடக்கில் புத்திர ரில்லையாம்.

## 356




(இ - ள்.) சனிக்கு 7-ல் சுக்கிரன் நீசமடையவும் செவ்வாயும் 4-க்குடையவருங் கூடி புதனுக்கு 7-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் மூன்று பெண்களை மணஞ் செய்தும் அந்தியத்தில் ஒரு மனைவியும் இல்லாது மரணமாவர்களாம்.

[2] 7-க்குடையவர் 6-8-12-ல் நிற்கவும், 7-ம் இடத்திற் பாபர் நிற்கவும், சனி 2-க்குடையவரைப் பார்க்கவும், பாபர்கள் சுகஸ்தானங்களில் நிற்கவும் பெற்ற ஜாதகன் மதுபான முதலிய கொடியவைகளைப் புசித்து காட்டினிடத்திலும் ஆறுகளிலும் பரஸ்திரீகளை மருவி தன் குடும்பமழிந்து உழல்கின்ற மடையரிற் கடையனுவானும்.

| கே | | | ல சனி |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| குரு | சக்கரம். | | சந் |
| சூ | பு | | செ ரா |

# 357

(இ - ள்.) குரு நீச மூட மடையவும், 3-ம் இடத்தில் ராகு, செவ்வாய் 7-க்குடையவராகிய மூவரும் நிற்கவும், 4-ம் இடத்தில் சனி சுக்கிர னிற்கப் பெற்ற ஜாதகருக்கு இரண்டு தார மிருந்தும் அந்தியத்தில் மனைவி இல்லையாம்.

| ல | | செ ரா பு | சனி சு |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| குரு | சக்கரம். | | |
| | | | |

[2] லக்கினுதிபதியும் 7-க்குடையவருங் கூடி சனிக்கு 4-ம் இடத்தில் நிற்கவும், சந்திரனுக்கு 7-ல் குரு நிற்கவும், அக்குருவை பாபர்கள் பார்க்கவும் அல்லது கூடி நிற்கவும் பெற்ற ஜாதகனுக்கு இரண்டு தாரமிருந்தும் சில நாள் சுகமனுபவித்து துன்ப சமயத்தில் சுகந் தாராமல் தொலைந்து போவார்களாம்.

| | சனி | ல | குரு கே |
|---|---|---|---|
| | இராசிச் | | சு செ |
| | சக்கரம். | | |
| சந் ரா | | | |

# 358

(இ - ள்.) 9-க்குடையவர் நீசமும் பகையும் பெற்று, 6-8-12-ல் நிற்கவும், சுக்கிரன், செவ்வாய், ராகு ஆகிய மூவரும் 8-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் 9-பெண்களை மணந்தாலும் அந்தியத்தில் மனைவி யில்லையாம்.

| பு | | சு செ ரா | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| | | ல | |

[2] 2-க்குடையவர் பகை ராசியில் நிற்கவும், 7-க்குடையவர் வலி குறைந்து சனி. சுக்கிரனிருந்த மனையில் நிற்கவும், 2-ம் இடத்தில் சூரியன், இராகு நிற்கவும் பெற்ற ஜாதகன் ஒன்றின்பின் ஒன்றாய் ஐந்து பெண்களை விவாகஞ் செய்திருந்தும் அந்திய காலத்தில் அருகிருந்து உதவி செய்யார்களாம்.




359

(இ - ள்.) சனியும், செவ்வாயுங் கூடி 7-ல் நிற்கவும், சூரியனும் சுக்கிரனுங் கூடி நிற்கவும், 7-க்குடையவர் 12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் விவாக விருப்பமில்லாதவனும், சர்ச்சனர்களுடைய வெறுப்புள்ளவனுய் இருந்து விதவை ஸ்திரீ மாய்கைக்குள் அகப்படுவானும்.




[2] குருவும், சந்திரனும் 7-ல் நிற்கவும், அவர்களை தீயர்கள் பார்க்கவும், சனி 2-ம் இடத்தை பலமாகப் பார்க்கப் பெற்ற ஜாதகன் பெண் பலிகொள்ளும் பூதமாயிருந்து 7-மனைவியை விவாகஞ் செய்தும் அந்தியத்தில் மனைவி யில்லாது புத்திரனுற் கருமங் கொள்பவனும்.




360

(இ - ள்.) சுக்கிரன் பலஹீன மடையவும், குரு இலக்கினத்தில் நிற்கவும், 9-ம் இடத்தில சனி நிற்கவும், அவரோடு இராகு கூடவும், சுக ஸ்தானங்களில சுபர்கள் நிற்கவும், சூரியனுக்கு 7-ல் செவ்வாய் நிற்கவும் பெற்ற ஜாதகர் நூறு பெண்களை விவாகஞ் செய்தும் அந்தியத்தில் ஒரு மனைவியுமில்லையாம்.



## 361

(இ - ள்.) சுக்கிரன் வலுப்பெற்று நிற்கவும், அவரை பாபர்கள் பார்க்கவும், 7-க்குடையவரும், சூரியனும், குருவுங் கூடி நின்ற இராசிக்கு 7-க்குடையவர் 12-ம் இடத்தில் நிற்கவும், அவரை பாபர்கள் நட்போடு பார்க்கவும் பெற்ற ஜாதகர் பல பெண்களை விவாகஞ் செய்தும், அந்தியத்தில் தாலியறுக்க ஒருவரு மில்லையாம்.

| சு | | சந் | ல |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | |
| சூ குரு | | | |
| செ | சனி | | |

[2] இராகு, சுக்கிரன் 4-க்குடையவர் ஆகிய மூவருங் கூடி 3-ம் இடத்தில் நிற்கவும், அல்லது மேற்படி இராசியைப் பார்க்கவும், 2-க்குடையவர் 6-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகன் மனைவியை தனியாக விட்டு வருந்தும்படிச்செய்து அன்னிய ஸ்திரீ மாய்கையில் அகப்பட்டு சரீரத்தை மடித்துக்கொள்ள எண்ணுவனும்.

| ல | | சு-ரா பு | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | |
| | | | செ |
| | | | |

## 362

(இ - ள்.) குரு 7-ல் நிற்கவும், 7-க்குடையவர் 8-ல் நிற்கவும், அவர்களை பாபர்கள் பார்க்கவும், அல்லது கூடவும் சந்திரன், புதன், இலக்கினதிபதி ஆகிய மூவர்களோடு சுபர்களுங் கூடி 12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் கொடிய வஞ்சகனுகி மனையாளை மயங்கும்படிச் செய்துவிட்டு தான் வேசை மனைதோறுந் திரிந்து தன்னுயிற் கொப்பாகிய மனைவியையு மிழந்து நரகில் வாடுவனும்.

| | சு-சந் பு | ல சூ | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம் | | கே |
| ரா | | | |
| செ சனி | குரு | | |

## 363

(இ - ள்.) சுக்கிரனும். 7-க்குடையவரும் கூடி செவ்வாய் வீட்டில் நிற்கவும், அச்செவ்வாய் 2-ம் இடத்தில் நிற்கவும், சனியும், சூரியனும் பலக் குறைவடைந்து ஒருவரை ஒருவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் மன்மத மாய்கையில் அல்லும் பகலும் விகர்ப்பமில்லாமல் வரம்பு கடந்தவனுயிருந்து மரண காலத்தில் தாரமில்லாது அலைவானும்.

| | சனி | | ல |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | செ |
| | | | |
| | சு குரு | சூ | |

[2] 7-ல் இராகு நிற்கவும், 10-ல் புதனிற்கவும், அவரை 7-க்குடையவர் பார்க்கவும், அல்லது கூடியிருக்கவும் பெற்ற ஜாதகர் விதவையை கோவிலில் புணர்பவரென்றும், பூமிக்கி பாரமாய்ப் பிறந்ததுமன்றி பிரயோஜனமற்ற பதராகுவராம்.

| | | பு | |
|---|---|---|---|
| ரா | இராசிச் | | |
| | சக்கரம். | | ல கே |
| | சனி | | |

## 364

(இ - ள்.) சந்திரன் 6-ல் நிற்கவும், சுககாரகனுகிய 7-க்குடையவர் பேடாகிய அலிக்கிரகத்தில் ஒன்றுயிருக்கவும், சுக்கிரனிருந்த ராசியாதிபதியையும், பத்துக்குடையவரையும் சூரியன் ஆண் ராசியில் இருந்து பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு ஆண் ரூபமுள்ள மனைவியாய் கிடைப்பாளாம்.

| கே | சு கு | | |
|---|---|---|---|
| | இராசிச் | | ல |
| | சக்கரம். | | |
| சந் | | செ | ரா |

[2] சந்திரன் 7-ல் நிற்கவும், அவரை பாபர்கள் பார்க்கவும், 7-க்குடையவர் நீசமடையவும், 2-க்குடையவரும், இராகுவுங் கூடி நிற்கவும், அலலது இராகு பார்க்கவும் பெற்ற ஜாதகன் மனைவி விபசாரியாம்.

| பு-ல சனி | | | செ கே |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| ரா | | | சந் |

[3] சுதன் வீடாகிய 5-ம் இடத்தை 2-க்குடையவர் பார்க்கவும், வெண்டாது யென்னும் சுக்கிரன் 7-ம் இடத்தில் நிற்கவும், 7-க்குடையவர் சனி, இராகுவோடு கூடி பலமாக நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு மனை விமுன் விதிப்படி யுடையவளேயாம்.

| | சந் கே | | ல |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| சு | | சனி ராகு | |




[4] 8-க்குடையவரும் 5-க்குடையவருங் கூடி 7-ல் நிற்கவும், அவர்களோடு ராகு, சனி நிற்கவும் பெற்ற ஜாதகன் மனைவி மிகுந்த காமியா யிருந்தும் மாதவிடாய் இல்லாதவளாம்.

365




(இ-ள்.) 10-க்குடையவரும் ராகுவும், 7-க்குடையவருங் கூடி 6-ல் நிற்கவும், செவ்வாய் சனியோடு கூடி ஒரு ராசியில் நிற்கவும் பெற்ற ஜாதகன் இறந்த பிறகும் இவன் மனையாள் விபசாரியாம்.




[2] சுக்கிரன் எந்த ராசியில் நிற்கின்றாரோ அந்த ராசியாதிபதியும் 2-க்குடையவரும் கூடி நிற்கவும், அவர்களை சனி பார்க்கவும் 7-க்குடையவருஞ் செவ்வாயுங் கூடி பலமடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகனுடைய மனையாள் மேற்கூறியவண்ணமுடையவளாம்.




[3] 4-ம் இடத்திற் சனி நிற்கவும், 7-க்குடையவர் ஆக்ஷி பெற்று நிற்கவும், குரு நட்டமடைந்து நிற்கவும், அவரை 8-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகருடைய மனையாள் சண்டாளியாய் சதாகாலமுங் காமமொழியாதவளாம்.

ஆனால் இதுவரையில் அவகளத்திர சங்கையை யொருவாறு மொழிந்தனம். இதில் 7-க்குடையவர் யிருந்த செயலறிந்து வலியறிந்தோதில் தவறுபடாதென்றுங் கூறியது.

## களத்திர மாரகம்.

### 366

இதுவரையில் களத்திரத்தின் குணங்களை யுரைத்தனம் இனி களத்திர மாரகங்களை ஒருவாறு கூறுவோமாக 7-க்கு அஷ்டமாதிபதியும், அதிலிருந்தவர்களும், 7-க்கு 6-ல் இருந்தவர்களும், உடையவரும், 7-ல் இருந்தவர்களும், ஏழைப் பார்த்தவர்களும், 7-க்குடையவரோடு சேர்ந்தவர்களும், ஸ்தானாதிபதிகள் திசை புத்திகளிலும், 7-க்குடையவர் திசையில் இரண்டு மாரகர் புசிப்பிலும், களத்திர மாரகமென்றும், 12-க்குடையவர் திசையில் 5-ல் இருந்தவர் புசிப்பிற் களத்திர மாரகமாம். இன்னும் சிலவற்றைக் கூறுவோமாக.

### 367

(இ - ள்.) சுக்கிரனுக்கு 6-ல் இருந்தவர் திசையில் சுக்கிரனுக்கு 8-க்குடையவர் புசிப்பிலும் சந்திரனுக்கு 7-க்குடையவர் 7-ல் இருந்தவர் திசையிலும், சுக்கிரனுக்கு 8-க்குடையவர் புசிப்பிலும், 2-க்குடையவர் திசையிலும், லக்கினாதிபதி புசிப்பிலும், 12-க்குடையவர் திசையிலும், சுக்கிரனுக்கு 8-ல் இருந்தவர் புசிப்பிலும், 5-க்குடையவர், திசையிலும், சுக்கிரனுக்கு 8-க்குடையவர் புசிப்பிலும், 8-க்குடையவர் திசையிலும், குருவுக்கு 8-க்குடையவர் புசிப்பிலும், ஜாதகர்களுடைய களத்திர மாரகதிசை புத்தியென்றும் மூதோர் கூறுவர். ஆனால் உத்தமகளத்திர மென்றும், மத்திம களத்திர மென்றும் அறிந்தெடுப்பதே நூல் முறையாம்.

### 368

(இ - ள்.) 7-க்குடையவர் சூரியனோடு கூடி 3-ம் இடத்தில் நிற்கவும், 2-க்குடையவர் சந்திரனோடு கூடி 12-ல் நிற்கவும், 12-க்குடையவர் 10-ல் நிற்கவும், சுக்கிரன் ராகுவோடு கூடி 4-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு 3-மனைவியர்களுண்டு அதில் மூத்தாள் லாபமில்லாதவளென்றும் இடையில் வந்தவள் சிலநாளிருந்து ஜேஷ்டபுத்திர

| சு ரா | | | |
|---|---|---|---|
| கு பு | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| ல | சனி சந் | | செ கே |

னையும் கனிஷ்ட புத்திரனையும் பெருவளென்றும் உறுதியுள்ள இளைய களத்திரம் நிலைப்பாயிருக்கு மென்றுங் கூறப்படும். இதில் புதன் திசை செவ்வாய் புசிப்பிலும் சுக்கிரதிசை செவ்வாய் புசிப்பிலும் முன் களத்திர மிரண்டும் மாரக மாகுமாம்.

## விசேட புத்திரர் பலிதம்

### 370

(இ - ள்.) 9-11-க்குடையவர்கள் ராகுவு மாகிய மூவருங் கூடி 5-ல் நிற்கவும், 5-க் குடையவர் 4-க்குடையவரோடு கூடி சந்தி திரன் வீட்டில் நிற்கவும், சந்திரன் சூரிய னோடு கூடி லக்கினத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகர் அழகிய புத்திரரைப் பெற்று சுகமு மடைந்து புத்திரர்கள் வளர வளர பொரு ளும் வளருமாம்.

| | | | ல சந் கு |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | பு சு |
| | | | |
| | | ச செ ரா | |

### 371

(இ - ள்.) 5-க்குடையரை லக்கினாதி பதி கூடி 9-ல் நிற்கவும், அல்லது மாறி நிற்க வும் அவர்களை சுபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகர் வஞ்சகமில்லாத மனத்தனுயும் புத்திரப் பெருக்குள்ளவராயும் வாழ்வா ராம்.

| | | | ல |
|---|---|---|---|
| சு பு | இராசிச் சக்கரம். | | |
| சனி | | | சந் |
| | | குரு | |

### 372

(இ - ள்.) 7-ம் இடத்தில் லக்கினாதி பதி நிற்கவும், 2-7-க்குடையவர்கள் கூடி 4-ம் இடத்தில் நிற்கவும்; குரு திரிகோண மடைய வும் பெற்ற ஜாதகர் மிகுதி புத்திரரைக் கிடைத்து புத்திராலே புண்ணியம் பெறுவ ராம்.

| | | ல குரு | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | |
| | | | செ பு |
| | சு | | |

[2] 5-க்குடையவரோடு 11-க்குடையவர் நட்பாகக் கூடி உச்ச ராசியில் நிற்கப் பெற்ற ஜாதகன் 10-பங்கு தந்தையினும் யோக முள்ளவனும்.

## 373

(இ - ள்.) 10-5-க்குடையவர்கள் நட்பாகக் கூடி சுபர்களுடைய வீட்டில் நிற்கவும், அவர்களை 9-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் பல புத்திரர்களைப் பெற்று வாழ்பவனும்.

| சந் | | | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| | ல | | குரு சு |

[2] 5-9-க்குடையவர்கள் கூடி சுபர்கள் வீட்டில் நட்பா யிருக்கவும், அவர்களை சுபர்கள் பார்க்கவும், அல்லது கூடி நிற்கவும் பெற்ற ஜாதகர் செல்வ புத்திரர்களைக் கிடைத்து வாழ்வு பெறுவராம்.

| | | குரு சந் | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| செ | சக்கரம். | | |
| | ல சு-பு | சு | சனி |

## 374

(இ - ள்.) 5-ம் இடத்தில் சுபர்கள் நிற்கவும், 5-க்குடையவர் சுபரோடு கூடி நிற்கவும், அவர்களை பாபர் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகர் புத்திரரையும் பௌத்திரரையும் பொருந்தி வாழ்பவனும்.

| கே | | சனி | ல |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| | சக்கரம். | | குரு சு |
| | செ | சந் பு | சு ரா |

[2] 4-ம் இடத்திற் சுபர்கள் நிற்கவும், குரு 6-ம் இடத்தில் உச்ச மடையவும், 6-க்குடையவரும், 7-க்குடையவரும் 11-ம் இடத்தில் நிற்கவும் 12-ம் இடத்தில் பாபர்கள் நிற்கவும், பெற்ற நான்கு தரமுள்ள ஜாதகருக்கும் சுகமாகிய புத்திர ருண்டாம்.

## 375




(இ - ள்.) லக்கினாதிபதி 11-ல் நிற்கவும் 5-க்குடையவர் கேதுவோடு கூடி லக்கினாதிபதிக்கு 12-ல் நிற்கவும், குரு மனையில் சுக்கிரன் அவரோடு கூடி உச்சம் பெற்று நிற்கவும், சூரியன் புதனோடு கூடி 3-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு நிலைத்த செல்வம், கல்வி, குணமுள்ள புத்திரர்கள் உண்டாம்.

## 376




(இ - ள்.) 5-க்குடையவர் 2-ல் நிற்கவும். 9-க்குடையவர் லக்கினத்தில் நிற்கவும், 2-க்குடையவர் சந்திரனோடு கூடி 5-ம் இடத்திற்கு 11-ல் நிற்கவும், குரு லக்கினத்தில் நிற்கவும், லக்கினாதிபதி சூரியனோடு கூடி 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகனுக்கு புத்திரர்கள் மிகுதியாயும் வாழ்வும் பெறுவாராம்.

## 377




(இ - ள்.) 5-க்குடையவர் 4-ம் இடத்தில் நிற்கவும், 5-ம் இடத்தில் குரு நிற்கவும், 10-க்குடையவர் கேந்திர மடையவும், 9-க் குடையவர் குருவுக்கு கேந்திரம் பெறவும், 11-ம் இடத்திற் சந்திரன் ஆக்ஷியடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு இளமையில் தீர்க்க புத்திரனுண்டாகி கண்ணியம் பெறுவானாம்.

## 378




(இ - ள்.) 4-ம் இடத்தில் 9-க்குடையவர் நிற்கவும், குரு 6-ம் இடத்தில் வலுப்பெற்று நிற்கவும், அவரை 5-க்குடையவர் பார்க்கவும், 7-க்குடையவர் 11-ல் நிற்கவும், 12-ம் இடத்தில பாபர்கள் நிற்கவும், பெற்ற ஜாதகருக்கு இளமையில உலகர் புகழும் படியான தேவ சுகமுள்ள புத்திர ருண்டாம்.

379

(இ - ள்.) குரு திரிகோணமாகிய 1-5-9-ல் வலுத்து நிற்கவும், செவ்வாய், சனி 5-க்குடையவர் ஆகிய மூவரும் 6-8-12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் பல புத்திரரைப் பெறுவராம்.




[2] குரு 5-க்குடையவரா யிருந்து வலுத்து நிற்கவும், சூரியன், செவ்வாய், புதன், சனி ஆகிய நால்வரும் கேந்திரம் அல்லது திரிகோணங்களில நிற்கவும், அவர்களை பாபர்கள் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகருக்கு புத்திர ருண்டாம்.




380

(இ - ள்.) இலக்கினாதிபதியும் 10-க்குடையவரும் குருவும் ஆகிய மூவரும் கூடி நிற்கவும், செவ்வாயோடு 11-க்குடையவரும் ராகுவுங் கூடி 2-ம் இடத்தில் நிற்கவும், 4-5-க்குடையவர்கள் 12-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு புத்திர ருண்டாம்




381

(இ - ள்.) 5-க்குடையவர் 4-ம் இடத்தில் நிற்கவும், 4-க்குடையவர் 5-ல் நிற்கவும், அவரோடு ராகு கூடவும், 7-க்குடையவர் ஆக்ஷியிற் கேந்திர மடையவும், 9-8-க்குடையவர்கள் கூடி ஒரு ராசியில் நிற்கவும், அவரோடு செவ்வாய், சூரியன் ஆக்ஷி யுச்சமடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு குணமாகிய கீர்த்தியுள்ள புத்திர ருண்டாம்.



## 382

(இ - ள்.) சங்கனிதியாகிய சுக்கிரனும், பதுமனிதியென்னும் குருவும், 9-க்குடையவரும் ஆகிய மூவரும் சுபர் வீட்டில் நிற்கவும், அவர்களைச் சந்திரன் பார்க்கவும், தீயர் நோக்காதிருக்கப் பெற்ற ஜாதகர் பாக்கிய புத்திரனைப் பெறுவனும்.

| சந் | | | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| ல | சக்கரம். | | |
| | சூ | | குரு சு-பு |

[2] 10-5-க்குடையவர்கள் ஒருவர் மனையில் ஒருவர் மாறி நிற்கவும், 4-க்குடையவர் 11-ல் வலுப்பெற்று நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு கீர்த்தியோடு அழகிய புத்திருண்டாம்.

| | | | சனி |
|---|---|---|---|
| | இராசிச் | | குரு |
| பு | சக்கரம். | | |
| | | | ல |

## 383

(இ - ள்.) புத்திர ஸ்தானத்திற்கு 5-க்குடையவரும் குருவுஞ் சேராமலும், பார்க்காமலும் நிற்கவும், அவர்களை சனியும், 5-க்குடையவரும் பார்க்காதிருக்கப் பெற்ற ஜாதகருக்கு 10-புத்திரன் பிறந்து அதிற் சிலரிறந்தும், 5-புத்திரர்க்கு குறையாமல் பிதுர்வாக்கியமும் சத்தியமுந் தவரா திருப்பார்களாம்.

| | | | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| ல சனி | சக்கரம். | | |
| | குரு | சு | பு |

## 384

(இ - ள்.) குரு லக்கினத்தில் நிற்கவும், 5-க்குடையவர் 7-ல் நிற்கவும், அசுர குருவாகிய சுக்கிரன் 6-ல் நிற்கவும், 5-ம் இடத்திற் சந்திரனுங் கேதுவும் கூட செவ்வாயின் ராசியை சூரியனுக்குக் கொடுத்து தான் 7-ல் சனியோடு கூடி நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு முன் களத்திரத்திற்கு 4-பெண்களுண்டாகி மறு களத்திரத்திற்கு நிறைந்த புத்திருண்டாகுமாம்.

| செ சனி | சூ | | |
|---|---|---|---|
| சு | இராசிச் | | ரா |
| சந் கே | சக்கரம் | | |
| | | | ல குரு |

## 385

(இ - ள்.) 5-க்குடையவர் சுக்கிரனாகி 4-ல் நிற்கவும், 5-ம் இடத்திற் சூரியனோடு புதன் கூடி நிற்கவும், 7-க்குடையவர் 7-ல் நிற்கவும், 12-ல 9-க்குடையவரும் ராகுவுங் கூடி நிற்கவும், சந்திரன் வளர்பிறையாகி செவ்வாயோடு கூடி 6-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு சில புத்திரர் தோஷமுண்டாகி மேகத்தைக் கண்ட பயிர் போன்ற புத்திரனைக் கிடைத்து சிறப்பு பெறுவனும்.

| | | | |
|---|---|---|---|
| | | சனி ரா | ல |
| | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| குரு | செ சகே | சூ பு | சு |

## 386

(இ - ள்.) 5-க்குடையவர் 4-க்குடையவரோடு கூடி 2-ல் நிற்கவும், 7-க்குடையவர் சனியோடு கூடி சுக்கிரனுக்கு 12-ல் ஆக்ஷி பெற்று நிற்கவும், 9-ம் இடத்தில் கேது நிற்கவும், 4-ம் இடத்திற் சந்திரன் நிற்கவும், குரு 5-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகர் நாவலர்களுக்குத் தலமையுடையவராய் 3-புத்திரியைப் பெறுவாரென்று நூற் சம்மதமாம்.

| | | | |
|---|---|---|---|
| | செ சனி | ல சு | சூ பு |
| | இராசிச் | | ரா |
| கே | சக்கரம். | | சந் |
| | | | குரு |

## 387

(இ - ள்.) 5-க்குடையவர் 8-ல் நிற்கவும். 7-க்குடையவர் சூரியனோடு கூடி ஆக்ஷியடையவும் அல்லது ?-க்குடையவர் 11-க்குடையவரோடு கூடி 2-ல் நிற்கவும், அல்லது சந்திரனோடு 7-க்குடையவர் கூடி சனிக்கு 7-ல் நிற்கவும், குரு கேந்திரமடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு குறைவில்லாத செல்வத்தோடு புததிரருண்டாகி உலகத்தில் ஜெயம் பெற்று வாழ்பவராம்.

| | | | |
|---|---|---|---|
| | ரா | சனி | |
| | இராசிச் | | |
| குரு | சக்கரம், | | |
| சந் செ | சூ சு | ல பு கே | |

## 388

(இ - ள்.) 5-ம் இடத்திற்கு 2-பக்கமும் பாபர்கள் நிற்கவும், 5-ம் இடத்தைச் சனி பார்க்காதிருக்கவும், குரு கேந்திரத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு வீடெல்லாம் புத்திரனாக விளங்குவார்களாம்.

| குரு | | | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | ல சனி |
| | | | |
| செ | | சூ | |

[2] 5-ம் இடம் மேஷமாயிருக்கவும் அதிற் செவ்வாய் நிற்கவும், மீன ராசியில் குரு நிற்கவும், அவரை பாபர்கள் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகருக்கு பீமசேனனைப்போல் புத்திரருண்டாம்.

| குரு | செ | | கே |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| | சக்கரம் | | சனி |
| ல ரா | | | |

## 389

(இ - ள்.) சந்திரனுக்கு 5-ம் இடத்தில் இலக்கினத்திற்கு 5-க்குடையவர் நிற்கவும், அல்லது 9-க்குடையவருக்கு 11-ல் நிற்கவும், சந்திரனுக்கு 9-க்குடையவரும், குருவும் கூடி 5-ம் இடத்தில் நிற்கவும், சூரியன் இலக்கினத்தில் நிற்கவும், சந்திரன் கேந்திரமடையவும், சந்திரனுக்கு 9-ம் இடத்தில் சுக்கிரன் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு அழகிய செல்வமுடைய புத்திரருண்டாம்.

| | சந் | | |
|---|---|---|---|
| குரு செ | இராசிச் | | |
| | சக்கரம். | | சனி |
| சு | | ல-பு சூ | |

## 390

(இ - ள்.) விருச்சிகம் 5-ம் இடமாகவும், அதிற் சூரியன் நிற்கவும், தனுசில் இலக்கினாதிபதி நிற்கவும், அல்லது சனிக்கு திரிகோணத்தில் நிற்காதிருக்கவும் பெற்ற ஜாதகருக்கு விருத்த வயதில் புத்திரருண்டாம்.

| | | | |
|---|---|---|---|
| சனி | இராசிச் | | ல |
| | சக்கரம். | | |
| சந் | சூ | | |

[2] பெண் கிரகங்கள் 5-ல் நிற்கவும் 5-க்குடையவர் 4-ல் நிற்கவும், இலக்கினாதிபதி ஆண் கிரகமாகி 5-க்குடையவர் பெண் கிரகமாகி நிற்கவும் பெற்ற ஜாதகர் புத்திரரால் பாக்கி செல்வம் பெறுவரும்.




## 391

(இ-ள்.) 5-ம் இடம் குரு வீடாகி அதிற் சுக்கிரனிற்கவும், குரு சந்திரன் வீட்டிலமரவும், பாபர் குரு வீட்டில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு பெண்ணாகவே பிறக்குமென்றுங் கூறியது.




[2] 5-ம் இடம் சுக்கிரன் வீடாகி அதிற் சந்திரனிற்கவும், 5-க்குடையவர் சூரியனோடு கூடி நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு பிரமன் கிருபை யிருந்தபோதினும் அழகிய பெண் புத்திரிமட்டும் கிடைப்பாளாம்.




## 392

(இ-ள்.) சனியின் வீடே 5-ம் இடமாகி அதிற் குரு நிற்கவும், சனி 4-ம் இடத்தில் நிற்கவும், சுக்கிரன் சூரியனாகிய இருவரும் ஆக்ஷி பெற்று செவ்வாயோடு கூடி நிற்கவும், 11-ம் இடத்திற் சந்திரனிற்கவும் பெற்ற ஜாதகருக்கு பரிசுத்தமுள்ள ஏகபுத்திரனும் 2-பெண்களு முண்டாம்.



## 393

| | | சனி கே | குரு |
|---|---|---|---|
| ல | இராசிச் | | |
| | சக்கரம். | | சந் |
| சு | சூ பு | ரா | |

(இ - ள்.) 5-ம் இடத்திற் குருவிருந்து இலக்கினத்தைப் பார்க்கவும், சந்திரன் கேந்திரமேறி இலக்கினத்தைப் பார்க்கவும் 5-க்குடையவர் சந்திர கேந்திரத்தில் நிற்கவும், 9-க்குடையவர் 11-ல் நிற்கவும், சந்திரனுக்கு 9-ம் இடத்தில் இலக்கினாதிபதியோடு கேது கூடி நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு சுப்பிரமணியருடைய கிருபை யுண்டாகி புத்திர பவுத்திர சுகங்களோடு வாழ்பவராம்.

## 394

| சு ரா | | | |
|---|---|---|---|
| சூ பு | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| ல | | குரு | செ கே |

(இ - ள்.) இலக்கினாதிபதி 11-ல் நிற்கவும், 5-க்குடையவர் கேதுவோடு கூடி இலக்கினாதிபதிக்கு 12-ல் நிற்கவும், குரு வீட்டில் சுக்கிரனும், இராகுவுங் கூடி உச்சமடைந்து நிற்கவும், சூரியன், புதன் இவர்கள் கூடி 3-ல் நிற்கவும்பெற்ற ஜாதகர் செல்வமுடைய புத்திரரைப் பெற்று கல்வியிலுஞ் சிறந்தவனென்று கூறவும்.

## 395

| | | | ல கு-ச |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| | சக்கரம் | | |
| சனி பு | | | |

(இ - ள்.) இலக்கினாதிபதியும், 9-க்குடையவருங் கூடி 7-ல் நிற்கவும், இலக்கினத்திற் சந்திரனும், குருவுங் கூடி நிற்கவும், அவரை இலக்கினாதிபதியும், 2-க்குடையவரும் சேர்ந்தாலும், அல்லது பார்த்தாலும் கேந்திர கோணங்களில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு வீடு நிரம்ப புத்திரர்கள் உண்டாம்.

## 396

| | | புசசெ சனி | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| | | | ல |

(இ - ள்.) புதன், சந்திரன், சனி, செவ்வாய் ஆகிய நால்வரும், 9-ம் இடத்தில் நிற்கப்பெற்ற ஜாதகருக்கும் மேற்கூறிய வண்ண முடையவரேயாம்.




[2] செவ்வாய், சந்திரன், சூரியன் ஆகிய மூவர்கள் கூடி 9-ம் இடத்தில நிற்கப் பெற்றாலும் மேற்கூறிய வண்ணமேயாம்.




[3] குரு, சனி, சந்திரன், ராகு ஆகிய நால்வருங் கூடி 5-லாகினும், 11-லாகினும் நிற்கவும், அவர்களை பாபர்கணேக்கா திருக்கப் பெற்ற ஜாதகருக்கு மேற்கூறிய வண்ணமேயாம்.

397




(இ - ள்.) செவ்வாய், குரு, புதன், சந்திரன், சுக்கிரன் ஆகிய ஐவரும் 4-ம் இடத்திலாகினும், லக்கினத்திலாகினும் நிற்கப்பெற்ற ஜாதகருக்கு பல புத்திரர்கள் உண்டாம்.




[2] சனி, புதன், சூரியன் ஆகிய மூவரும் நல்லஸ்தானத்தில் நின்றாலும், 11-ல் இருந்தாலும் மேற்கூறிய வண்ணமே புத்திரருண்டாம்.




[3] குருவுஞ் சந்திரனும் கூடி சுகஸ்தானத்தில் நின்றாலும், அல்லது லக்கினம் 9-ம் இடம் 5-ம் இடம் இந்த ராசிகளில நிற்கப் பெற்றாலும் மேற்கூறிய வண்ணமே புத்திரருண்டாம்.

## 398

(இ - ள்.) 4-5-க்குடையவர்கள் ஆக்ஷி பெற்று கேந்திர மடையவும், குரு சந்திர னின்ற ராசிக்கு 11-ம் இடத்திற்கு 5-ம் இடத்திலும், 9-க்குடையவருக்கு திரி கோணத்திலும் நிற்கவும், 10-க்குடையவர் 11-ம் இடத்தில் நிற்கவும்பெற்ற ஜாதகருக்கு மிகுதியாகிய புத்திரரும் செல்வமும் உண் மையும் அந்தியம் வரையில் உண்டாம்.

| குரு | செ | | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| சந் | சக்கரம். | | |
| ல | சு | பு | |

## 399

(இ - ள்.) தனுசு லக்கினத்திற்கு 5 12-க்குடையவர் சந்திரனோடு கூடி குருவுக்கு 11-ம் இடத்திலிருந்து ஆக்ஷி பெற்று நிற்க வும், அவர்களை 2-க்குடையவர் பார்க்கவும், 9-க்குடையவர் 11-ல் நிற்கவும், 4-க்குடைய வர் 7-ல் நிற்கவும், ராகு 9-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு ராகு திசையில் 7-க் குடையவர் புகிப்பில் ஏக புத்திரனோடு 2- பெண் மக்களும் கிடைப்பார்களாம்.

| | செ சந் | | குரு |
|---|---|---|---|
| சனி கே | இராசிச் | | |
| | சக்காம். | | ரா |
| ல | | சு சூ | |

## 400

(இ - ள்.) 5-10-க்குடையவர் 9-ம் இடத்தில் நின்று லக்கினாதிபதி பார்வை யைப் பெற்றும், 4-9-11க்குடையவர்களைத் தனக்கு 11-ல் வைத்தும் அவர்கள் லக்கின கேந்திர மடையவும் பெற்ற ஜாதகருக்கு குரு திசையில் 10-லிருந்தவர் புத்தி முதல் புத்திர ஆரம்பத்திற்கு ஏது வாகுமாம்.

| செ | சூ பு | | |
|---|---|---|---|
| | இராசிச் | | ல |
| சு குரு | சக்கரம். | | |
| | | | சந் |

## 401

(இ - ள்.) குரு, லக்கின கேந்திர மடைந்து 5-க்குடையவரையும், 5-ம் இடத் தையும் பார்த்து நிற்கவும், சந்திரன் 11-க் குடையவரா யிருந்து குருவுக்கு திரிகோண மடைந்து குரு பார்வையைப் பெற்று நிற்க வும், 10-க்குடையவர் சந்திரனுக்கு திரி கோண மடைந்து நிற்கவும் பெற்ற ஜாதக ருக்கு கொத்து மலர்போல் மூன் பெண்கள்

| சனி | | பு | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| சந் | சக்கரம் | | |
| | | | ல குரு |

பிறந்து பிறகு குரு திசையில் சந்திர புத்தியில் ஆண் புத்திரன் தீர்க்க முண்டாம்.

## 402

(இ - ள்.) 5-ம் இடத்திற் குரு நிற்கவும், அவரை 5-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு திரண்ட புத்திர ருண்டாம்.

[2] 5-க்குடையவரும் குருவுங் கூடி வைசேடிகா அம்சம் பெற்று நின்றாலும், மேற்கூறிய பலனேயாம். 7-ம் இடத்திற் சந்திரனின்று 5-க்குடையவரைப் பார்த்தாலும், மேற்கூறிய பலனேயாம்.

## 403

(இ - ள்.) லக்கினாதிபதியும் 5-க்குடையவருங் கூடி நிற்கவும் அவர்களுக்கு குரு வீக்ஷண்யங் கிடைத்தாலும் மேற்கூறியவர்கள் ஒருவரை யொருவர் நோக்கினாலும் 5-ம் இடத்திற் கூடி குரு பார்வை பெற்றாலும் 1-5-9-க்குடையவர்கள் கேந்திரம் ஆக்ஷி நட்பு அடைந்தாலும் இவைகளில் வளர்பிறையாகில் இச் சாதகருக்கு புத்திரரிருக்க இரண்டு வீடு வேணுமென்று கூறப்பட்டது.

## 404

(இ - ள்.) 7-க்குடையவர் லக்கினாதிபதி 5-க்குடையவர் குரு ஆகிய நால்வரும் சுபா அம்சங்களில் நிற்கவும், இவர்களுக்குச் சந்திரன் பார்வை யுண்டாகில் இச் சாதகர் அழகுள்ள புத்திரனைப் பெற்று சுகத்திற் சேர்வாராம்.




[2] லக்கினத்திலாகினும், 5-லாகினும் குரு நிற்கவும், மற்றவர்கள் உபஜயத்தில் நிற்கப் பெற்ற ஜாதகர் பல புத்திரர் கிடைத்து பவுத்திருடனும் வாழ்வாராம்.

75

## மத்திம புத்திரர் பலிதம்

### 405

|  | செ சனி |  | ரா |
|---|---|---|---|
|  | இராசிச் |  |  |
|  | சக்கரம். |  |  |
| ல கே |  | கு |  |

(இ - ள்.) 5-க்குடையவரும் 2-க்குடையவரும் ஈனப்பட்டு 5-ம் இடத்தில் நிற்கவும், அவர்களை பாபர்கள் நோக்கவும் பெற்ற ஜாதகருக்கு இளமைப்பொழுதே புத்திருண்டாகுமாம்.

[2] 5-க்குடையவர் ஆக்ஷி யடைந்து சுபர்கள் பார்வை பெற்றாலும், மேற்கூறிய புத்திர காலத்தில் நற்பயன் கொடுக்குமாம்.

[3] 5-ம் இடத்தில் 9-க்குடையவர் நிற்கவும், அவரை செவ்வாய் பார்க்கவும், அறிவில்லாத ஓர் புத்திரனாலும் கருமத்துக்குண்டென்றுங் கூறியது.

### 406

|  |  | சு | ல |
|---|---|---|---|
| சனி | இராசிச் |  | சூகே பு |
| ரா | சக்கரம். |  |  |
|  |  | குரு | செ |

(இ - ள்.) 5-ம் இடத்திற் குரு நிற்கவும் அல்லது பார்க்கவும், 5-க்குடையவர் ஆக்ஷி நட்படையவும், அவரை பாடக் கிரகங்கள் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகராகிய வீரனுக்கு விழல்போல் அனேக புத்திர ருதிப்பாராம்.

[2] குரு 3-ல் நிற்கவும், அவ் வீட்டுக்குடையவர் 4-க்குடையவரோடு கூடி 5-ல் அல்லது 2-ல் நிற்கவும், பெற்ற ஜாதகர் 5-6-7-பெண்கள் பெற்ற பிறகு நவரத்தினம்போல் ஏக புத்திரன் பிறப்பானும்.

### 407

| ல |  |  | செ |
|---|---|---|---|
|  | இராசிச் |  | சந் |
| சனி | சக்கரம். |  |  |
| குரு |  |  |  |

(இ - ள்.) 5-க்குடையவர் திரிகோணங்களில் நிற்கவும், குரு கேந்திர மடையவும், அவரை பாபர்கள் நோக்கவும் பெற்ற ஜாதகருக்கு அறிவில்லாத மூடனாய் ஓர் புத்திரன் பிறந்து கருமஞ் செய்வானும்.

[2] சுபாங்கிஷத்தில் 5-க்குடையவர் நிற்கவும், அவரை மூன்றி லிருந்து பாபர்கள் பார்க்கா திருக்கப் பெற்ற ஜாதகருக்கு மைந்தர்கள் பிறந்து பிறந்து மரண மடைந்து அந்தியத்திற் கருமக் கிரியை செய்ய மைந்த னுண்டாம். ஆனால் குரு பார்வை வேண்டு மாம்.

## 408

(இ - ள்.) சர ராசியிற் குரு நிற்கவும், அது 5-ம் இடமாகவும், 5-க்குடையவர் ஸ்திர ராசியில் நிற்கவும், அவரைச் சுபர்கள் நோக்கவும் பெற்ற ஜாதகருக்கு புத்திர னில்லை யென்பது திண்ணம். ஆனால் கண்ணுவருடைய கரும காண்ட விதிப்படி யாகாதி கிர்த்தியம் செய்தால் ஒருவாறு புத்திர ருண்டாகுமாம்.

| ல | | | |
|---|---|---|---|
| சு பு | இராசிச் சக்கரம். | | குரு |
| | | | சந் |
| | | | |

[2] லக்கினத்தில் குரு நிற்கவும், 5-ம் இடம் சூன்யமாயும், 11-ம் இடத்தில் சனி நிற்கவும், செவ்வாய் 4-ம் இடத்தில் சிறப் படைந்து நிற்கவும், 7-ம் இடத்தில் சந்திரன் புதனோடு கூடி நிற்கவும், 6-ம் இடத்தில் சூரியன், சுக்கிர னிற்கவும் பெற்ற ஜாதக ருக்கு அருமையான புத்திரன் கிடைப்பா னென்றும் கூறியது.

| | சூ சு | சந் பு | |
|---|---|---|---|
| செ | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| | ல குரு | | சனி |

## சுவீகார புத்திர பலம்

## 409

(இ - ள்.) லக்கினுதிபதியும், 5-க்குடையவரும் மாறி நிற்கவும், சனி சத்துருவாகி 5-ல் நிற்கவும், குரு பலங்கெட்டு நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு புத்திர ரில்லை யென்றும், சுவீகார புத்திரனுல கிரியை முடியுமென்றுங் கூறியது.

| | | | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | ல செ |
| | | | |
| | சனி சந் | | குரு |

[2] 5-க்குடையவர் சூரியனோடு கூடி 2-ம் இடத்தில் ஆக்ஷிபெற்று நிற்கவும், 12-க் குடையவர் அனுஷதானமென்னுஞ் சகோதர ஸ்தானத்தில் நிற்கவும், 8-க்குடையவர் 5-ல் நிற்கவும், ராகு 3-ம் இடத்தில் சத்துருவாய் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு புத்திரனில்லாது தன் மகள் புருஷனால் கிரியை நடக்குமாம்.




## 410

(இ - ள்.) 6-8-12-ல் 5-க்குடையவரும் புதனுங் கூடி நிற்கவும், அவர்களை புண்ணியர்களென்னுஞ் சுபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு சுய புத்திரனுக்கு மேற் சிறந்தவனாக தத்து புத்திரனுண்டாம்.




[2] 5-க்குடையவர் செவ்வாயோடு கூடி நட்படைந்து நிற்கவும், அவர்களை சனி பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு தன் வம்சத்திலும் புத்திரனில்லாது தன் பந்துக்களிலிருந்து வரும் தத்து மைந்தனால் சுகப்படுவானும்.




## 411

(இ - ள்.) சனியும் 5-க்குடையவரும், சந்திரனோடு கூடி 1-5-9-ல் இருக்கவும், அல்லது சனி செவ்வாயோடு கூடி 7-ம் இடத்தில் நிற்கவும், அவர்களை புண்ணியர்கள் நோக்காதிருக்கவும் பெற்ற ஜாதகருக்கும்.

[2] 5-க்குடையவர் லக்கினாதிபதி ஆகிய இருவரும் மாறி நிற்கவும், இவர்களை சுக்கிரன் குரு பார்வை யில்லாது ராகு பார்க்கப் பெற்றாலும்.

[3] லக்கினாதிபதியும் 5-க்குடையவநும், பாபவர்க்க முற்றும் குரு பார்வை பெற்றிருந்த போதினும் இந் நான்கு தரமுள்ள ஜாதகர்களுக்கும் சுவீகார புத்திருண்டாகுமாம்.

## 412

(இ - ள்.) 5-க்குடையவர் சனிக்கு நட்பாய்ப் பொருந்தி நவாங்கிச மேறினாலும், 12-க்குடையவரேனும், 5-க்குடையவரேனும், சூரியனாகி முன் கூறியவர்களோடு அங்கிசஞ் சேர்ந்த ஓரை ராசி இரட்டையா யிருக்கினும், 2-ல் 5-ல் குரு நிற்கவும், மற்றவர்கள் சுபவர்க்கமாய் நெருங்கினாலும், மிதுனங் கன்னி ஓரைனயகர் 5-ம் இடத்தில் நிற்கவும், சனி, செவ்வாய், குளிகனுங் கூடி நிற்கவும் பெற்ற ஜாதகர்களுக்கும் சுவீகார புத்திரனாற் சுகம் பெறுவானும்.

## 413

(இ - ள்.) லக்கினாதிபதி 5-ல் நிற்கவும், 5-க்குடையவர் 9-ல் நிற்கவும், பாபர்கள் சந்திரனோடு கூடி நிற்கவும், 6-5-ல் சுபர்கள் நிற்கவும், அதற்குடையவர்கள் அவரோடு கூடாமலும், நோக்காமலும் நிற்கவும், சுக்கிரன் குரு தங்கள் வர்க்கத்தில் நிற்கவும், அல்லது சனியின் வர்க்கமேறி யிருக்கினும், 7-ல் செவ்வாய், சனி நிற்கவும், 12-ம் இடத்தில சந்திரனிற்கவும் பெற்ற ஜாதகர்களுக்கும் சுவீகார புத்திரனுண்டாம்.

## நபுத்ர சாதக வியல்

## 414

(இ - ள்.) 12-ல் 5-3-க்குடையவர்கள் சூரியன் ஆகிய மூவரும் நிற்கவும், அவர்களை சுக்கிரன், குரு பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகருக்கு புத்திரனில்லையாம்.

[2] 8-க்குடையவர் 5-ல் நிற்கவும், 5-க்குடையவர் 12-ல் நிற்கவும், குரு கேந்திரமடையவும் பெற்ற ஜாதகர்களுக்கு கருமஞ் செய்ய புத்திரனில்லையாம்.

[3] 5-ம் இடத்திற் சனி நிற்கவும், 4-லிலும் 12-லும் ராகுவோடு பாபக் கிரகங்கள் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு புத்திரனில்லையாம்.

## 415




(இ - ள்.) சந்திரனுக்கு 5-க்குடையவரும் சுக்கிரனுங் கூடி கன்னியில் நிற்கவும், அவர்களை பாபர்கள் நோக்கவும் பெற்ற ஜாதகருக்கு ஆண் புத்திர னில்லையாம்.




[2] 7-க்குடையவர் 5-ல் நிற்கவும், அவரோடு பாபர்கள் கூடவும் அல்லது பார்க்கவும், குரு சிறப்படைந்து நிற்கவும் பெற்ற ஜாதகருக்கும் புத்திர னில்லையாம்.




[3] 5-க்குடையவர் ராகுவோடு கூடி 6-8-12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு புத்திர னில்லையாம்.

## துவேஷ புத்திரர்

## 416




(இ - ள்.) 5-ம் இடத்திற் சூரியன் நிற்கவும் 5-க்குடையவர் துர்ப்பலமடைந்து சனி செவ்வாய் நோக்கமடையப் பெற்ற ஜாதகன் பிதாவை வருத்தப் படுத்து வானும்.

[2] செவ்வாய், சுக்கிரன், குரு, சூரியன், சந்திரன் ஆகிய ஐவரும் கூடி ஒரு ராசியில் நிற்கவும். 9-ம் இடத்திற் சனி, இராகு நிற்கவும் பெற்ற ஜாதகன் நாசகால னென்றும், பிதாவின் துவேஷி யென்னவுங் கூறியது,

| ல | | கே | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| | சக்கரம். | | சூ-சந். சு-கு-செ |
| | சனி ராகு | | |

## 417

(இ - ள்.) பிதிர் லக்கினம் எதுவோ அதற்கு 6-ம் இடம் 8-ம் இடம் புத்திரனுக்கு லக்கினமாய் நிற்கப்பெற்ற ஜாதகர் பிதிர்த் துவேஷியா யிருப்பானும்.

[2] இலக்கினதிபதியும், 5-க்குடையவரும் பகைபா யிருக்கப் பெற்ற ஜாதகர் வெந்து சீறும் பிதிர்த் துவேஷியாகிய ஜாதகனை பிள்ளையாகப் பெற்ற தவம் மேன்மை தவமேயாம்.

[3] 9-ம் இடத்திற் செவ்வாய், சூரியன், சனி ஆகிய மூவரும் நிற்கில் முன் கூறிய பலனேயாம்.

## 418

(இ - ள்.) 8-6-12-க் குடையவர்கள் பலம் பெற்று நிற்கவும், 4-9-7-க்குடையவர்கள் பலஹீன மடைந்து நிற்கப்பெற்ற ஜாதகன் பிதாவின் சுகத்தைக் கெடுக்க வந்தவனும்.

| | செ | சந் | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| குரு | சக்கரம். | | |
| ல | சூ பு | சு | |

[2] சந்திரன், சூரியன், செவ்வாய், குரு, சுக்கிரன் ஆகிய ஐவரும் ஒரு ராசியில் நிற்கப்பெற்ற ஜாதகன் துஷ்டனாய்ப் பிறப்பானும். அன்றியும். தன் தாயை சுடாதுபோற் சுட்டு தாக்கி விடும்படியான துரோகியாம்.

## 419

(இ - ள்.) 9-ம் இடத்திற் சுக்கிரன், சந்திரன், செவ்வாய் ஆகிய மூவரும் நிற்கப்பெற்ற ஜாதகன் தாயைப் பழிப்பவனும்.

[2] 5-ம் இடத்திற் சனி நிற்கவும், அச் சனிக்கு 5-ல் 9-க்குடையவர் நிற்கவும், 9-க்குடையவருக்கு 5-ல் செவ்வாய், குளிகன், இராகு அல்லது கேது நிற்கவும் பெற்ற ஜாதகன் வாய், கண், காதுமில்லாத ஓர் புத்திரனைப் பெற்று துயரப் படுவானும்.

| | | சனி | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | |
| செ-கு கே ரா | | | |
| | | | பு |

### புத்திர மாரகம்

## 420

(இ - ள்.) இதுவரையிற் புத்திர பாபங்களைத் தெரிவித்தனம் இனி புத்திர மாரகப் பொருத்தங்களும், திசை புத்திகளும் தெரிவிக்கின்றனம்; புத்திர ஸ்தானத்தில நின்றவர்களும், புத்திர ஸ்தானத்தில் அட்டமாதிபதி யிருக்கும் நேர்மைகளும், புத்திர ஸ்தானத்திற்கு 8-ம் இடத்தைப் பார்த்தவர்களும், இருந்தவர்களும், திசை புத்தியாளரெனப் பொருந்துவார்கள். அதில் எவர் திசை, எவர் புசிப்பு யெனத் தெரிந்துகொள்ளுமாறு அவரவர்கள் கிரக ஸ்புட பாகை, கலை விதிகளின் கணிதத்தாற் றெரிந்து கொள்ளவும்.

## 421

(இ - ள்.) புத்திர மாரகதிசை புத்தியின் விபரத்தை விளக்கமாகக் கூறுவோம். புத்திர ஸ்தானத்திற்கு 8-க்குடையவரும், அதிலிருந்தவர்களும், கூடினவர்களும், புத்திர ஸ்தானத்திற்கு 6-ம் இடத்திற் குரியவரும், 10-க்குரியவரும், இவர்களில் வலுப்பெற்றோரை யறிந்து அவர்கள ஸ்புட கணிதத்தைச் சோதித்து ஏற்றம் பார்க்குமிடத்திற் புத்திரர்களுக்கு ஆயுள் வலுத்திருந்தால் கணிதம் சென்றவரையில் இராசி மண்டல நக்ஷத்திர மண்டலத்திற் றள்ளி கடைசியில் சம்பவித்த சேட்த்தைக் கண்டுகொள்ளவும்; அப்படி கண்டுகொள்வதே புத்திர மாரக நிக்ஷயமாம்.

## 422

| சங் | | | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | சனி கு-பு |
| | | | |
| செ | | ல | ரா |

(இ - ள்.) சந்திரனுக்கு 5-ல் சனியோடு குருவும், 9-க்குடையவரும் நிற்கவும், அவர்களை பாபர்கள் நோக்கவும் பெற்ற ஜாதகருக்கு வந்த 3-தாரத்திற்கும் மலடி யென்ற பேருண்டாகும்.

| ல | | குரு | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | சு சூ |
| | | | |
| | | சங் | |

[2] 5-ம் இடத்தில் 6-8-க்குடையவர்கள் நிற்கவும், 5-க்குடையவர் குருவுக்கு 3-க்குடையவராகி 6-8-12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகரை புத்திரனில்லாத மலடனென்றுங் கூறப்படும்.

| | | | சனி பு |
|---|---|---|---|
| ல | இராசிச் சக்கரம். | | சு செ |
| | | | |
| சங் | | | |

[3] 9-க்குடையவர் 6-ம் இடத்தில் நீச்சரோடு கூடி நிற்கவும், 5-க்குடையவரும் லக்கினாதிபதியுஞ் சந்திரனுக்கு 7-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு மேற்கூறிய வண்ணமேயாம்.

## 423

| | | | சனி |
|---|---|---|---|
| ல பு | இராசிச் சக்கரம். | | |
| குரு செ | | | |
| | | | |

(இ - ள்.) 5-க்குடையவரும், சனியும் மாறி நிற்கவும், குரு பாபரோடு கூடி 5-க்குடையவருக்கு 12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் ஆவி சிந்தி மாய்வராம்.

| குரு | | ரா | சனி |
|---|---|---|---|
| | இராசிச் | | ல |
| | சக்கரம். | | |
| செ | கே | | |

[2] 5-க்குடையவர் 6-ல் நிற்கவும், 6-க்குடையவர் 9-ல் நிற்கவும், அவரை பாபர்கள் பார்க்கவும்பெற்ற ஜாதகர் நூறு வேள்வி செய்தபோதிலும் புத்திரனில்லையாம்.

424

| | | | |
|---|---|---|---|
| | இராசிச் | | ல |
| | சக்கரம். | | |
| | குரு | செ சந் | |

(இ - ள்.) சந்திரன் செவ்வாயோடு கூடி 4-ல் நிற்கவும், 5-ம் இடத்தில் குரு சிறந்து நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு புத்திரன் விழலுக்கிறைத்த ஜலம்போலாகுமே தவிர புத்திரனில்லையாம்.

| | சந் சனி | | |
|---|---|---|---|
| | இராசிச் | | செ ரா ல |
| கே | சக்கரம். | | |
| | | | |

[2] சந்திரன் பாபர்களை துணையாகக் கொண்டு 10-ம் இடத்தில் நிற்கவும், இலக்கினத்திற் பாபர்கள் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு புத்திரரில்லையாம். மேற்கூறிய முறைகளெல்லாம் 5-க்குடையவருக்குரிய நன்மை தீமையைக் கண்டு கூறவும்.

## யோக பாவம்

### தரு வணக்கம்

425

அஷ்ட லட்சுமிகளுந் தெய்வ யிந்திராணியும் போற்றும்படியான சிவபெருமானுக்கு வேதங்களை யுபதேசித்த தலமாகிய திருவேரகப் பிதியிலுறையும் சுப்ரமண்யருடைய அனுக்கிரகம் பெற்று எனக்கு உபதேசித்த இராச குருவாகிய சோதிட வீரப்பபிள்ளையினது அடியை வணங்கி யோக பாவம் கூறுகின்றனம்.

426

(இ - ள்.) குருவும், இலக்கினாதிபதியுங் கூடி 9-ல் நிற்கப்பெற்ற ஜாதகருக்கு நாவலர்கள் பாமழை பொழியவும், சத்திர சாமரை பொன்னாசனம் பொருந்திய சக்கரேஸ்பர யோக மடைவாராம்.

[2] சந்திரன் 4-க்குடையவரோடு சேர்ந்து 4-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு மேற்கூறிய பலனேயாம்.

[3] சுக்கிரனும், இராகுவுங் கூடி 7-ல் இருந்து வர்க்கோத்திரம் பெறினும் மேற்கூறிய பலனும்.

[4] 2-க்குடையவரும், குருவுங் கூடி புண்ணிய ஸ்தானமடைந்தாலும் மேற்கூறிய பலனேயாம்.

[5] சந்திரனுங் குருவுங் கூடி வர்க்க பலமடைந்து நல்ல ஸ்தான மடைந்தாலும் மேற்கூறிய பலனேயாம்.

[6] சூரியன் புதனோடு கூடி லக்கினத்தில் வர்க்கபல மடைந்தாலும் மேற்கூறிய பலனேயாம்.

## 427




(இ-ள்.) சர ராசிக்கு 10-பாகைக்குள்ளும், உபய ராசிக்கு 20-பாகைக்குமேல் 30-பாகைக்குள்ளும், ஸ்திர ராசிக்கு 10-பாகைக்குமேல் 20-பாகைக்குள் சந்திரனிற்கவும், அவரை புதன் முதலாகிய சுபக்கிரகங்களும், 4-க்குடையவரும் பார்க்கப் பெற்றாலும்.




[2] மேற்கூறிய ராசிகளே லக்கினமாகவும், அதில் சந்திரனிற்கவும், அச் சந்திரனை சுபர்கள் பார்க்கவும், லக்கினாதிபதி நட்பாக்ஷி உச்சத்திலாகிலும், ஸ்திர ராசி திரிகோண கேந்திராதிபரோடுங்கூடி சிறந்து நிற்கவும், இலக்கினாதிபனை குரு பார்க்கவும், பாபர் நோக்கமில்லாதிருக்கவும் பெற்ற 2-தரமுள்ள ஜாதகர் திரைகடலுடுத்திய புவியெல்லாஞ் செங்கோல் செலுத்துவனென்றும், இவன் அரண்மனையிற் றிருமகள் நடனமாடுவாளென்றுங் கூறியது.

## 428

(இ - ள்.) சூரியனும், புதனும் 4-ம் இடத்தில் நிற்கவும், சந்திரனுஞ் சனியுங்கூடி 10-ல் நிற்சவும், லக்கினத்திற் செவ்வாய் நிற்கவும், குருவுக்கு 1-5-9-ல் சுக்கிரன் நிற்கவும், சந்திரன் பூரண மடையவும், பாபர்கள் 6-8-12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் உலகோர் முடிவணங்கும் அரசனுய் ஆயுளோடு தர்மஞ் செய்து மகுத்துவம் பொருந்தி சிங்காசனத்தி லிருந்து நாமகள் பூமகள் விலாசனுப் வாழ்பவராம்.

| | சே | ல செ குரு | |
|---|---|---|---|
| சனி சந் | இராசிச் சக்கரம். | | |
| | | | சூ பு |
| | | ரா | சு |

## 429

(இ - ள்.) லக்கிஞதிபதியும், 4-9-க்குடையவர்களுமாகிய மூவரும் 9-ம் இடத்தில் நிற்கவும், 10-க்குடையவர் லக்கினத்தில் நிற்கவும், சுபர்கள் லக்கினத்தைப் பார்க்கவும் பெற்ற ஜாதகர் இப் பூமிக்கு அரசனே யாவனும்.

| சு-கு சு | | | சனி |
|---|---|---|---|
| கு | இராசிச் சக்கரம். | | செ ல |
| பு | | | |
| | | | |

[2] லக்கிஞதிபதியும் 11-9-க்குடையவர்களும் ஆகிய மூவரும் 10-ம் இடத்தில் நிர்சவும், 10-க்குடையவர் லக்கினத்தில் நிற்சவும், அவரை பாபர் பார்க்கா திருக்கவும் பெற்ற ஜாதகர் பிரகாசம் பொருந்திய நவரத்தினம் பதித்த சிங்காசனத்தி லமர்ந்து ரத-கஜ துரக முடைய ராஜனும்.

| பு செ சனி | | | ல குரு |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| சந் | | | |

## 340

(இ - ள்.) குருவுஞ் சுக்கிரனும் 9-க்குடையவருமாகிய மூவரும் அவரவர்கள் தனித்தனியாய் கேந்திர கோணங்களில் ஆகூஷி யுச்ச மடைந்து நிற்கவும், இவர்களை பாபர்கள் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகர் ரத்தின மகுடஞ் சூடி சிங்காசனமேறி செங்கோல்செலுத்துவனும்.

| குரு | | சு | பு |
|---|---|---|---|
| சனி | இராசிச் சக்கரம். | | சந் |
| | | | |
| | ல | | |

## பிரபல பாக்கிய யோகம்

### 431




(இ - ள்.) 4-க்குடையவர் 10-ல் நிற்கவும், 10-க்குடையவர் 3-க்குடையவருடைய நோக்க மடையவும், சுக்கிரன் குரு இவர்கள் சேர்ந்து திரிகோணமடையவும், 9-க்குடையவரும் 11-க்குடையவருங் கூடி நிற்கவும், அவர்களை குரு பார்க்கவும், பாபர்கள் 10-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் துரக பதாதிகளோடு சாமரை வீசவும் இந்திர சுகம் பெற்று தர்மத் தொழிலை அன்னியரால் செய்யத் தெரிந்து குடையளிக்குஞ் செங்கோ லுடையவனும்.

### 432




(இ - ள்.) சூரியன், சுக்கிரன், புதன் இவர்கள் கூடி லக்கினத்தில் நிற்கவும், 3-ல் சனி நிற்கவும், 4-ல் கேது நிற்கவும், 9-ல் சந்திரன் நிற்கவும், குரு, ராகு ஆகிய இருவரும் 10-ல் நிற்கவும், செவ்வாய் 11-ல் நிற்கவும் பெற்ற புண்ணிய ஜாதகர் லட்சுமீகரமுடையவராய் விஜயம் பெற்று மங்கள யோக மடைந்து பிரபுகளெல்லாம் பக்கஞ் சூழவும், மன்மத லீலா விநோதனாய் வாழ்பவராம்.

### 433




இ - ள்.) 9-4-க்குடையவர்கள் கூடி லக்கினத்தில் நிற்கவும், அவர்களை குரு அல்லது சுக்கிரனாகிலும் பார்க்கவும், 7-ம் இடத்தில் சந்திரன் நிற்கவும், அவரை பாபர் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகர் கன்னியமும், நிதிவாகனமும் பூமியும் ஓங்கி மேலான ஸ்திரீகள் கவரீ வீசும் பிரபுவா யிருந்து ஆயுள் விர்த்தியு முடையவ ராவராம்.

## 434

(இ - ள்.) சூரியன் 10-ல் நிற்கவும், 4-ல் சந்திரனும், லக்கினத்திற் குருவும் 11-க்குடையவருங் கூடி நிற்கவும், 9-க்குடையவர் 4-க்குடையவரோடு கூடி சிறப்படைந்து நிற்கவும், பாபர்கள் பலங் குறையவும், 2-க்குடையவர் தேவாங்கிஷ மேறி நிற்கவும் பெற்ற ஜாதகன் தனயோக முடையவராம்.

| கு | | | ல செ குரு |
|---|---|---|---|
| சனி பு | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| | | | சந் |

## 435

(இ - ள்.) 4-க்குடையவர் ஆக்ஷி யடையவும், அதற்கு 4-க்குடையவர் லக்கினத்தில் நிற்கவும், அவரை குரு பார்க்கவும், இதில் 4-9-க்குடையவர்கள் தேவாங்கிஷமேறி நிற்கவும் பெற்ற ஜாதகர் ஜெகபதி யென்றும் உலகர் புகழ சிங்காசனத்தில் இருப்பவராம்.

| | ல சு | | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | சந் |
| | | | |
| | | குரு | |

## 436

(இ - ள்.) 4-9-க்குடையவர்கள் கூடி வலுத்த தேவாங்கிஷத்தில் பல மடையவும், 3-க்குடையவரும் செவ்வாயும் திரிகோண கேந்திரங்களில் உச்ச மடையவும் பெற்ற ஜாதகர் அஷ்ட லட்சுமீகரம் பொருந்தி அரண்மனையிற் சென்று நரக வாகனம் பெற்று வாழ்பவராம்.

| | | | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | குரு |
| செ | | | |
| | | ல-பு சனி | |

## 437

(இ- ள்.) 4-க்குடையவர் கோபுராங்கிச மேறவும், 9-11-10-க்குடையவர்கள் ஆகிய மூவரும் பார்க்கவும் பெற்ற ஜாதகன் மங்களகரமான கிரகத்தி லிருந்து ஸ்திரீகள் குங்கும மிருகமத வாசனை பொருந்திய துணையோடுங் கூடி ஸ்தன்னியத்திற் சதா கண் வளரும் சுக முடையவனேயாம்.

[2] 5-9-க்குடையவர்கள் கூடி திரிகோண கேந்திரத்தில் நின்றாலும் மேற்கூறிய பலனும்.

## கனபாக்கிய யோகம்

### 438




(இ - ள்.) மிதுனமே லக்கினமாக அதற்குடைய புதன் 2-ம் இடத்திற் சுக்கிரனோடு கூடி நிற்கவும், லக்கினத்திற் சந்திரன் மாறி நிற்கவும், குரு சுக்கிரனுக்கு 5-ல் நிற்கவும், சூரியன் சந்திரனோடு கூடவும், செவ்வாய், ராகு, சனி இவர்கள் 12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் பாக்கியவானு யிருக்கினும் தர்மத்தைக் கற்று அறியாதவனெனினும் அண்டினவருக்கு உதவி செய்பவரென்றுங் கூறிபதில் சுயார்ச்சிதம் பெற்று நஞ்சை புஞ்சை நிலங்களோடும் அஸ்வ யோகம் பெற்று வாழ்வாரும்.

### 439




(இ - ள்.) லக்கினதிபதி 3-க்குடையவரோடு கூடி சந்திரனுக்கு 7-ல் நிற்கவும், சந்திரன் 11-ல் நிற்கவும், சுக்கிரன் சுக கேந்திரமடையவும் குடும்பத்திற் குரு உச்சமடையவும், 9-க்குடையவர் சந்திரனுக்கு 9-ல் நிற்கவும், செவ்வாய் ஆக்ஷி பெற்றிருக்கவும், அவரை குரு பார்க்கவும், ராகு கேதுக்கள் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகர் பாக்கியமும், சற்குணமும், சத்தியமும் பிதாவுக்கு உத்தமனுகவும் வாழ்பவரும்.

## தனபாக்கிய யோகம்

### 440




(இ - ள்.) சந்திர லக்கினதிபதி 7-ம் இடத்திற்குகேந்திரமடைந்து குரு வீக்ஷண்ய மடையவும், 9-ம் இடத்தில் ராகு நிற்கவும், அவரை குரு பார்க்கவும் குரு லக்கினத்தில் நிற்கவும், சந்திரன் 4-ம் இடத்தில் நிற்கவும், 3-ல் கேது தனித்து நிற்கவும் பெற்ற ஜாதகர் இந்திர செல்வனுய் ஸ்ரீ ராமருக்கு தம்பி வாய்த்தது போலவும், குரு

திசையில் நல்ல புத்திரன் கிடைக்குமென்றும் அன்னியரை நோகச் செய்யா னென்றுங் கூறியது.

## பிரபுத்வ யோகம்

### 441

(இ - ள்.) 9-க்குடையவர் ஆக்ஷி பெற்றும், 2-க்குடையவர் 5-ல் நிற்கவும், லக்கினாதிபதி புதன் 5-க்குடையவர் கூடி நிற்கவும், அவர்களை குரு பார்க்கவும், சந்திர திரிகோணத்திற் சனி ஆக்ஷி பெற்று நிற்கவும், ராகு 7-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் லக்ஷாதிபதியாகி அன்பே களத்திரமாய்க் கிடைத்து அதுவால் நல்ல புத்திரர் பலரைப் பெற்று அவர்களாலும் சுகமடைந்து பூரண ஆயுளையும் பெற்று மகா விஷ்ணுவுக்கு அடிமை யுடையவ னெனவுங் கூறியது.

| | | | |
|---|---|---|---|
| குரு | ல கே | | |
| | இராசிச் சக்கரம். | | |
| சனி சந் | | | சு |
| | | ரா | சூ-பு செ |

### 442

(இ - ள்.) செவ்வாய் வீடே லக்கினமாக அதற்குடைய செவ்வாய் கேந்திரமடையவும் அக் கேந்திராதிபதி 11-ம் இடத்தில் நிற்கவும், 11-க்குடையவர் கேந்திரமடையவும், 10-க்குடையவர் சுக்கிரனோடு கூடி 6-ல் நிற்கவும், 2-க்குடையவர் லக்கினத்தில் நிற்கவும், சந்திரன் கேந்திர மடையவும், 6-12-ல ராகு கேது நிற்கவும் பெற்ற சுகிர்தமான ஜாதகருக்கு சுதந்தர ராஜ யோகனாகி தன்னை யடுத்தவர்களுக்கு கர்ப்பகத் தருவைப் போலும் கொடையாளியாகி பல இதிகாச நூலாராய்ந்திடும் துணிவாள னென்றுங் கூறியது.

| | | | |
|---|---|---|---|
| | சூ-சு கே | சந் பு | |
| செ | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| | ல குரு | ரா | சனி |

### 443

(இ - ள்.) துலா லக்கினத்திற் ஜனனமாக லக்கினாதிபதி சூரியனோடு கூடி 2-ல் நிற்கவும், லக்கினத்திற் புதன் நிற்கவும், சனி 8-ல் அமரவும், செவ்வாய் சந்திரனோடு கூடி 3-லிருக்கவும், 6-க்குடையவர் கேந்திரத்தில் ஏகனா யிருக்கவும், ராகு 7-ல தனித்து நிற்கவும் பெற்றஜாதகன் கலவியிற் சிறந்தவராயும் தயாளத்தோடு கைதொட்டு காப்பாற்றுவ

| | | | |
|---|---|---|---|
| | ரா | சனி | |
| | இராசிச் சக்கரம் | | |
| குரு | | | |
| சந் செ | சு சூ | ல-பு கே | |

னென்றும் மேலோர்கள் சலாஞ்செய்து வணங்கும் ஜனன முடையவ ரென்றும், மதியூகத்திற் சிறந்தவ ரென்றும், சத்திய வசன முடையவ ரென்றும். பிதாவைப் பார்க்கினும் நூறு மடங்கு ஜாஸ்தி யுடையவ ரென்றுங் கூறப்பட்டது.

## தன யோகம்

### 444




(இ - ள்.) இலக்கினத்திற் சூரிய னிற்கவும், 5-ல் இராகு நிற்கவும், சந்திரன் 8-ல் அமரவும், 10-ம் இடத்திற் குரு நிற்கவும், 11-ல் கேது சனி அமரவும், 12-ம் இடத்திற் செவ்வாய், சுக்கிரன், புதன் ஆகிய மூவருங் கூடி நிற்கவும் பெற்ற ஜாதகர் சேஷ்டரை பொருளாக மதித்தவராயும், தர்ம சிந்தனை யுடையவராயும், வாக்குத் தவாத வராயும், யூக முடையவராயும், நல்ல மனைவியைக் கிடைத்து மேல் வீடு வாசமுள்ளவ ரென்றுங் கூறியது.

### 445




(இ - ள்.) 4-க்குடையவர் 8-ல் நிற்கவும், 11-ம் இடத்தில் 2-க்குடையவர் நிற்கவும், இவரை குரு பார்க்கப் பெற்றாலும்,

[2] சந்திரனும், இலக்கினாதிபதியும், குருவும், சுக்கிரனும் ஆகிய நால்வரும் திரிகோண கேந்திரத்தில் உச்சமடைந்து நிற்கப் பெற்றாலும்,

[3] சனி 10-ம் இடத்தில் உச்சம் பெறவும், அவருக்கு இலக்கினாதிபதி சுபர்கள் பார்வையடையவும் பெற்ற ஜாதகர்கள் பாக்கியவானென்றும் பெயரிருக்கினும் தருமங் கொடானென்னும் கூறியது.

77

## பிரபுத்வ யோகம்

### 446

(இ - ள்.) சந்திரன், சுக்கிரன், குரு இம் மூவருங் கூடி 2-ல் நிற்கவும், அவர்களை 9-க்குரியவர் பார்க்கவும், 12-க்குடையவர் 3-ல் நிற்கவும், இராகு 10-ல் அமர்ந்து நிற்கப்பெற்ற ஜாதகன் இராஜனென்று சொல்வதுமன்றி எதிரில்லாக் கொடையாளியென்றும், கடவுளடியை மறவாதவ ரென்றும், கல்வியின் றுரையை முற்றிலு மறிந்தவனென்றும், வசீகரமுள்ளவ னென்றுங் கூறியது.

| | | | |
|---|---|---|---|
| | | ல | சந் சு குரு |
| ரா | இராசிச் | | செ |
| | சக்கரம். | | கே |
| சனி | | | |

### 447

(இ - ள்.) இலக்கினாதிபதி இலக்கினத்தில் நிற்கவும், புதன் 12-ம் இடத்தில் நிற்கவும், 9-2-க்குடையவர்கள் கூடி 4-ல் நிற்கவும், அவர்களை சூரியன் பார்க்கவும், 4-க்குடையவர் 9-ல் அமரவும், அவரை பாபர் நீசர்கள் கூடாதிருக்கவும் பெற்ற ஜாதகர் பூமிக்கரசனும் திட சரீரமும், பந்துக்கள் சேகர களத்திர சுக முள்ளவனும்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சந் குரு | இராசிச் | | சனி |
| | சக்கரம். | | சூ சு |
| | ல செ | பு | |

### 448

(இ - ள்.) இலக்கினத்திற் குருவும், 6-ம் இடத்திற் சுக்கிரனும், 5-ம் இடத்திற் சந்திரனும், கேதுவும் நிற்கவும், 9-ல் புதன் நிற்கவும், சனி செவ்வாய் இருவருங் கூடி கேந்திரமடையவும், 8-ல் சூரியனிற்கவும் பெற்ற ஜாதகர் இராஜ சமானம்பெற்று வீரமுந் தீரமும் பொருந்தி வித்வ சேகரனாய் மிகுந்த கொடையாளியாய் கெடாத செலவமும், புகழு முடையவராம்.

| | | | |
|---|---|---|---|
| செ சனி | சூ | பு | |
| சு | இராசிச் | | ரா |
| சந் கே | சக்கரம். | | |
| | | | ல குரு |

## 449

(இ-ள்.) குருவின் வீடு இலக்கினமாகவும், குரு 11-ல் நிற்கவும், 10-ம் இடத்திற் கேது, செவ்வாய் கூடவும், 3-ம் இடத்திற் புதன், சூரியன் நிற்கவும், 4-ம் இடத்திற் சுக்கிரன் இராகுவோடு கூடி நிற்கவும், சந்திரன், சனி 12-ல் அமரவும் பெற்ற ஜாதகர் தருமனையும், புஜபலமுடையவராயும், கல்வி வினையமுள்ளவரெனவுங் கூறியது.

| ரா சு | | | |
|---|---|---|---|
| சூ பு | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| ல | சனி சந் | குரு | கே செ |

## 450

(இ-ள்.) புதன் வீடு இலக்கினமாகவும், புதன் கேந்திரமடையவும், புதனுக்கு 2-ம் இடத்திற் செவ்வாய், சூரியன், சுக்கிரன் கூடி ஆக்ஷி உச்சமடையவும், அல்லது குருவுக்கு கேந்திரம் பெறவும், சுக்கிரன் மனைக்கு திரிகோண கேந்திரத்திற் குரு நிற்கவும், சந்திரன் 11-ல் கேதுவோடு கூடி நிற்கவும், அவரை குரு பார்க்கவும்; குரு விருந்த ராசியாதியும், குருவும் மாறி நிற்கவும் பெற்ற ஜாதகர் தமிழ் வித்வானென்றும், இனிய மனையாளுடையவரெனவுங் கூறியது.

| பு | சூ-சு செ | | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம் | | சந் கே |
| குரு | | | |
| சனி | | | ல |

## 451

(இ-ள்.) சுக்கிரன் வீடு இலக்கினமாக சுக்கிரன், குரு, சந்திரனுடன் கூடி ஆக்ஷி பெற்று இலக்கினத்தில் நிற்கவும், இராகு, சூரியன், செவ்வாய் கூடி 2-ல் நிற்கவும், புதன் 3-ல் அமரவும், 12-ல் சனி நிற்கவும் பெற்ற ஜாதகர் குருவருளால கலவியும் மேன்மையும், ஆயுளும் பெற்று வாழ்பவராம்.

| | | கே | |
|---|---|---|---|
| | இராசிச் சக்காம். | | |
| | | | |
| பு | சூ ரா செ | ல சசு குரு | சனி |

## விற்பன்ன யோகம்

### 452

(இ - ள்.) சந்திரன் வீடே லக்கினமாக சந்திரன் 4-ல் நிற்கவும், புதன் 2-ல் அமரவும், சுக்கிரனுக்கு 11-ல் குரு நிற்கவும், சூரியன் லக்கினத்தில் நிற்கவும், ராகு 10-ல் நிற்கவும், செவ்வாய் சந்திரனுக்கு 1-5-9-ல் நிற்கவும், சனி 3-ல் அமரவும், சுக்கிரன் புதனுக்கு 11-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் வித்தை யுடையவனும், குரு அருளும், லட்சுமீகர முடையவ ரென்றும் கூறியது.

| | குரு ரா | | சு |
|---|---|---|---|
| செ | இராசிச் | சக்கரம். | ல சூ |
| | | | பு |
| | | சந் கே | சனி |

### 453

(இ - ள்.) லக்கினாதிபதி லக்கினத்தில் ஆக்ஷி பெறவும், 2-க்குடையவரும், ஆக்ஷியடையவும், 4-ல் சந்திரன் அமரவும், 7-க்குடையவர் ஆக்ஷி பெறவும், 2-ம் இடத்தில் 4-க்குடையவர் நிற்கவும், 11-க்குடையவர் 5-ல் அமரவும், 9-க்குடையவர் சந்திரனுக்கு 9-ல் நிற்கவும், கேது 9-ல் அமர்ந்திருக்கப் பெற்ற ஜாதகர் தத்துவ கலை ஞானங்களுக்கு தலைவனாகி சற்குண முடையவராயும், வித்வசேகரனாயும், கைலைவாழ் சிவபெருமானுக்கு ஏகாந்தனாயும், ராஜர்களுக்கு நேத்திரமாகவும் வாழ்பவராம்.

| | செ சனி | ல சு | பு சூ |
|---|---|---|---|
| | இராசிச் | | ரா |
| கே | | சக்கரம். | சந் |
| | | | குரு |

### 454

(இ - ள்.) 9-க்குடையவர் ஆக்ஷி உச்சமடையவும், 4-க்குடையவர் 11-க்குடையவருடன் கூடி 12-ல் நிற்கவும், 2-ல் குரு அமரவும், சந்திரன் 11-ல் நிற்கவும், 2-க்குடையவரை குரு பார்க்கவும், கேது கேந்திரமடையவும், அவரை சுக்கிரன் பார்க்கவும், லக்கினாதிபதி லக்கினத்தில் ஆக்ஷி யடையவும் பெற்ற ஜாதகர் ஆயுளுள்ள வரையில் தமையனை தந்தை ஆசிரியனைப்போலும் பணிவிடை புரிந்து சிவபிரானுக் கடிமையாய் கல்வி அமிர்த வாக்குடையவராம்.

| | கே | செ | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| | சக்கரம். | | சந் |
| | குரு | ல சு-ரா | பு-சூ சனி |

## 455




(இ - ள்.) 2-ல் புத னிற்கவும், 4-ல் சந்திர னமரவும், குரு சந்திரனுக்கு கேந்திரத்திலேனும், லக்கினத்திற்கு 10-லேனும் நிற்கவும், 11-க்குடையவர் சந்திரனுக்கு 9-ல் அமரவும், 2-க்குடையவர் லக்கினத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகர் புலவர்கள் சிகாமணியாவாராம்.

## 456




(இ - ள்.) 2-க்குடையவர் சந்திரனுக்கு 2-ல் நிற்கவும், 4-க்குடையவர் லக்கின மேறவும், புதன் 9-ல் அமரவும், சந்திரன் 5-ல் நிற்கவும், 5-க்குடையவர் செவ்வாயோடு கூடி நிற்கவும் பெற்ற ஜாதகன் ராஜகுமாரனைப்போல் இதிகாச காவிய நூற்கரை கடந்தவராயும் குணவானெனவுங் கூறியது.

## 457




(இ - ள்.) சந்திரனுக்கு கேந்திர ஸ்தானத்தில் 9-க்குடையவரும் புதனும் கூடி நிற்கவும், 4-ம் இடத்திற் சுக்கிரன் அமரவும், 11-ல் குரு நிற்கவும், 2-க்குடையவர் சந்திரனோடு கூடி குருவுக்கு 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் இலக்கிய லக்ஷணமும் வட்சுமீகரமுமுள்ளவராம்.

# ஜோதிட வித்வ யோகம்

## 458




(இ - ள்.) 2-க்குடையவர் சந்திரனுக்கு 6-ம் இடத்தில் அரவோடு கூடி நிற்கவும், 4-ம் இடத்திற் சுக்கிரன் நிற்கவும், சூரியனும் புதனுங் கூடி 5-ல் அமரவும், குரு கேந்திர மடையவும் பெற்ற யோக்கிய ஜாதகன் ஜோதிட நூற்கு சுக்கிரன் அகஸ்தியர் குமாரவேள் இவர்களுக் கொப்பானவராம்.

## 459

(இ - ள்.) புதன் கேந்திரத்தில் நிற்கவும், 2-க்குடையவர் உச்ச படையவும், சுக்கிரன் உபய ராசியில் நிற்கவும், சுபர்கள் 3-ம் இடத்தில் நிற்கவும், அவரை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் உலகம் புகழத்தக்க ஜோதிட வித்வா னுவானும்.

| சு | சூ பு | | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | ல |
| | | | |
| | | | குரு சந் |

## 460

(இ - ள்.) சந்திரனுங் குருவும் ஒருவருக்கொருவர் கேந்திர மடையவும், 2-ல் புதன் அமரவும், புதனுக்கு 11-ல் சுக்கிரனிற்கவும் பெற்ற ஜாதகர் சோதிட வித்துவா னுவானும்.

| குரு | | சு | ல |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | பு |
| | | | |
| | | | சந் |

மேற்கூறிய கிரகங்கள் மேற்கூறிய வண்ணமிருந்து வர்க்கேந்திரங்களில் வலுப்பெற் றிருந்தால் இச் சாதகர் கலைஞான பண்டிதனென்றுங் கூறப்படும்.

## பிரபல விற்பன்ன யோகம்

## 461

(இ - ள்.) சந்திரனும், குருவும் 2-க்குடையவருமாகிய மூவரும் திரிகோண கேந்திரங்களில் ஆக்ஷி பெற்று நிற்கவும், சிலர் உச்ச பலமடையவும், சுபர்கள் பார்க்கவும் பெற்றஜாதகர் தர்க்கீகத்திற்கும், இலக்கண இலக்கியத்திற்கும், வித்துவானெனவும் மேற்கூறியவர்கள் வர்க்கோத்தமங்களில் சிறந்து நிற்கில் மதுரவாக்குள்ளவனு மாவானும்.

| ல | | பு சு | சூ |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம் | | சந் குரு |
| | | | |
| செ | | | |

## சமவிற்பன்ன யோகம்

### 462

(இ - ள்.) 11-ம் இடத்திற் குரு நிற்கவும், குருவுக்கு 2-ல் சந்திரனும், சந்திரனுக்கு 4-ல் புதனும், புதனுக்கு 2-ல் சுக்கிரனும் நிற்கவும் பெற்ற ஜாதகர் வேதாந்த பனுவல கண்ட வித்துவானும். மேற்கூறியவர்கள் வர்க்கோத்தமங்களில் பொருந்தி நிற்கில் தார்க்கிகத்திலும் இலக்கண இலக்கிய நூலிலும் வல்லவனும்.




### 463

(இ - ள்.) 9-ம் இடத்திற் புதனிற்கவும், புதனுக்கு 9-ல் சந்திரனும், சந்திரனுக்கு 9-ல் குருவும் நிற்கவும் பெற்ற ஜாதகர் பெருநூலாகிய மகா வாக்கியங்களைப் புகல வல்லவனும். முற்கூறிய தேவ வர்க்கோத்தமங்களில் நிற்கவும் பெற்றால் கல்லாத கலையுந் தெரிந்தவனும்.




## பிரபல விற்பன்ன யோகம்

### 464

(இ - ள்.) சனி யில்லாது சுபக் கிரகங்கள் கூடி உத்தமாங்கிசத்தில் நிற்கவும், 2-ம் இடத்திற் புதன், குரு, சுக்கிரன் ஆகிய சுபர்கள் கூடி மேற் கூறிய பலத்தோடு நிற்கவும் பெற்ற ஜாதகர் சிறந்த கல்விமானுவனும். சுக்கிரன், குரு, புதன் வர்க்கோத்தமேறில், இலக்கண இலக்கிய நூலிலும் வல்லவனும்.

### 465

(இ - ள்.) 2-க்குடையவரும், குருவும் புதனுமாகிய மூவருங் கூடி 1-5-9-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் மிகுந்த கல்விமானெனவுங்

கூறியது. மேற் கூறிய கிரகங்கள் வர்க்கோத்திரங்களில் சிதராமலும் பாபர்கள் நோக்க மில்லாமலும், இருக்கில் பல நூற்களுக்கும் உரை செய்யும் வலிமை யுடையவனும்.

## 466

(இ - ள்.) குருவும் 7-க்குடையவரும் புதனுமாகிய மூவரும் கேந்திர கோணங்களில் நிற்கவும் பெற்ற ஜாதகர் இராஜ சபை ஏறத் தக்க வல்லப வித்துவ னுவனும். மேற்கூறிய கிரகங்கள் தனது மனையி லாகிலும், 2-ம் மனையிலாகிலும் நிற்பாராகில் மேற்கூறியவற்றோடு தார்க்கீக நூற்களை இயற்றும் வல்லவ னுவனும்.

## 467

(இ - ள்.) சந்திரனுக்கு கேந்திரத்திற் குருவும், லக்கினுதிபதி கேந்திரத்திலு மிருக்கவும் பெற்ற ஜாதகர் இலக்கண இலக்கிய காவி யமு மியற்றுவனும். மேற்கூறிய கிரகங்கள் வர்க்க முயர்ந்து சிறப் படைந்தால யாவருக்கு மேலான வித்துவா னுவாராம்.

## யோக்யதா யோகம்

## 468

(இ - ள்.) 3-2-12-க் குடையவராகிய மூவருங் கூடி குருவுக்கு கேந்திரமடையவும், 4-க்குடையவர் திரிகோண மேறவும், புதன் கேந்திர மடையவும், சந்திரன் 11-ம் இடத் தில் நிற்கவும் பெற்ற ஜாதகர் அமுத கவி பாடுவனென்றும் மனைவி சுகிர்தமும், கீர்த் தியு முடையவ ராவராம்.

| | | | |
|---|---|---|---|
| பு | சூ-சு<br>செ | | |
| | இராசிச்<br>சக்கரம். | | சந் |
| குரு | | | |
| | | | ல |

## 469

(இ - ள்.) குரு லக்கினுதிபதி 11-க் குடையவர் ஆகிய மூவரும் கூடி கேந்திர திரி கோண மேறவும், 9-க்குடையவர் 3-ல் நிற்க வும், 2-ல் சூரியனும் செவ்வாயுஞ் சிறப்படை ந்து நிற்கவும், அவர்களுக்கு 11-ம் இடத்தில் 4-க்குடையவர் நிற்கவும் பெற்ற ஜாதகர் சிவ பெருமான் கிருபையால் கல்வியும், இன்ப மும் வாக்குறுதியு முடையவ ராவராம்.

| | | | |
|---|---|---|---|
| | | கே | |
| | இராசிச்<br>சக்கரம். | | |
| | | | |
| பு | சூ-ரா<br>செ | கு-ச<br>சு-ல | சனி |

## 470

(இ - ள்.) 2-ம் இடத்தில் புதன் நிற்கவும், 2-க்குடையவர் லக்கினத்தி லமரவும், லக்கினாதிபதி கேந்திர மடையவும், 9-க்குடையவர் 10-ல் நிற்கவும், 4-க்குடையவர் 12-ல் அமரவும், கேந்திரங்களில் சுபர்கள் நிற்கவும் பெற்ற ஜாதகன் ஆயுள் வரையில் யோக்கிய பாக்கிய சிலாக்கிய கவ்விமானவனாம்.




## 471

(இ - ள்.) 4-க்குடையவர் 1-5-9-ல் வலுத்து நிற்கவும், அவர் இருந்த ராசியாதிபதி 4-ம் இடத்தில் நிற்கவும், 9-க்குடையவர் 12-ல் அமரவும், அல்லாமல் சந்திர கேந்திரமு மடையவும், சந்திரன் நின்ற ராசிநாதன் ஆகூஷி பெற்ற செவ்வாயோடு கூடவும், குரு கேந்திரம் நிற்கவும் பெற்ற ஜாதகன் இலக்ஷிமி சரஸ்வதி கிருபை யுண்டாகி கல்வித் தன்மைக்கு ஆசிரியனாவனாம்.




## விற்பன்ன யோகம்

## 472

(இ - ள்.) 4-9-க்குடையவர்கள் 11-ம் இடத்தில் நிற்கவும், 5-3-7-க்குடையவர்களாகிய மூவருங் கூடி 10-ம் இடத்தில் நிற்கவும், சந்திரன் 7-ல் கேந்திர மடையவும், 2-க்குடையவர் 1-5-9-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் மன்மத வடிவனாய் இலக்ஷிமி சரஸ்வதியின் வாஞ்சை யுடையவனாய் வாழ்பவனாம்.



## 473

(இ - ள்.) 9-க்குடையவர் லக்கினத்தில் நிற்கவும், லக்கினுதிபதி 11-க்குடையவரோடு கூடி 2-ல் நிற்கவும், 4-ம் இடத்திற் குரு நிற்கவும், சந்திரனோடு 2-க்குடையவர் கூடி 3-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் மிகுந்த யூகவானுயும், வாகட வித்தையில் தேர்ந்தவரெனவும், மதிப்புள்ளவ ரெனவும் கூறலாயிற்று.

| | | | |
|---|---|---|---|
| | . | | |
| | இராசிச் சக்கரம். | | |
| குரு | | | |
| சந்<br>செ | சு<br>சூ | ல<br>பு | |

## 474

(இ - ள்.) 4-2-க்குடையவர்கள் கூடி 2-ல் நிற்கவும், குரு 5-ம் இடத்தில் நிற்கவும், 9-க்குடையவர் ஆகூஷி பெற்ற செவ்வாயோடு கூடி 12-ல் அமரவும், லக்கினுதிபதி லக்கிணத்தில் ஆகூஷி யடையவும் பெற்ற ஜாதகர் கவிதை மழை பொழியும் மேக மெனவும், புலவர்களுக்கு சேகரனும் வாழ்பவனும்.

| | | | |
|---|---|---|---|
| | செ<br>சனி | ல<br>சு | பு<br>சூ |
| | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| | | | குரு |

## 475

(இ - ள்.) குரு 2-ல் நிற்கவும், 7-ல் கேது நிற்கவும், 9-4-11-க் குடையவர்களாகிய மூவருங் கூடி 12-ல் நிற்கவும். சந்திரன் 11-ல் அமரவும் பெற்ற ஜாதகர் கல்வி, செல்வம், வாக்கு வசனுமிர்த முடையவராம்.

| | | | |
|---|---|---|---|
| | கே | | |
| | இராசிச் சக்கரம். | | |
| | | | சந் |
| | குரு | ல<br>சு-ரா | சூ-பு<br>சனி |

## 476

(இ - ள்.) லக்கினத்திற் புதனிற்கவும், 7-ல் ராகு அமரவும், மூன்றுமிடத்திற் சந்திரன் செவ்வாயோடு கூடி நிற்கவும், குரு கேந்திர மடையவும், சுக்கிரன் ஆகூஷி யடையவும் பெற்ற ஜாதகர் ராஜயோக மென்பதற்கு ஐயமில்லாமலும் வாகட நூலினும் வல்லவனுவனும்.

| | | | |
|---|---|---|---|
| | ரா | | |
| | இராசிச் சக்கரம். | | |
| குரு | | | |
| சந்<br>செ | | ல கே<br>பு-சு | |

## அதிகார யோகம்

### 477

(இ - ள்.) 9-க்குடையவருக்கு 11-ல் லக்கினாதிபதி நிற்கவும், 9-ம் இடத்தில் 4-க்குடையவர் நின்று சேவாம்சங்களில் பரிபூர்ண பலமடைந்து கேந்திராதிபதிகளையும், சந்திரனையுஞ் சேர்த்து நிற்கவும் பெற்ற ஜாதகன் பாக்கியவானாய் இவ்வுலகிற் பெரிய தனமுடையராகி, நர வாகனம் பெற்று அதிகாரியாய் சில பூமிகளை ஆள்வாராம்.

### 478

| | | | |
|---|---|---|---|
| | சனி | குரு | |
| ரா செ | இராசிச் சக்கரம். | | |
| | | | சூ கே |
| | | | சு-பு சந் ல |

(இ - ள்.) சந்திரன், புதன், சுக்கிரன் இவர்கள் கூடி லக்கினத்தில் நிற்கவும், 9-ம் இடத்திற் குரு நிற்கவும், பாபர்கள் 6-8-12-ல் அமரவும் பெற்ற ஜாதகர் பொன் சிகரங் கட்டிய வீட்டில் துரக பதாதிகளோடு வாழ்பவனும்.

### 479

(இ - ள்.) 2-க்குடையவரும், 12-க்குடையவருங் கூடி திரிகோண கேந்திரத்தில் ஆக்ஷி யுச்சமடையவும், அல்லது லக்கினத்தில் நிற்கவும், அவரை 9-க்குடையவர் பார்க்கவும், 10-க்குடையவரோடு 11-க்குரியவர் கூடி 4-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் செல்வமும், சத்துரு ஜெயமும் பெற்று வாழ்வாராம்.

### 480

| | | | |
|---|---|---|---|
| | | ல | குரு செ |
| | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| சு சந் | | சனி | பு |

(இ - ள்.) இரண்டு கிரகம் உச்சமடையவும், 9-ம் இடத்தில் 2-சுபக் கிரகங்கள் நிற்கவும், இந் நால்வரையும் லக்கினாதிபதியும் 9-க்குடையவரும் கூடி பார்க்கவும் பெற்ற ஜாதகர் சதுரங்கபல சேனையோடு வாழ்பவராம்.

(இ - ள்.) இதில் 10-11க்குடையவர்கள் கூடி சிங்காசனாங்கிஷமேறி நிற்கவும், அவர்களை சூரியனும் லக்கினாதிபதியும் பார்க்கப் பெற்றாலும் மேற்கூறிய பலனேயாம்.

## 481




(இ - ள்.) சந்திரனுக்கு 4-ல் சுக்கிர னிற்கவும், இலக்கினாதிபதி 3-க்குடையவர் குரு, 6-க்குடையவர் இராகு இவர்கள் கூடி 9-ல் நிற்கவும் பெற்ற ஜாதகா நீண்ட வாழ் வோடு நெடுநா ளிருப்பவனும்.

[2] இலக்கினாதிபதி ஆக்ஷியடையவும், அல்லது 2-க்குடையவ ரோடு கூடி 2-ல் நிற்கவும், 4-ம் இடத்தை 8-க்குடையவர் நோக்க வும் பெற்ற ஜாதகர் இராஜயோக அதிகார தீர துரந்தர னுவானும்.

## 482

(இ - ள்.) 4-க்குடையவரும், சுக்கிரனுங் கூடி திரிகோண கேந்திரங்களில் நிற்கவும், 4-ம் இடத்திற் சுக்கிரன் வலுக்கொண்டு நிற்கவும், அவரோடு குரு லக்கினாதிபதி கூடி நிற்கவும், 3-ம் இடத் திற் சந்திர னிற்கவும் பெற்ற இரண்டு தாரமுள்ள ஜாதகர்கள் இந்தி ரன்போலும் வாழ்வு பெற்று சிங்கார மாளிகையில இலட்சுமி கிருபை பெற்று வாழ்பவராம்.

## 483




(இ - ள்.) 10-க்குடையவர் 7-ல் இரு ந்து இலக்கினாதிபதியைப் பார்க்கவும், 5-க் குடையவர் கேந்திர மடையவும், 11-க்குரிய வர் 10-ம் இடத்தில நிற்கவும், இவரை 6-க் குடையவரும், 8-க்குடையவரும் பார்க்கா திருக்கவும் பெற்ற ஜாதகர் இராஜனுக்கு மந் திரியாயும். இலட்சுமீகர முடையவரு மாவ ராம்.

## வாகனாதிகார யோகம்

### 484

(இ - ள்.) 9-க்குடையவர் திரிகோண கேந்திரங்களில் உச்சமடையவும், 2-க்குடையவர் 5-ல் நிற்கவும், இவர்களை சுக்கிரனும், குருவும் பார்க்கவும் பெற்ற ஜாதகர் உண்மையான செல்வத்தோடுங் கூடி வாழ்வனும்.




[2] 4-க்குடையவர்கள் கூடி பாபவர்க்கமின்றி வைசேடிகாங்கிசத்திற் பலனடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகர் சுகதன வாகனம் பெற்று அதிகார னுவானும்.

### 485

(இ - ள்.) தனுசில் குருவும், மீனத்திற் சுக்கிரனும், 5-ல் சூரியனும், 10-ல் இராகுவும் நிற்கவும், இவர்களை சுபர்கள் கூடி நிற்கவும் பெற்ற ஜாதகருக்கும், 3-4-10-க் குரியவராகிய மூவருங் கூடி 5-10-ம் இடங்களில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்குந் தண்டிகா யோகமுடைய தனவான்களெனவுங் கூறியது.




### 486

(இ - ள்.) 1-4-9-க்குடையவராகிய மூவருங் கூடி 10-ம் இடத்தில் நிற்கவும், 10-க்குடையவர் இலக்கினத்தி லமரவும், மேற்கூறிய கிரகங்கள் பாப நீசவர்க்கங்களும், அத்தமன முதலிய பங்கமில்லாதிருக்கவும் பெற்ற ஜாதகர் ரத கஜ துரக பதாதி யுடையவராம்.

## 487

(இ - ள்.) சுக்கிரன், குரு, சந்திரன், 7-க்குடையவராகிய நால்வரும் இலக்கினத்திலாகினும், மற்ற கேந்திரங்களிலாகினும் வர்க்கதோஷ மில்லா திருக்கவும், அவர்களை நல்லவர்கள் பார்க்கவும், சூரியன் உச்ச மடையவும் பெற்ற ஜாதகர் வெண் குதிரை கட்டுந் தேரேறி பிரபு மக்களெல்லாம் முன்னும் பின்னும் சூழ்ந்து வருவார்களாம்.

| லசகு புசு | சூ | | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| | | | |

## 488

(இ - ள்.) 9-10-5-4-க்குடையவராகிய நால்வரும் உத்தமவர்க்கோத்திர மடைந்து சுபக்கோள்கள் பார்க்கப் பெற்றாலும்,

[2] 4-க்குடையவரும், சுக்கிரனுங் கூடி சூரியனுக்கு 10-ல் இருந்து வர்க்கோத்திர பலமடைந்து நிற்கப்பெற்றாலும், இவ்விரண்டு ஜாதகர்களும் துரகபதாதிகளோடு இந்திர செல்வமுடையவர்களாம்.

## 489

(இ - ள்.) குருவும், புதனும் கேந்திரமடையவும், சுக்கிரன் இலக்கினத்தில் நிற்கவும், சந்திரன் இலக்கினுதிபதி இவர்கள் கூடி 4-ல் இருந்து வர்க்கோத்திர பல மடைந்தாலும்,

[2] குரு 12-ல் நிற்கவும், 4-ல் சுக்கிரன் அமரவும், அவரை இலக்கினுதிபதி பார்த்தாலும்,

[3] சுக்கிரன் தசாங்கிஷ மேறவும், சந்திரனுக்கு 10-ல் குரு நட்போடிருக்கவும் பெற்ற இம் மூன்று ஜாதகர்களும் சதுரங்கபல சேனைகளோடு வாழ்பவர்களாம்.

## 490

(இ - ள்.) சந்திரனுக்கு 8-ம் இடத்திற் சுக்கிர னிற்கவும், இலக்கினத்தில் குரு பலமடைந்து நிற்கவும், அவரை சுபர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் துரக பதாதிகளோடு வாழ்பவனும்.

| | | சு | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| | பு | சந் | ல குரு |




[2] சூரியன் குரு சந்திரனுமாகிய மூவரும் கூடி 1-5-9-1-4-7-10-என்னும் திரிகோண கேந்திரங்களில் நிற்கவும், இவர்களை சுபக்கோள் பார்க்கவும் பெற்ற ஜாதகரும் மேற்கூறிய யோக முடையவராம்.

## 491




(இ - ள்.) 4-க்குடையவர் 4-ல் நிற்கவும், லக்கினத்தை 3-க்குடையவரும், செவ்வாயும் பார்க்கவும், 9-க்குடையவர் சுக்கிரன் குரு ஆகிய மூவருங் கூடி 4-ம் இடத்தில் நிற்கவும், இவர்களை பகைவர் நோக்காதிருக்கவும் பெற்ற ஜாதகர் இந்திர யோக துரக பதாதிக ளுடையவராம்.

## 492




(இ - ள்.) 9-4-க்குடையவராகிய இருவரும் 9-ம் இடத்தில் நிற்கவும், லக்கினதிபதி உச்சத்திற் கேந்திர மடையவும், அக் கேந்திராதிபதி திரிகோண கேந்திரமேறி நிற்கவும் பெற்ற ஜாதகர் சௌபாக்கிய மோங்கி தண்டிகா யோக மடைவானும்.




[2] 9-ல் குரு நிற்கவும், அக் குருவை சூரியன் சந்திரன் பார்க்கவும், லக்கினத்தை சுக்கிரன் பார்க்கவும் அல்லது நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு மேற் கூறிய யோகமே யாம்.

## 493




(இ - ள்.) குரு 9-ல் நிற்கவும், அவ்ரை சந்திரனாகினும். சூரியனாகினும் பார்க்கவும், 4-க்குடையவர் கேந்திர மடையவும் சந்திரன் 4-ம் இடத்தில் நிற்கவும், அவரை 2-க் குடையவர் பார்க்கவும், சுக்கிரன் லக்கினத்தில் நிற்கவும், 6-8-12-ல் ராகு கேதுக்கள் நிற்கவும் பெற்ற ஜாதகர் ராஜயோக துரக வாகன முடையவராம்.

[2] மேற்கூறியவற்றில் லக்கினாதிபதி 7-க்குடையவர் சந்திரன் இவர்கள் கூடி 2-ல் நிற்கப் பெற்ற ஜாதகருக்கும் மேற்கூறிய பலனே யாம்.

## 494

(இ - ள்.) செவ்வாய், சூரியன், சுக்கிரன் 9-க்குடையவராகிய நால்வரும், 1-5-9-1-4-7-10 ஆகிய திரிகோண கேந்திரங்களில் நிற்கவும் பெற்ற ஜாதகர் ராஜ யோக முடையவராம்.




[2] லக்கினாதிபதி 4-க்குடையவர் சுக்கிரன் இவர்கள் கூடி லக்கினத்தி னின்றாலும்.

[3] குரு, சந்திரன், லக்கினாதிபதி இவர்கள் கூடி திரிகோண கேந்திரங்களில நின்றாலும் இம் மூன்று தரமுள்ள ஜாதகர்களும் மேற்கூறிய யோக முடையவரேயாம்.

## 495

(இ - ள்.) 2-கிரகங்கள் ஒருவர் வீட்டில் ஒருவர் மாறி நிற்கவும், சுக்கிரன் பலமடையவும், அவரை நல்லோர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகர் ராஜ யோக முடையவராம்.




[2] குரு, சந்திரன், செவ்வாய், சுக்கிரன், புதன், சூரியன் ஆகிய அறுவர்களும் தனித் தனியாக கேந்திரமேறி நிற்கவும் பெற்ற ஜாதகர் மேற்கூறிய யோக முடையவராம்.



## 496




(இ - ள்.) சந்திரன், குரு 4-9-க்குடையவர்கள் ஆகிய நால்வரும் கூடி திரிகோண கேந்திரமேறி நிற்கப் பெற்ற ஜாதகர் ராஜ யோக முடையவனும்.




[2] லக்கினத்திற் சந்திரன் நிற்கவும், சூரியன் 4-க்குடையவர் புதன் ஆகிய மூவருங் கேந்திர கோணங்களில் நிற்கவும், சுக்கிரன் துலாத்திற்கு 5-ம் இடத்தில் நின்றாலும் மேற்கூறிய பலனேயாம்.

## 497




(இ - ள்.) 9-4-க்குடையவர்கள் கூடி லக்கினத்தில் நிற்கவும், லக்கினாதிபதி சுக்கிரன் இவர்களில் ஒருவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் வாகனயோக முடையவராம்.

[2] 4-ம் இடத்துக் குரியவரும், 9-ம் இடத்துக் குரியவருங் கூடி தேவாங்கிஷத்தில் பலமடையவும், பூரணச் சந்திரனும் 3-4-க் குடையவர்களுமாகிய மூவரும் உச்சங்களில் கேந்திர மடைந்தாலும் மேற்கூறிய பலனேயாம்.

## 498




(இ - ள்.) புண்ணிய ஸ்தானங்களாகிய 1-5-9-ல் குரு ஆட்சி உச்சமடைந்து நிற்கவும், சுக்கிரன் 11-ம் இடத்திற்குக் கேந்திர மடையவும், அவரை 5-க்குடையவர்களோடு சுபர்களும் பார்க்கவும் பெற்ற ஜாதகர் வறுமை யில்லாதவராம்.

79

[2] 10-க்குடையவ ரிருந்த ராசி நாதன் நட்பாய் 10-ல் நின்ருலும் மேற்கூறிய பலனேயாம்.

## 499




(இ - ள்.) 2-11-க்குடையவர்கள் உச்சமடையவும், அந்த ராசியாதிபதிகள் 9-ல் நிற்கவும், அவர்களை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் துரக வாகன முடையவராம்.




[2] 9-ம் இடத்தில் 10-க்குடையவர் நிற்கவும், 9-க்குடையவர் 10-ல் அமரவும், அவரை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கும் மேற்கூறிய யோகமுண்டாம்.

## 500

(இ - ள்.) 1-5-க்குடையவர்கள் கூடி 10-ல் நிற்கவும், 10-க்குடையவர் 9-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் சரீரமுள்ள வரையிற் குறைவில்லாத செல்வமும் வித்தையு முடையவராம்.

[2] புதன் 10-ல் நிற்கவும், 10-க்குடையவர் 9-ல் நின்ருலும் மேற்கூறிய பலனும்.

## 501

(இ - ள்.) புதன் 10-ல் நிற்கவும், 10-க்குடையவர் 2-ல் நிற்கவும், லக்கினுதிபதி 9-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் இலக்ஷிமி சரஸ்வதி கிருபையால் வாழ்பவராம்.

[2] 5-க்குடையவர் ஆக்ஷி யடையவும், அல்லது குருவுக்கு 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு மேற்கூறிய பலனும்.

## 502




(இ - ள்.) குருவும், சுக்கிரனும் 8-ல் நிற்கவும், புதனும், சந்திரனும் 7-ல் அமரவும், புதன் வீட்டில் 10-க்குடையவர் நிற்கவும் பெற்ற ஜாதகர் அரச சமானனுய் பூமி வாகனம் பெற்று வாழ்பவனும்.

[2] 10-4-11-க் குடையவர்களும் சந்திரன் ஆகிய நால்வருங்கூடி 11-ல் நிற்கவும், அவரை லக்கினதிபதி பார்க்கவும் பெற்ற ஜாதகர் ராஜசமானனுய் பூமி தனமுடையவராவராம்.




## 503

(இ - ள்.) 2-ம் இடத்திற் குருவும், 4-ம் இடத்திற் புதனுஞ் சுக்கிரனும் 7-ம் இடத்திற் செவ்வாயுஞ் சந்திரனும் நிற்கவும் பெற்ற ஜாதகர் தனத்துக் கதிபதியாய் வாழ்பவனும்.




[2] 11-க்குரியவர் உச்சமடைந்து சுக்கிரனேடு கூடி 9-ம் இடத்தில் நிற்கப்பெற்ற ஜாதகருக்கு மேற்கூறிய பலனும். இதில் லக்கினதிபதி அவ்வவ் விடங்களை பார்க்கில் உலக அரசனுவானும்.

## 504

(இ - ள்.) லக்கினதிபதி யிருந்த ராசியாதிபதி 10-ல் நிற்கவும், அவரை 10-க் குடையவர் பார்க்கவும், குரு லக்கினத்திலாகினும் லக்கினதிபதி யிருந்த ராசிக்கு 12-லேனும் நின்றுலும், பார்க்கப் பெற்றுலும், ஜாதகருக்கு சக்கரை பந்தலில் தேன் மாரி பொழிந்தது போல் பாக்கிய லக்ஷிமீ தங்கி வாழ்பவராம்.




## 505

(இ - ள்.) லக்கினதிபதியும் 10-க்குடையவரும் நட்பாய்க் கூடி 7-ம் இடத்திற்கு 1-5-9-ல் நிற்கவும், சூரியன் உச்சம் பெற்று குரு வீக்ஷண்ய மடையப் பெற்ற ஜாதகர் ரெணம் ரொண மிலலாதவராய் பாக்கியவானு யிருப்பனும்.



[2] சந்திரன் 7-ல் நிற்கவும், 7-க்குடையவரும், குருவும் 11-க்குரியவருங் கூடி இலக்கினத்தில் நிற்கவும், அவர்களை சுக்கிரன் பார்க்கப் பெற்றாலும் அதிகாரச் செல்வ முடையவராம்.

| | | சு | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | |
| குரு | | | ல |
| | செ | | |

## 506

(இ - ள்.) 5-9-க்குடையவர்கள் 4-ல் நிற்கவும், அவர்களைச் சூரியன் பார்க்கவும் பெற்ற ஜாதகர் அசுவத்தேரேறும் வஞ்சியர் மோகனும்.

| | | | சு பு |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| சந் | | | ல |

[2] 7-9-க்குடையவராகிய இருவருங் களிப்போடுங் கூடி 7-ல் நிற்கவும், அவர்களை 11-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் ஆயுள்வரையில் தனவானும்.

| | | | சந்-பு சனி |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | | ல | |

## 507

(இ - ள்.) 9-ம் இடத்திற் சந்திரனும், 9-4-க்குடையவராகிய மூவருங் கூடி நிற்கவும், அவர்களை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் சிறந்த பாக்கிய முடையவனும்.

[2] சூரியன் புதனோடு கூடி 9-ல் நிற்கவும், அவர்களை சுக்கிரன், குரு இவர்களில் ஒருவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் யோக்கியனும், கனதன யூகமுள்ளவனு மாவனும்.

## 508

| | | | |
|---|---|---|---|
| | இராசிச் சககரம். | | குரு |
| | | | |
| | ல சனி | | சு பு |

(இ - ள்.) 10-11-க்குடையவர்கள் கூடி நிற்கவும், தனுசு ராசிக்குடையவர் 9-ல் நிற்கவும், 4-க்குடையவர் இலக்கினத்தில் அமரவும் பெற்ற ஜாதகர் பொருள் நிறைந்த நரவாகனபதியாய் புத்ர பௌத்திர பூரண ஆயுள் பெற்று வாழ்பவராம்.

## 509




(இ - ள்.) இலக்கினத்திற் சந்திரனும், 4-க்குடையவரும், இலக்கினாதிபதி குரு, சுக்கிரன் ஆகிய ஐவருங் கூடி நட்படைந்து நிற்கப்பெற்ற ஜாதகரை இராஜனெனவுங் கூறப்பட்டது.

[2] சந்திரனும், சந்திரனிருந்த இராசியாதிபதியும் நட்பாய்க் கூடி சுக்கிரன், செவ்வாய் வீட்டில் நிற்கப்பெற்ற ஜாதகர் ஸ்திரீ மோகச் செல்வனென்றுங் கூறியது.

## 510




(இ - ள்.) செவ்வாய், குரு, இவர்கள் 4-ல் நிற்கவும், 4-க்குடையவர் 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் துக்கமில்லாத சுக மடைபவராம்.




[2] 10-9-க்குடையவர்கள் நட்பாய்க் கூடி 5-ல் நிற்கவும், 4-க்குடையவர் சுக்கிரனுடன் கூடி நட்பு பெற்று 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கும் மேற்கூறிய பலனும்.

## 511




(இ - ள்.) சுக்கிரன், செவ்வாய், சந்திரன் ஆகிய மூவருங் கூடி 4-ல் நிற்கவும், 4-க்குடையவரும் குருவுங் கூடி ஒரு ராசியில் நிற்கவும் பெற்ற ஜாதகர் பாதத்தில் அழுக்கடையாது இழிவில்லாத பரிமாவும் உடையவராம்.

[2] 7-ம் இடத்திற் சந்திரனும், புதனுங் கூடி நிற்கவும், குரு இலக்கினத்தில் நிற்கவும், 9-க்குடையவர் கேந்திர மடையவும் பெற்ற ஜாதகர் மேற்கூறிய யோகமுடையவராம்.




## 512

(இ - ள்.) மகரம் இலக்கினமாக சிங்க ராசியில் சந்திரன், சூரியன், சுக்கிரன் ஆகிய மூவரும் நிற்கவும் பெற்ற ஜாதகர் 13-வயதில் அசுவத் தேரேறி யோக இன்ப சுகத்தோடு நாகரீகனுயிருந்து நடுவில் ஸ்திரீ மோகனுய் நிலை குலைந்து வழியில்லாத வழியில் அழிவானும்.




## 513

(இ - ள்.) 10-க்குடையவரும், சனியுங் கூடி வலுப்பெற்று 1-5-9 ஆகிய திரிகோணத்தில் நிற்கவும், இலக்கினுதிபதி 4-ம் இடத்தில் நிற்கவும், குருவும், சுக்கிரனும் தங்களுக்குரிய கோபுராங்கிசம், தேவாங்கிசங்களேறி மேற்கூறியவர்களை பார்க்கவும் பெற்ற ஜாதகர் மும்முரசு அரண்மனையுடைய அழகனென்றுங் கூறியது.




## 514

(இ - ள்.) 4-ம் இடத்தில் 9-2-10-க்குடையவராகிய மூவரும் நிற்கவும், 3-ம் இடத்தில் 11-க்குரியவர் நிற்கவும், சுக்கிரன் 8-ல் நிற்கவும், 4-க்குடையவர் ஆக்ஷி உச்சமடையவும், 4-ம் இடத்திற் சுபர்கள் நிற்கவும், இவர்களை பாபர்கள் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகர் பெருந்தன்மையுடைய சிறப்படைந்த பிரபுவாம்; இதில் 12-ம் இடமும் சுத்தம் வேண்டுமாம்.



## 515

(இ - ள்.) சுக்கிரன் உச்ச மடையவும், 4-ம் இடத்தில் 10-க்குடையவர் நிற்கவும், லக்கிளுதிபதி பல மடைந்து நிற்கவும், 4-க் குடையவர் கேந்திர திரிகோண மடையவும், 9-க்குடையவர் 10-ல் நிற்கவும், மேற்கூறிய கிரகங்களெல்லாம் குரு வீக்ஷண்யமுங் கிடைக்கப் பெற்ற ஜாதகர் சுக ரஞ்சிதனுப் கொலுவீற்றிருந்து சதுரங்க சேனை யுள்ளவனுவனும்.

| சு | | | |
|---|---|---|---|
| சூ | இராசிச் | | சனி |
| செ | சக்கரம். | | சந் |
| | ல குரு | | |

## 516

(இ- ள்.) 4-க்குடையவரும், சந்திரனுங் கூடி ஐராவதாம்சம் மடைந்து தேவவலுப் பெற்று நிற்கவும், லக்கினுதிபதியும் குருவும் உச்ச மடைந்து 3-க்குடையவரை பார்க்கவும் பெற்ற ஜாதகர் மூன்றடுக்கு மாளிகையில் மூதோர்கள் சூழ செகபதி போலும் வாழ்பவனும்.

| பு | சூ | செ சந் | |
|---|---|---|---|
| | இராசிச் | | குரு |
| | சக்கரம். | | ல |
| | | | |

## கன பாக்கிய யோகம்

## 517

(இ - ள்.) 4-க்குடையவர் 11-ல் நிற்கவும், 2-க்குரியவர் லக்கினத்தில் நிற்கவும், சுக்கிரன் சூரியனேடு கூடி சனிக்கு 8-ல் அமரவும், 11-க்குடையவர் சந்திரனேடு கூடி 7-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் ல்ட்சுமி சரஸ்வதி விலாசனுயும் பூமி, பொன் வாகன முடையவரு மாவராம்.

| | சு சூ | பு சந் | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| | ல குரு | | சனி |

## 518

(இ - ள்.) 4-5-க்குடையவர்கள் கூடி 2-ல் நிற்கவும், 2-க்குடையவர் லக்கினத்தில் அமரவும், 9-க்குடையவர் 12-ல் அமரவும், அவரை குரு பார்க்கவும், சந்திரனுக்கு சூரியன் துணையாகக் கூடி லக்கினத்திவ் நிற்கவும் பெற்ற ஜாதகர் ராஜ சமானனுயும் வாழ்வு பெருகி சிங்கார மாளிகையில் வீற்றிருப்பராம்.

| | | சனி | ல-சூ சந் |
|---|---|---|---|
| | இராசிச் | | சு பு |
| | சக்கரம். | | |
| | குரு | | |

## 519

(இ - ள்.) லக்கினத்திற் சூரியனும், 4-ம் இடத்திற் குருவும், 2-ல் சுக்கிரன், புதன், செவ்வாய் ஆகிய மூவருங் கூடி நிற்கப் பெற்றாலும், 3-ம் இடத்தில் 5-க்குடையவரோடு ராகு கூடி நிற்கவும், குருவும் சந்திரனுங் கூடி 11-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கும் துன்பமில்லாது மாடி வீடு அஸ்வயோக வாழ்வுண்டாகுமாம்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம். | இராசிச் சக்கரம். | |
| | இராசிச் சக்கரம். | இராசிச் சக்கரம். | |
| குரு | | சு-பு செ | ல சூ |

## 520

(இ - ள்.) 4-ம் இடம் சுபர் வீடாயிருக்கவும், அச்சுபர் 4-க்கு கேந்திர மடையவும், அவருக்கு முன்னும் பின்னும் சுபர்கள் நிற்கவும், லக்கினாதிபதி தேவாங்கிஷமேறி மேற்கூறியவர்கள் பார்க்கப் பெற்ற ஜாதகர் வல்லபம் தனங்கனம் பெற்று மித்திரனாயிருந்து உலகத்திற் புகழ் பெறுவராம்.

| | | | |
|---|---|---|---|
| | ல செ | | |
| | இராசிச் சக்கரம். | இராசிச் சக்கரம். | |
| | இராசிச் சக்கரம். | இராசிச் சக்கரம். | |
| | சு | சந் | பு |

## 521

(இ - ள்.) லக்கினத்திற் புதன், சுக்கிரன் சூரியன் நிற்கவும், 4-க்குடையவர் கேந்திர மடையவும், 5-க்குடையவர் 3-ல் அமரவும், 11-ல் செவ்வாய் நிற்கவும், சந்திரன் 9-ல அமரவும், 4-க்கு 7-ல ராகு கேதுகள் நிற்கவும் பெற்ற ஜாதகர் நலமும், நிலமும் அதிக நிதியு முடையவ ராவராம்.

| | | | |
|---|---|---|---|
| | | சந் | குரு ரா |
| | இராசிச் சக்கரம். | இராசிச் சக்கரம். | செ |
| | இராசிச் சக்கரம். | இராசிச் சக்கரம். | |
| கே | சனி | | ல-சூ பு-சு |

## 522

(இ - ள்.) 2-க்குடையவர் லக்கினத்தில் நிற்கவும், 10-க்குடையவர் 8-ல் அமரவும். 4-ம் இடத்தில 11-க்குரியவர் நிறகவும், அவரை குரு பார்க்கவும் அல்லது இவர் அவரைப் பார்க்கவும் பெற்ற ஜாதகர் அஸ்வ வாகன பூஸ்திதி யுடையவராயும், அம்ச தூளிகா மஞ்சத்தில சயனிக்கப் பட்டவராம்.

| | | | |
|---|---|---|---|
| | | | ல சந் |
| | இராசிச் சக்கரம். | இராசிச் சக்கரம். | |
| குரு | இராசிச் சக்கரம். | இராசிச் சக்கரம். | |
| | | | செ |

[2] 4-1-9-க்குடையவர்களாகிய மூவருடன் செவ்வாய் கூடி கேந்திர மடையவும், லக்கினத்திற் குரு நிற்கவும் பெற்ற ஜாதகர் மேற்கூறிய யோக முடையவரேயாம்.

## 523

(இ - ள்.) 4-ம் இடத்தை இருபாலும் சுபர்கள் சூழ்ந்து நிற்கவும், 4-க்குரியவரும், சுக்கிரனும் குருவுங் கூடி வைசேடிகாங்கிச மடைந்து திரிகோண கேந்திரம் பெறவும், அவர்களை சுபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகர் ஜெபமும், ராஜாக்கள் குலாவத்தக்க மாளிகையில் கொலு வீற்றிருந்து வாழ்பவனும்.

## கிரக பாக்கிய யோகம்

## 524

(இ - ள்.) குரு 3-ம் இடத்தில் வலுப் பெற்று நிற்கவும், 4-க்குடையவர் சுக்கிரனைப் பார்க்கவும், சுக்கிரன் 4-க்குடைய வரைப் பார்க்கவும் பெற்ற ஜாதகர் புராதன வீட்டில் மடவாரூட்டவும், லட்சுமி வசியனாய் ராஜரீகம் பெறுவனும்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம். | | சனி |
| சு | | | |
| குரு | | ல | |

## கிரக யோகம்

## 525

(இ - ள்.) லக்கினத்திற் குரு நிற்கவும், லக்கினாதிபதியும் 12-க்குடையவரும் சுக்கிரன் ஆகிய இவர்கள் உச்சம் அல்லது கேந்திர மடைந்தாலும், சந்திரனும் புதனுங் கூடி 4-ல் இருக்கப்பெற்ற ஜாதகர், உன்னிதமான மாளிகையில் நெடுநாள் வாழ்பவராம்.

| | | | |
|---|---|---|---|
| | சு செ | | |
| சந் பு | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| | | ல குரு | |

[2] லக்கினத்தில் 4-க்குடையவர் நிற்கவும், 4-ம் இடத்திற் சுக்கிரன் குரு நிற்கப் பெற்றாலும் மேற்கூறிய பலனும்.

## 526

(இ - ள்.) லக்கினத்திற் குரு நிற்கவும், சந்திரனுங் கேதுவுங் கூடி 5-ல் நிற்கவும், 7-ம் இடத்திற் செவ்வாய் சனி கூடி நிற்கவும், 8-ம் இடத்திற் சூரியன் அமரவும், 9-ம் இடத்திற் புதனிற்கவும் பெற்ற ஜாதகர் செல்வத் தன்மையும், புது மாளிகையும், லட்சுமீகர முடைய சிமானும், பல பூமியுடையவரென்றுங் கூறியது.

| செ சனி | சூ | பு | |
|---|---|---|---|
| | இராசிச் | | ரா |
| சந் கே | சக்கரம். | | |
| | | | ல குரு |

## 527

(இ - ள்.) லக்கினாதிபதி 11-ம் இடத்தில் நிற்கவும், 9-7-க்குடையவர்கள் கூடி 3-ல் அமரவும், 5-க்குடையவர் கேந்திரமடையவும், 11-க்குரியவர் 4-ல் நிற்கவும், அவரை செவ்வாய் பார்க்கவும் பெற்ற ஜாதகர், நன்மையுடைய சன்மான னென்றுங் கூறியது.

| சு | | | |
|---|---|---|---|
| சூ பு | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| ல | சந் | குரு | செ |

## 528

(இ - ள்.) சந்திரனும் ராகுவுங் கூடி 11-ல் நிற்கவும், சுக்கிரன், சூரியன், செவ்வாய் இவர்கள் கூடி 5-ல் அமரவும், இவர்களை லக்கினாதிபதி பார்க்கவும் பெற்ற ஜாதகரை ஜோதிடர்கள் அளகாபுரி நாதனென்று கூறுவாராம்.

| ல | | | |
|---|---|---|---|
| | இராசிச் | | சு செ சூ |
| ரா சந் | சக்கரம். | | |
| | குரு | | |

[2] 3-க்குடையவர் லக்கினாதிபதி, ராகு, குரு ஆகிய நால்வரும் 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர், நீர் சூழ்ந்த பூமி பொருள் மாட கூட வாகன முள்ளவராம்.

| | | | ல |
|---|---|---|---|
| | இராசிச் | | சூ-பு ரா கு |
| | சக்கரம். | | |
| | | | |

## கன பாக்கிய யோகம்

### 529




(இ - ள்.) லக்கினாதிபதி 10-ல் நிற்கவும், 10-குடையவர் லக்கினத்திலமரவும், லக்கினாதிபதியை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் ஆயுள் வரையில் இன்ப வாழ்விலிருந்து சுக மடைவாராம்.

[2] சந்திரனும் குருவுங் கூடி 2-ல் நிற்கவும், அவர்களை 9-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் ராஜ சமானனாய் பாக்கியம் பெருகி வாழ்பவராம்.

## பாக்கிய யோகம்

### 530




(இ - ள்.) சந்திரன், குரு, சுக்கிரன், ராகு ஆகிய நால்வரும் இருந்த ராசியாதிபதி சந்திர கேந்திரத்திலேனும், லக்கின கேந்திரத்திலேனும் நிற்கவும், 7-க்குடையவர் திரிகோண மடையவும், அவரோடு 11-க்குடையவர் கூடி நிற்கவும் பெற்ற ஜாதகர் கல்வி, செல்வம், ஆளடிமையு முள்ளவராம்.

## தன யோகம்

### 531




(இ - ள்.) லக்கினாதிபதியும் குருவுங் கூடி லக்கினத்தில் நிற்கவும், புதனிருந்த ராசிக்கு 11-ல் சுக்கிரனுங் குருவுங் கூடி நிற்கவும், 12-ம் இடத்தில் 5-க்குடையவர் நிற்கவும் அல்லது கேந்திர மடையவும் சூரியன் 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் கல்வி செல்வ முடையவராயும் பிதாவுக்கு மேல் சுக முடையவரெனவுங் கூறியது.

## 532

(இ - ள்.) 5-க்குடைவரும், கேந்திராதிபதிகளில் ஒருவரும் கூடி நட்பு பெற்று 2-ல் நிற்கவும், 5-க்குடையவருக்கு 5-ம் இடத்திற் குரு நிற்கவும், குருவுக்கு கேந்திரத்தில் ராகு நிற்கவும், குருவுக்கு 7 ல் செவ்வாய் நிற்கவும், அல்லது ஆகூதி யடையவும், சந்திரன் சூரியனோடு கூடி திரிகோண மடையவும் பெற்ற ஜாதகர் செல்வ பாக்கியவானும்.

| | | | |
|---|---|---|---|
| | | செ ரா | ல சூ சந் |
| | இராசிச் சக்கரம் | | சு பு |
| | | | |
| | குரு | | |

## விற்பன்ன யோகம்

## 533

(இ - ள்.) 9-க்குடையவரும், சந்திரனும், குருவும் ஆகிய மூவரும், 9-ல் நிற்கவும், 11-ம் இடத்தில் சந்திர னிற்கவும், லக்கினாதிபதி சந்திரனுக்கு 9-ல் அமரவும், குரு திரிகோண வலுப் பெற்று நிற்கவும், குரு அதிக பலம் பெற்று நிற்பாராகில் ஜாதகன் சந்திரன் போல் கல்வி யோங்கி சிறப்புற்று வாழ்பவராம்.

## 534

(இ - ள்.) லக்கினாதிபதி 5-ல் நிற்கவும். 5-க்குடையவர் கேந்திர மடையவும் புதனுக்கு 2-ல் சந்திரன் லாபாதியோடு கூடி நிற்கவும், தனுசுக்குடையவர் 7-லிருந்து சிறப்படையவும் பெற்ற ஜாதகர் சிறந்த கல்வியும், செல்வமும் பெற்று வாழ்பவராம்.

| | | | |
|---|---|---|---|
| | | | ல |
| | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| குரு | சந் செ | பு | சு |

## 535

(இ - ள்.) 2-ம் இடத்திற் புத னிற்கவும், சந்திரன் கேந்திர மடையவும், 9-க்குடையவர் சந்திரனுக்கு திரிகோண மடையவும், 12-க்குடையவர் லக்கினத்தில நிற்கவும், சுக்கிரன் சந்திரனுக்கு 9-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் கல்வி செலவ முடையவனும்.

| | | | |
|---|---|---|---|
| | குரு | | சு |
| செ | இராசிச் சக்கரம். | | ல சூ |
| | | | பு |
| | | சந் | |

## 536




(இ - ள்.) சன்ம லக்கினமும், சந்திர லக்கினமும் 7-க்கு 7-ஆக நிற்கவும், 9-க்குடையவர் 11-ம் இடத்தில் நிற்கவும், செவ்வாய், சூரியன், புதன் ஆகிய மூவரும் 10-ல் நிற்கவும், குரு 5-ம் இடத்தில் நிற்கவும், லக்கினாதிபதி 3-ல் அமரவும் அல்லது சந்திரனுக்கு 9-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் செல்வமுடையவராம்.

## 537




(இ - ள்.) 1-11-க்குடையவரும், குருவும் ஆகிய மூவரும் 9-ல் நிற்கவும், 11-ம் இடத்தில் 2-க்குடையவர் நிற்கவும் பெற்ற ஜாதகர் பொருள் மிகுதியுள்ளவனெனவுங் கூறிடது.

[2] 2-ல் புதன் சுக்கிரன் நிற்கவும், லக்கினத்தில் சூரியன் சந்திரன் அமரவும், 9-11-க்குடையவரும், ராகுவு மாகிய மூவரும் குருவுக்கு கேந்திரமும், பார்வையு மடையவும் பெற்ற ஜாதகர் மேற்கூறிய பல னுடையவராம்

# தன யோகம்

## 538

(இ - ள்.) இலாபாதிபதி உச்சமடைந்து 2-ல் நிற்கவும், அவரை 10-க்குடையவர் நட்புடன் பார்க்கப் பெற்றாலும்,

[2] 9-10-க்குடையவரும், சுக்கிரன் ஆகிய மூவரும் 9-ல் நிற்கப் பெற்றாலும்,

[3] லக்கினாதிபதியும் 11-க்குரியவருங் கூடி 2-ல் நிற்கவும், லக்கினாதிபதி ஆட்சி உச்சமடைந்து நிற்கப் பெற்றாலும், இம் மூன்று தர முள்ள ஜாதகர்கள் பொருள் மிகுதி யுடையவர்களாம்.

## 539

| குரு | சந் | | |
|---|---|---|---|
| | இராசிச் | | செ |
| | சக்கரம். | | சூ-ப |
| | | ல | |

(இ - ள்.) 2-9-11-க் குடையவர்களாகிய மூவரும் சந்திர கேந்திர மடையவும், இவர்களை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் இந்திர செல்வ முடையவராம்.

[2] 9-க்குடையவர் இருந்த ராசியாதிபதி குருவோடு சேர்ந்து 2-ல் நிற்கவும், 5-ம் இடத்திற் சந்திரனும், 2-க்குடையவருங் கூடி நிற்கவும் பெற்ற ஜாதகருக்கும் மேற் கூறிய பலனேயாம்.

## 540

(இ - ள்.) 2-4-க்குடையவர்களாகிய இருவரும் 9-ல் நிற்கவும், 2-ம் இடத்தில் 10-க்குடையவர் நிற்கவும், லக்கினாதிபதி உச்ச பலங் கொண்டு நின்றாலும்,

[2] 2-க்குடையவர் உச்சமடையவும், அல்லது 9-ல் நிற்கவும், லக்கினாதிபதி 10-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கும்,

[3] 5-க்குடையவர் ஆக்ஷி யடையவும், 11-க்குடையவர் 9-ல் நிற்கப் பெற்றாலும்,

## 541

(இ - ள்.) சந்திரனுக்கு 9-க்குடையவரும், லக்கினத்திற்கு 9-க்குரியவரும் ஆகிய இருவரும் 2-ல் நிற்கவும், 6-5-க்குடையவராகிய இருவரும் 9-ம் இடத்தில் நிற்கவும், அவர்களை குரு பார்க்கப் பெற்றாலும், இந்நான்கு ஜாதகர்களும் இந்திர செல்வம் வைராக்ய முடையவர்களாம்.

## 542

(இ - ள்.) 3-11-க்குடையவராகிய இருவரும் 7-ல் நிற்கவும், 7-க்குடையவர் 12-ல் அமரவும், 12-க்குடையவர் 9-ல் நிற்கவும், அவரை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் சுக முடையவராம்.




[2] சுக்கிரன், சூரியன் ஆகிய இருவரும் இலக்கினத்திற் நிற்கவும், 2-ம் இடத்திற் குருவும், ராகுவுங் கூடி நிற்கவும், 4-க்குடையவர் குருவுக்கு கேந்திர மடையவும் பெற்ற ஜாதகர் சுகமுடையவராம்.

## 543

(இ - ள்.) செவ்வாயும், இலக்கினாதிபதியுங் கூடி திரிகோண கேந்திர மடையவும், 2-10-க்குடையவர்கள் ஆகிய இருவரும் 9-ல் நிற்கப்பெற்ற ஜாதகர் இலக்ஷாதிபதியாம்.




[2] இடப லக்கினமா யிருக்கவும், சனி 8-ம் இடத்தில் பலமடைந்து நிற்கவும், கன்னியில் புதன் அமரவும் பெற்ற ஜாதகர் 5-லக்ஷம் பொன் படைப்பனும்.

### பிரபல பாக்கிய யோகம்

## 544

(இ - ள்.) 4-ம் இடத்திற் குருவும், 5-ம் இடத்திற் சுக்கிரனும், 7-ல் செவ்வாய் நிற்கவும், சந்திரனை இலக்கினாதிபதி பார்க்கவும் பெற்ற ஜாதகர் இராஜயோக முடையவராம்.



[2] 9-ம் இடத்தில் 5-க்குடையவர் நிற்கவும், அவரை குரு நட்புடன் பார்க்கவும், 11-க்குடையவரும், சந்திரனுங் கூடி 2-ல் நிற்கப்பெற்ற ஜாதகர் நரவாகன முடையவராம்.




## பிரபல அதிகார யோகம்

### 545

(இ - ள்.) 4-3-க்குடையவராகிய இருவரும் 10-ல் நிற்கவும், லக்கினாதிபதி திரிகோண மேறவும், அவர் சுபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகர் இராஜ யோகனும்.




[2] 9-க்குடையவர் 11-ல் நிற்கவும். 11-க்குடையவர் 2-ல் அமரவும், அவரை லக்கினாதிபதி பார்க்கவும் பெற்ற ஜாதகர் இராஜ யோக முடையவனும்.




### 546

(இ - ள்.) 4-க்குடையவர் 11-ல் நிற்கவும், 2-11-க்குடையவர்கள் இலக்கினத்தில் நிற்கவும், 4-க்குடையவரை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் அஸ்வ வாகனமுடைய செல்வனும்.






[2] 4-ம் இடத்தில் சுக்கிரன் நிற்கவும், 11-ல் குரு அமரவும், அவரை சுபக் கிரகங்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகர் ஜெயம் பொருந்திய உத்தண்ட ராஜரீகனும்

## சம பாக்கிய யோகம்

### 547




(இ - ள்.) 7-ம் இடத்திற் குருவும், சந்திரனும் நிற்கவும், 12-ம் இடத்திற் செவ்வாய் அமரவும், அவரை சூரியன் பார்க்கவும் பெற்ற ஜாதகர் செல்வம், கல்வி சிறப்பும் பெறுவராம்.




[2] 7-ல் புதனும், 5-ல் குருவும், 11-ல் சந்திரன் ஆக்ஷி யடைந்து நிற்கப் பெற்ற ஜாதகருக்கும் மேற்கூறிய பலனும்.

### 548




(இ - ள்.) 5-க்குடையவர் திரிகோண மடையவும், லக்கினாதிபதியும், குருவும், புதனும் ஆகிய மூவரும் லக்கினத்தில் உச்ச மடையவும், அவர்களை செவ்வாய் நட்புடன் பார்க்கவும், சுக்கிரன் வீட்டில் சனி நிற்கவும், அவரை சுக்கிரன் பார்க்கவும் பெற்ற ஜாதகர் ராஜ யோக முடையவராம்.

## 549

(இ - ள்.) 9-க்குடையவர் 3-ல் நிற்கவும் அவரை குரு பார்க்கவும் சுக்கிரன் 11-ல் 9-க்குடையவரோடு கூடி நிற்கப் பெற்ற ஜாதகருக்கும்,

[2] குரு லக்கினத்தில் நிற்கவும், 9-2-க்குடையவர்கள் புதன் ஆகிய மூவரும் கூடி கேந்திர மடையப் பெற்ற ஜாதகருக்கும் சரஸ்வதி லட்சுமீகர முண்டாகுமாம்.

### அதிகார யோகம்

## 550

(இ - ள்.) 9-க்குடையவர் நின்ற ராசியாதிபதி உச்ச மடைந்து 10-க்குடையவரோடு கூடி லக்கினத்தைப் பார்க்கப் பெற்றாலும்,

| | | | |
|---|---|---|---|
| குரு | இராசிச் | | ல |
| சனி செ | சக்கரம். | | |
| | | | |

[2] லக்கினாதிபதி இருந்த ராசியாதிபதி செவ்வாய்க்கு திரிகோண கேந்திரங்களில் ஆக்ஷி யுச்சமடைந்து நிற்கப்பெற்றாலும்,

[3] குரு இருந்த ராசியாதிபதி உச்ச மடைந்து சந்திரனுக்கு கேந்திர மடையவும் பெற்ற ஜாதகர்கள் ராஜயோக முடையவர்களாம்.

## 551

(இ - ள்.) 9-2-க்குடையவரும், நட்பு ராசியிற் கூடி நிற்கவும், குருவும் 9-க்குடையவரும், பாபருடன் கூடாது நிற்கவும் பெற்ற ஜாதகருக்கும்,

[2] 11-க்குடையவர் உச்ச மடையவும், அவரோடு சூரியன் சந்திரன் கூடி நிற்கவும், அவர்கள் பார்க்கும் ராசிக்குடையவர்கள் கேந்திரங்களில் நிற்கப் பெற்ற ஜாதகருக்கும் மதிப்புக் கடங்காத வாழ்வு உண்டாம்,

## 552

(இ - ள்.) லக்கினாதிபதி 9-ல் நிற்கவும், 7-க்குடையவர் லக்கினத்தில் நிற்கவும், 9-க்குடையவர் சந்திரனுக்கு 2-ல அமரவும், செவ்வாய் கேந்திர மடையவும், 10-க்குடையவருக்கு 11-ல் 5-க்குடையவர் நிற்கவும், சூரியன் 8-ம் இடத்தில நிற்கவும் பெற்ற ஜாதகர் செல்வமும் வாழ்வுங் கீர்த்தியுமுடையவராம்.




## 553

(இ - ள்.) 2-க்குடையவர் 2-ல் நிற்கவும் அவரோடு 11-க்குடையவர் கூடவும் லக்கினாதிபதி குரு சந்திரனோடு கூடி லக்கினத்தில் நிற்கவும், 9-க்குடையவர் 3-ல் நிற்கவும், அவரை 5-க்குரியவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் கல்வியுஞ் செல்வமும் குணமும் பெற்று வாழ்பவராம்.




## 554

(இ - ள்.) லக்கினாதிபதி 11-ல் நிற்கவும், 11-ம் இடத்திற்கு 5-ம் இடத்திற் சூரியன் புதன் நிற்கவும், 9-க்குடையவருக்கு 10-ல் சந்திரன் அமரவும், 5-க்குடையவர் லக்கினாதிபதிக்கு 12-ல் நிற்கவும், அவரோடு கேது கூடவும் பெற்ற ஜாதகர் உத்தமனாய்ச் செல்வம் புகழுடையவராம்.




## 555

(இ - ள்.) 4-ம் இடத்திற் சந்திரனுங் கேதுவுங் கூடி நிற்கவும், சுக்கிரன், சனி, சூரியன் ஆகிய மூவருங் கூடி 7-ல் நிற்கவும் சந்திரன் கேந்திர மடையவும், சுக்கிரனுக்கு கேந்திரங்களில் ராகு நிற்கவும் பெற்ற ஜாதகருக்கும்,



[2] 9-க்குடையவர் 3-ம் இடத்தில் நின்று சுக்கிரனைப் பார்க்கவும், சுக்கிரனுக்கு 2-ம் இடத்தில் புதன் நிற்கவும் பெற்ற இரண்டு ஜாதகர்களும் பூமியோக முடையவர்களாம்.

## 556

(இ - ள்.) 2-க்குடையவர் 9-ல் நிற்கவும், குரு சந்திரனுக்கு கேந்திர மடையவும், 4-க்குடையவர் ஆக்ஷியில் அமரவும், அவருக்கு 3-ம் இடத்தில் குருவும், சந்திரனும் நிற்கவும், 10-ம் இடத்தில் சுக்கிர னிற்கவும், 11-ல் சூரியன் புதன் அமரவும் பெற்ற ஜாதகர் நீர் சூழ்ந்த பூமியும், தனமு முடையவராம்.

| சந் குரு | | சூ | செ |
|---|---|---|---|
| | இராசிச் | | சு |
| சனி | சக்கரம். | | பு சூ |
| | | ல | |

## 557

(இ - ள்.) 9-க்குடையவர் குருவுக்கு திரிகோண மடையவும். அவரோடு 11-க்குவடயவர் கூடவும், 2-க்குடையவர் சந்திர கேந்திர மடையவும், சந்திரனுக்கு 11-ல் 4-க்குடையவர் நிற்கவும், குரு கேந்திர மடையவும் பெற்ற ஜாதகர் கல்விச் செல்வ முடையவராம்.

| | சந் | சூ பு | |
|---|---|---|---|
| சனி | இராசிச் | | |
| குரு | சக்கரம். | | |
| | | ல செ | |

## 558

(இ - ள்.) 4-க்குடையவரோடும், 4-ம் இடத்திலேனும் சுபர்கள் நிற்கவும், அவர்களை சுபர்கள் பார்க்கவும், 4-க்குடையவர் வைசேடி காங்கிசமேறி திரிகோண கேந்திரங்களில் வலியடைந்து நிற்கப்பெற்ற ஜாதகர் சயனத் தழகுள்ளவராம்.

## 559

(இ - ள்.) 4-ம் இடம் சுபர் வீடாக அதில் சுபர்கள் நிற்கவும், அச் சுபர்கள் உச்ச பலமடையவும், 4-க்குடையவர் சுக்கிரனோடு கூடி உச்சாங்கிசத்தில் வர்க்கபல மேறி திரிகோண மடையவும் பெற்ற ஜாதகன் ஸ்திரீகள் மோகிக்கத்தக்க சயன சுக முடையவனும்.

| | ல | சு சந் | |
|---|---|---|---|
| | இராசிச் | | பு குரு |
| | சக்கரம். | | |
| | | | |

## 560




(இ-ள்.) 4-ம் இடம் சுபர் வீடாக அதில் குரு கோபுராங்கிசமேறி நிற்கவும், 4-க்குடையவர் சுக்கிரனோடு கூடி 9-ல் நிற்கவும், அவரைச் சந்திரன் பார்க்கவும் பெற்ற ஜாதகர் பஞ்ச சயனமின்றி துயிலுறுனும்.

## 561




(இ-ள்.) 4-ம் இடத்திற் சந்திரன் சுக்கிரனோடு கூடி உச்சம்பெற்று சுபர்கள் பார்க்கவும், 7-ம் இடத்தில் இராகு நின்று வைசேடிகாங்கிச மடையப்பெற்ற ஜாதகர் இந்திரன் மாளிகையைப்போல சயனஞ் செய்வானும்.

## 562




(இ-ள்.) 4-க்குடையவரும், சந்திரனும் உச்சமடையவும், 4-ம் இடத்திற் கேது நிற்கவும், சுக்கிரன் 4-க்குடையவரை பார்க்கவும் பெற்ற ஜாதகர் வெள்ளைப் பஞ்சு மெத்தையில் சயனஞ் செய்வானும்.

[2] 7-க்குடையவரும், இராகுவுங் கூடி 7-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் மன்மத வடிவனும்.

## 563




(இ-ள்.) 4-க்குடையவர் 5-ம் இடத்தில் இராகுவோடு கூடி நிற்கவும், 2-3-12-க்குடையவர்களாகிய மூவருங் கூடி சந்திரனுக்குக் கேந்திர மடையவும் பெற்ற ஜாதகர் மிருதுவாகிய சயனஞ் செய்பவராம்.

## 564

(இ - ள்.) 4-ம் இடம் சுபர் வீடாக அதற்குரியவர் லக்கினத்தில் நிற்கவும், 5-ம் இடத்தில் 9-க்குடையவர் 5-க்குடையவரை கூடி நிற்கவும், அவர்களோடு சந்திரன் கூடவும், சந்திரனுக்கு 2-ம் இடத்தில் சுக்கிர னிற்கவும்பெற்ற ஜாதகர் பஞ்சணை மெத்தையிற் றுயில்வராம்.

| | சூ சந் செ | சு | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| ல குரு | | | |

## 565

(இ - ள்.) சந்திரன், சுக்கிரன், குரு ஆகிய மூவரும் இலக்கினத்தில் நிற்கவும், இதில் சந்திரன் தேவவர்க்க பல முழுதும் பெற்று நிற்கவும், 4-க்குடையவர் 12-ல் அமரவும் பெற்ற ஜாதகர் மனையாளுடன் பஞ்ச சயனத்திற் றுயில்வனும்.

| | | | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| | | ல-சந் சு-கு | சனி |

## 566

(இ - ள்.) 4-க்குடையவர் 11-ல் நிற்கவும், சுக்கிரன் 12-க்குடையவராகி 4-க்குடையவருக்கு 8-ல் நிற்கவும், 9-க்குடையவர் சந்திரனுகி புதனோடு கூடி 7-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் 3-அடுக்கு மாளிகையிலும், 5-அடுக்கு சயனத்திலும் வசிப்பவராம்.

| | சு | பு சந் | |
|---|---|---|---|
| | இராசிச் சக்காம். | | |
| | | | |
| | ல | | சனி |

## 567

(இ - ள்.) 4-ம் இடத்திற் குரு நிற்கவும், 4-க்குடையவர் குருவுக்கு 5-ல் அமரவும், அல்லது இலக்கினதிபதி வீடுகளில் நிற்கவும், சந்திரன் 3-ல் நிற்கவும், புதன், கேதுவோடு கூடி இலக்கினத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகர் 2-அடுக்கு மெத்தை வீட்டிலும், 3-அடுக்கு பஞ்சணையிலுஞ் சுகித்திருப்பனும்.

| | ரா | சனி | ல |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | |
| குரு | | | |
| சந் | | பு கே | |

## 568

(இ - ள்.) 12-ம் இடம் சுபர் வீடாக அதற்குடையவர் 5-ல் நிற்கவும், 4-ம் இடத்திற் சுக்கிரன் நிற்கவும், 7-ல் குரு பலம் பெற்று நிற்கவும், 2-ம் இடம் சந்திரன் வீடாகி அச் சந்திரன் 11-க்குடையவரோடு கூடி நிற்கவும் பெற்ற ஜாதகர் இலக்ஷுமி வாசம் பொருந்திய மனையில் பஞ்சணையிற் றுயில்வாராம்.




## 569

(இ - ள்.) 4-ம் இடம் சுக்கிரன் வீடாகி அச் சுக்கிரன் 11-ம் இடத்தில் நிற்கவும், சந்திரன் 7-ல் அமரவும், 7-க்குடையவர் புதனோடு கூடி கேந்திர திரிகோணமடையவும் பெற்ற ஜாதகர் பூ மெத்தையில் மனைவியுடன் அனுபவிப்பவனாம்.




## 570

(இ - ள்.) சந்திரன் 4-ம் இடத்தில் நிற்கவும், 12-க்குடையவர் 2-ல் அமரவும், குரு கேந்திர மடையவும், 11-க்குடையவர் 12-ல் நிற்கவும், புதனுக்கு கேந்திரத்தில் செவ்வாய் நிற்கவும் பெற்ற ஜாதகர் இந்திர அம்சமாய் பஞ்ச சயனத்தில் மனையாளுடன் வாழ்பவனாம்.




## 571

(இ - ள்.) 4-ம் இடம் குரு வீடாக அன்னாலுக்கு 7-ல் 7-க்குடையவர் நிற்கவும், அல்லது சந்திரனுக்கு 2-ல் அமரவும், சுக்கிரன், புதன் 12-க்குடையவர் ஆகிய மூவரும் இலக்கினத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகன் இந்திர சுகமடைந்து வாழ்பவனாம்.



## 572

(இ - ள்.) 4-ம் இடத்திற் சுபர்கள் கூடி நிற்கவும், 4-க்குடை யவர் சுக்கிரனேடு கூடி திரிகோண கேந்திரங்களில் நின்ருலும்,

[2] சூரியன் தன் வலியோடு தேவவர்க்க பலம் பெற்று நின்ரு லும் இவ் விரண்டு ஜாதகர்களும் அஸ்வயோக முடையவனும் கனக விமானத்திலுந் துயில்வானும்.

### தியாக யோகம்

## 573

(இ - ள்.) 7-8-12-10 ஆகிய நான்கு ராசியிலும், 9-கிரகமும் நிற்கப்பெற்ற ஜாதகர் தர்மஞ் செய்பவராம்.

[2] சுக்கிரனுக்கு 7-ல் சுபர்கள் நிற்கவும், அவரைச் சூரியன் பார்க்கப் பெற்ருலும்,

[3] சனி 11-ல் நிற்கவும், குரு, சூரியன் ஆகிய இருவருங் கூடி கும்பத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகர் மூவரும் முன் 21-தர்ம வான்களில் இவர்களுடன் 22-தர்மவா னுவார்களாம்.

## 574

(இ - ள்.) 8-ம் இடத்தில் 12-க்குடை யவர் நிற்கவும், 6-ம் இடத்தில் 9-க்குடைய வர் நிற்கவும், 5-ல் கேது அமரவும், 9-லும் சுக்கிரனுக்கு கேந்திரத்திலும் புதனிற்கவும், சந்திரன் திரிகோண மடையவும், குரு லக்கி னத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகர் பொருள் பூமிகளை வேண்டியவர்களுக்கு கோடை மழை போல் தர்மஞ் செய்பவராம்.

| | | | |
|---|---|---|---|
| | கு | பு | |
| ச | இராசிச் சக்கரம். | | ரா |
| சந் கே | | | |
| | | | ல குரு |

## 575




(இ - ள்.) 12-க்குடையவர் 10-ம் இடத்தில் கேதுவோடு கூடி நிற்கவும், 8-க் குடையவர் 12-ல் அமரவும், 10-9-க்குடைய வர்கள் கூடி 3-ல் நிற்கவும், குரு 11-ல் நிற்க வும் பெற்ற ஜாதகர் பேருற்று வெள்ளம் போல் தர்மஞ் செய்பவராம்.

## 576




(இ - ள்.) 6-8-12-ல் குரு நீங்கலாக மற்ற சுபர்களும், பாபர்களும் நிற்கவும், 7-ல் கேது அமரவும், 10-ல் சந்திர னிற்கவும் பெற்ற ஜாதகரும்,

[2] 11-ல் இடத்தில் சுக்கிரனும், குருவும் நிற்கப் பெற்ற ஜாதக ரிருவரும் பெரு மழைபோல் தியாகங் கொடுப்பவர்களாம்.

### பிரபல பாக்கிய யோகம்

## 577




(இ - ள்.) இலக்கிஞதிபதி சுபரா யிருந்து சுபரோடு கூடி உத்தம வர்க்க பல மடைந்து ஆகூஷி யுச்சம் பெறவும், செவ்வாய் கேந்திர கோணங்களில நிற்கப்பெற்ற ஜாத கருக்கு முக்காத தூரம் நிலமுண்டாம்.

## 578




(இ - ள்.) 4-க்குடையவர் நின்ற இராசிக்கு 10-க்குரியவர் இலக்கினாதிபதியோடு கூடி திரிகோண கேந்திரங்களில் நிற்கப் பெற்ற ஜாதகர் பூமியும், சாந்த குணமுமுடையவராம்.

## 579

(இ - ள்.) சுபர்களுடைய மனையில் 4-க்குடையவர் உச்சமடைந்து கேந்திரம் பெற்ற ஜாதகர் பூமியுடையவராயும், தன்னைப் பெற்ற மாங்கில்லிய தாயை வாகனத்தில் வைத்து பார்ப்பவனும்.

## 580

(இ - ள்.) சுக்கிர ஸ்புடமும், 4-க்குடையவர் ஸ்புடமும் கூட்டி 12-ல் கழித்த பாக்கி ராசியிற் குரு வருங்காலம் ஜாதகருக்கு கடல் போலும் விஸ்தாரமுள்ள பூமியும், இராஜரீகமு முண்டாம்.

## 581




(இ - ள்.) சூரியன், சந்திரன், செவ்வாய் ஆகிய மூவர்களோடு சில சுபர்களுங் கூடி 4-ம் இடத்தில் வர்க்க பலமடைந்து நிற்கப் பெற்ற ஜாதகர் நூறு ஏரு கட்டும் நிலமுள்ளவராம்.

## 582




(இ - ள்.) 1-10-க் குடையவருமாகிய இருவருடன் குருவும் கூடி கேந்திர திரிகோணங்களில் உச்ச பலமும், வர்க்க பலமும் அடையப் பெற்ற ஜாதகர் ஆனைமீதேறி வரும் வாழ்வுடையவராம்

## 583

(இ - ள்.) 1-10-9-2 இந்த நான்கு ராசியில் சுபர்களும், 1-10-க்குரியவர்களுங் கூடி உத்தம வர்க்க பலமடைந்து நிற்கப்பெற்ற ஜாதகர் மிகுந்த பூமி யுடையவராம்.

## 584

(இ - ள்.) சுக்கிரனுக்கு 3-7-ல் சந்திரனும், சந்திரனுக்கு 3-7-ல் சுக்கிரன் நின்று ஆக்ஷி யுச்சமடைந்து வர்க்க பலமும் பெற்ற ஜாதகர் மிகுந்த பூமி யுடையவராம்.

## 585

(இ - ள்.) 1-4-க்குடையவரும், இராகுவும் ஆகிய மூவரும் இலக்கினாதிபதிக்கு உச்சஸ்தலத்தில் வர்க்க பலமடைந்து நிற்கப் பெற்ற ஜாதகருக்குப் பதினாயிரம் பொன் பெறும் பூமி யுண்டாம்.

## 586

(இ - ள்.) குரு, சந்திரன், சூரியன் ஆகிய மூவரும் கூடி திரி கோண கேந்திர மேறி வர்க்கபல மடையப் பெற்ற ஜாதகர் ஆயிரம் வரம்புள்ள நிலமுள்ளவனாம்.

## 587

(இ - ள்.) 1-11-9-க்குடையவர்களாகிய மூவர்களோடு சுபர்களுங் கூடி தேவவர்க்க பலமடைந்து நிற்கப்பெற்ற ஜாதகருக்கு கணக்கில்லாத பூமி யுண்டாம்.

## 588

(இ - ள்.) இலக்கினத்தில் 7-க்குடையவர், நிற்கவும், 7-ம் இடத்திற் செவ்வாய் அமரவும், குரு கேந்திர மடையவும், இலக்கினாதிபதி 9-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் இரண்டூரில் பூமி யுடைய இராஜரீகனாம்.



## 589

(இ - ள்.) கேந்திரத்திற செவ்வாய் நிற்கவும், 11-ல் குரு அமரவும், 4-ம் இடத்தில் சுக்கிரன் நிற்கவும், சந்திரன் குருவுக்கு 2-ல் அமரவும் பெற்ற ஜாதகர் ஐந்தூரிற் பூமி பாகமுடையவராம்.

| | | | |
|---|---|---|---|
| சு | | | |
| | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| ல | சந் | குரு | செ |

## 590

(இ - ள்.) சந்திரனுக்கு கேந்திரத்திற் குரு நிற்கவும், புதன் லக்கின கேந்திரத்தில் அமரவும், செவ்வாய் குருவுக்கு கேந்திர மடையவும் பெற்ற ஜாதகருக்குப் போரு பென்ற நிலமுடையவராம்.

| | | | |
|---|---|---|---|
| பு | செ | | |
| | இராசிச் சக்கரம். | | சந் |
| குரு | | | |
| | | | ல |

## 591

(இ - ள்.) செவ்வாய் ஆக்ஷி பெற்று 2-ல் நிற்கவும், சுக்கிரன், குரு, சந்திரன் ஆகிய மூவரும் லக்கினத்தில் நிற்கவும், அல்லது சந்திரனுங் குருவுங் கூடி 3-ம் இடத்தில் நிற்கப் பெற்ற ஜாதகர் ஐந்தூரிற் பூமி யுடையவராம்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| | செ | ல-சு கு சந் | |

## 592

(இ - ள்.) குருவுக்கு கேந்திரத்திற் சந்திரனும் குருவுக்கு 11-லும் சந்திரனுக்கு திரிகோணத்திலும் செவ்வாய் நிற்கவும் பெற்ற ஜாதகர் ஐந்தூரிற் பூமி யுடையவராம்.

| | | | |
|---|---|---|---|
| | குரு | | சு |
| செ | இராசிச் சக்கரம். | | ல |
| | | | |
| | | சந் | |

## 593

(இ - ள்.) கேந்திரத்திற் செவ்வாய் 7-க்குடையவர் புதன் ஆகிய மூவரும் நிற்கவும், சந்திரன் கேந்திர மடையவும், 11-ல் சுக்கிரன் நிற்கவும், 5-ம் இடத்திற் குரு நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு சினேகத்தால் நஞ்சை பூமி யுடையவராம்.

| | | | குரு |
|---|---|---|---|
| ல | இராசிச் | | |
| | சக்கரம். | | சந் |
| சு | செ பு | | |

## 594

(இ - ள்.) குருவுக்கு கேந்திர ஸ்தானத்திற் செவ்வாயும், 9-க்குடையவரும் நிற்கவும், லக்கின கேந்திரத்திற் சந்திரன் அமரவும். 2-ம் இடத்தில் புதனும், சுக்கிரனும் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு நஞ்சை புஞ்சை மிகுதி யுள்ளவராம்.

| . | | செ சனி | ல சந் |
|---|---|---|---|
| | இராசிச் | | சு பு |
| | சக்கரம். | | |
| | குரு | | |

## 595

(இ - ள்.) 4-ம் இடத்திற் செவ்வாய் நிற்கவும், கேந்திரத்தில் புதனும், சந்திரனும் அமரவும், லக்கினத்திற் குருவும், 11-ம் இடத்தில் 4-க்குடையவரும், சுக்கிரன் 6-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு நஞ்சை பூமி விசேடமா யுண்டாம்.

| | சு | சந் பு | |
|---|---|---|---|
| செ | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| | ல குரு | | சனி |

## 596

(இ - ள்.) 3-ம் இடத்திற் சந்திரன் செவ்வாய் நிற்கவும், 4-ம் இடத்திற் குரு அமரவும், சுக்கிரன் 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு நஞ்சை புஞ்சை உண்டாகி பலித்து வருமாம்.

| | | | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| குரு | சக்கரம். | | |
| சந் செ | சு | ல | |

## 597




(இ - ள்.) 11-ல் செவ்வாய் நிற்கவும், சுக்கிரனும், புதனுங் கூடி லக்கினத்தில் அமரவும், சந்திரன் 9-ம் இடத்தில்நிற்கவும்பெற்ற ஜாதகருக்கு எண்ணிறந்த பூமி யுண்டாகுமாம்.

### சுகானுபவம்

## 598




(இ - ள்.) லக்கினாதிபதி 10-ல் நிற்கவும், 10-க்குடையவர் 4-ல் நிற்கவும், 4-க்குடையவர் உச்ச மடைந்து திரிகோண மேறவும் பெற்ற ஜாதகர் 100-வயல் உடையவராம்.

[2] 10-க்குடையவர் 4-ல் நிற்கவும், 4-க்குடையவர் 10-ல் நிற்கவும், லக்கினாதிபதி கேந்திரத்தில் உச்ச மடையவும் பெற்ற ஜாதகர் மெற்கூறிய பூமி யுடையவரேயாம்.

## 599




(இ - ள்.) 2-க்குடையவர் 11-ல் நிற்கவும், 11-க்குடையவர் 2-ல் அமரவும். அல்லது அதற்கு திரிகோண மடையவும், 4-க்குடையவர் உச்ச மடைந்து ஐராவதாங்கிசமேரவும், இவரை பாபர் நோக்கா திருக்கவும் பெற்ற ஜாதகர் குதிரை, ஆனை யுடைய ராஜ யோகனும்.

## 600

(இ - ள்.) 10-க்குடையவர் 9-ல் நிற்கவும், 9-க்குடையவர் 10 க்குடையவருக்கு 10-ல் அமரவும் இலக்கினாதிபதி திரிகோணமடையவும், 4-க்குடையவர் இலக்கினத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு லட்சுமிக்கு ஒப்பாகிய மனையாள் கிடைத்து புஞ்சை, நஞ்சை, கன்று, காலி யுண்டாகுமாம்.




## 601

(இ - ள்.) சுக்கிரன் திரிகோணமேறி சந்திரனுக்கு 11-ல் நிற்கவும், செவ்வாய், 2-க்குடையவர், சந்திரன் ஆகிய மூவரும் 11-ல் நிற்கவும், 2-ல் குரு அமரவும், அவரை 9-க்குடையவர் பார்க்கவும், அல்லது செவ்வாயை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் பூமி பாக்கிய பூபாலனும்.




## 602

(இ - ள்.) 1-4-7-க்குடையவரும், சந்திரனுமாகிய நால்வரும் குருவுக்கு 11-ல் நிற்கவும், 2-11-க்குடையவர் திரிகோண மடையவும், இராகு கேந்திரத்தில் நிற்கவும், 3-க்குடையவர் கேந்திர மடையவும், குரு 8-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் அஸ்வ யோகமும், உப்பரிகையு முடையவராம்.




## 603

(இ - ள்.) இலக்கினத்தில் இராகு நிற்கவும், சந்திரன் திரிகோணமேறி குருவுக்கு 11-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் இலக்ஷுமி பாலனுய் கருணையுடைய புண்ணியராம்.




## 604

(இ - ள்.) 4-ம் இடம் குரு, சந்திரன் வீடாயிருக்கவும், அவர்களோடு சுபர்கள் கூடி யிருந்தாலும், அல்லது இந்த 3-கிரகங்களும்

கூடி தேவவர்க்க மடைந்தாலும் இந்த இரண்டு ஜாதகர்களும் சுக போக முடையவர்களாம்.

## 605

(இ - ள்.) 4-ம் இடம் சுபர் வீடாக அதற்குரியவர் 9-க்குடையவருக்கு 4-ம் இடத்தில் நிற்கவும், சந்திரனும், 2-க்குடைய வருங் கூடி ஒரு ராசியி லமரவும், 9-க்குடை யவர் 2-ல் நிற்கவும், 11-க்குடையவர் 9-ல் அமரவும், அவரை சுபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகர் சுகானுபவமும், நிதியும் பெருகி வாழ்பவராம்.

| ல | சந் செ | சு | |
|---|---|---|---|
| | இராசிச் | | பு |
| | சக்கரம். | | |
| | சனி | | |

## 606

(இ - ள்.) 4-க்குடையவர் 11-ல் நிற்க வும், 9-க்குடையவர் கேந்திர மடையவும், இலக்கினாதிபதி 4-ல் நிற்கவும், 2-க்குடைய வர் இலக்கின மடையவும், 7-ம் இடத்தில் 12-க்குடையவர் நிற்கவும் பெற்ற ஜாதகர் உலக சுகங்களெல்லா மனுபவிக்குஞ் சுகிர்த வானும்.

| | | சு சந் | |
|---|---|---|---|
| செ | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| | ல குரு | | சனி |

## 607

(இ - ள்.) 4-க்குடையவர் இலக்கின கேந்திரமேறி 4-ம் இடத்தைப் பார்க்கவும், 11-க்குரியவர் 9-ல் நிற்கவும், 9-க்கு 2-க் குடையவரும், லக்கினாதிபதியும், 12-க்குடை யவரும் ஆகிய மூவருங் கூடி ஒரு ராசியில் நிற்கப் பெற்ற ஜாதகர் பலவகை அலங்கார சுகமும், நிதியுமுடையவராம்.

| | பு | சு சந் கு | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| | | | ல செ |

## 608

(இ - ள்.) 7-5-10-9-க்குடையவர் சுக் கிரன் ஆகிய ஐவருங் கூடி ஜல ராசியில் தேவவர்க்க மடைந்தாலும், அல்லது திரி கோண கேந்திரங்களில் உச்ச மடைந்தா லும், இதிற்பிறந்த ஜாதகர் முல்லை, குருஞ்சி, மருது, நெய்த லென்னும் நான்கு நிலத்துக் குரியவராம்.

| ல | | | |
|---|---|---|---|
| | இராசிச் | | பு செ சகுசு |
| | சக்கரம். | | |
| | | | |

## 609

(இ - ள்.) செவ்வாய் குருவுக்கு கேந்திரம் பெற்று 9-ம் இடத்தில் நிற்கவும், சுக்கிரன், சூரியன் 7-க்குடையவர் ஆகிய மூவருங் கூடி கடகத்தில் நிற்கவும், சந்திரன் இலக்கினத்தில் அமரவும், அவரை இராகு பார்க்கவும், புதன், சுக்கிரனுக்கு 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் நஞ்சை, புஞ்சை, பொருள், முன்னோர்களுக்குமேல் அதிகந் தேடுவாராம்.

| | செ | | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | சனி சூ-சு |
| ரா | | | ல-பு சந் கே |
| | | குரு | |

## 610

(இ - ள்.) 7-க்குடையவர் 9-ல் நிற்கவும், சந்திரனுங் குருவுங் கூடி சுக்கிரனுக்கு திரிகோண மடையவும், சூரியனும், புதனுங் கூடி சுக்கிரனுக்கு 11-ல் அமரவும், இராகு 2-ல நிற்கவும், இலக்கினாதிபதி 10-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் பழைய பூமிகளோடு அதிக பொருள் பூமி தேடி நீதி வர்த்தகமாய் சிவாய நமவென்று சதா சிந்திப்பனும்.

| குரு சந் | | சூ-பு கே | செ |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம் | | சு |
| | | | |
| | ரா | ல | |

## 611

(இ - ள்.) குரு 4-க்குடையவராகி அதில் நிற்கவும். சந்திரனோடு செவ்வாய் கூடி சுக்கிரனுக்கு 11-ல் நிற்கவும், சுக்கிரனும் சூரியனும் ஆகிய இருவருங் கூடி குருவுக்கு திரிகோண மடையவும், புதன் பலமடைந்து 7-ல் ஆக்ஷி யடையவும், 9-ம் இடத்தில் இராகு நிற்கவும், கேது 2-க்குடையவருக்கு 4-ல் அமரவும் பெற்ற ஜாதகர் குறைவில்லாது மாடமாளிகை பொருளுடன் குறிப்பிட்ட தேவதையை துதிசெய்து மோக்ஷ மடைவானும்.

| குரு | | சந் செ | பு |
|---|---|---|---|
| கே | இராசிச் சக்கரம். | | சு கு |
| | | | ரா |
| ல | சனி | | |

## 612




(இ - ள்.) செவ்வாய், சந்திரன், புதன் ஆகிய மூவருங் கூடி 11-ல் நிற்கவும், 2-ல் குரு அமரவும், சுக்கிரன் 9-ல் நிற்கவும், இராகு இலக்கினத்தில் நிற்கவும், குருவுக்கு கேந்திரத்தில் 9-க்குடையவர் நிற்கவும், பெற்ற ஜாதகர் தனக்கு மூதோர்களிலும் அறிவு வுடையவராய் குடும்ப துன்பம் நீக்கி பூமி பொருள் அதிகந் தேடி அயல் தேசம் புக்கு வாழ்பவனும்.

## 613




(இ - ள்.) குருவும், சுக்கிரனும் கூடி 9-ல் அமரவும், இலக்கினத்திற் சனி நிற்கவும், புதனும், சூரியனுங் கூடி 10-ல் அமரவும், 7-ம் இடத்திற்கு 4-ல் இராகுவுஞ் செவ்வாயும் நிற்கவும், சந்திரன் குருவுக்கு கேந்திர மடைந்தும் ராசியின்கண் நிற்கவும் பெற்ற கன்யா லக்கின ஜாதகர் பூமி விகட வார்த்தை டம்ப முடையவராய் பிதா முதலானவர்களுக் கடங்காமல் அன்னிய தேசம் போய் பிழைப்பானும்.

## 614




(இ - ள்.) 9-க்குடையவர் பலமடையவும், இலக்கினுதிபதி கேந்திரம் பெறவும், 9-க் குடையவரை சூரியன் கூடி 6-ம் இடத்தில் நிற்கவும், அன் நவாங்கிசாதிபதியை 9-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் பூமி வாகனம் மிகுதி யுடையவராம்.




[2] இலக்கினமாகினும் 5-ம் இடமாகினும் சரராசியா யிருக்கவும், 5-ம் இடத்திற் சூரியவரும், குரு புதன், சுக்கிரன், சந்திரன் ஆகிய ஐவரும் 5-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் கடவுள் கிருபை மிகுதியாய் பூரண ஆயுளும் மேற் வீடும் நஞ்சை புஞ்சை மிகுதி யுடையவராம்.

## 615

(இ - ள்.) 4-க்குடையவரும், சுக்கிரன், குரு ஆகிய மூவருங் கூடி 4-க்கு 11-ல் நிற்கவும், அவர்களை 9-க்குடையவர் 11-க்குடையவருடன் கூடி 4-ம் இடத்திற்கு 9-ல் நின்று பார்க்கவும் பெற்ற ஜாதகர் நஞ்சை புஞ்சை மிகுதி யுடையவராம்.

| | | சனி செ | ல |
|---|---|---|---|
| | இராசிச் | | பு-சு குரு |
| | சக்கரம். | | |
| | | | |

[2] மேற் கூறிய கிரகங்கள் வர்க்கங்களில் உத்தமபல மடைந்தால் மேலாகிய பிரபுவா யிருப்பாராம்.

[3] மேற் கூறிய கிரகங்கள் ஐராவதாங்கிசத்தில் வர்க்கபல மடைந்தால் மகாப் பிரபு வென்றுங் கூறப்படும்.

## 616

(இ - ள்.) 4-2-க்குடையவர்கள் கூடி கேந்திரபல மடையவும், செவ்வாய் 9-ல் நிற்கவும், சந்திரன் 11-ல் ஆக்ஷி யடையவும், அவர்களை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் நஞ்சை புஞ்சை யடையவராம்.

| | | செ | |
|---|---|---|---|
| | இராசிச் | | சந் |
| குரு சு | சக்கரம். | | |
| | | | ல |

[2] முன் கூறிய கிரகங்கள் கோபுராங்கிசமேறி வர்க்கபல மடைந்தால் லக்ஷிமீகர முடையவனும்.

## 617

(இ - ள்.) 4-க் குடையவர் ஆட்சி யடையவும், செவ்வாய் திரிகோணமேறி 4-க் குடையவரை பார்க்கவும், 9-க்குடையவர் 11-க்குடையவரோடு கூடி 4-க்கு திரிகோண மடையவும் பெற்ற ஜாதகர் பூமியும், இலக்ஷிமிக் கொப்பாகிய மனைவியு முடையவராம்.

| | | செ | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| | சக்கரம். | | சு சந் |
| குரு | | | ல |

[2] மேற் கூறிய கிரகமெல்லாம் சுபவர்க்க வைசேடிகாம்சமேறில் மகாப் பிரபுவாய் தில்லையைத் துதிப்பனும்.

## 618

| | | | |
|---|---|---|---|
| | கு | | பு-சு சந் |
| சனி | இராசிச் | | |
| | சங்கரம். | | |
| | ல | குரு | |

(இ - ள்.) 4-க்குடையவர் ஆக்ஷிபெற்று 2-11-க்குடையவருக்கு திரிகோணமடைய வும், இவர்களை குருமத்தியில் நின்று பார்க்க வும், சுக்கிரனும் 9-க்குடையவருங் கூடி குரு வுக்கு திரிகோண மடையவும், 7-க்கு 10-க் குடையவர் ஆக்ஷி அல்லது குருவுக்கு திரி கோண கேந்திர மடையவும் பெற்ற ஜாதகர் பூமி, சிவபக்தி வர்த்தகத்தொழில் உடைய வராம்.

## 619

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| பு | செ கு-ரா | ல-சு சந் கு | சனி |

(இ - ள்.) செவ்வாய் 4-க்குடையவர் பார்வையைப்பெற்று 4-க்கு 11-ல் நிற்கவும், 11-க்குடையவர், இராகு ஆகிய இருவரும் செவ்வாயோடுகூடவும், இலக்கினாதிபதிகுரு, சந்திரன் ஆகிய மூவரும் இலக்கினத்தில் அமரவும், 3-ம் இடத்திற் புதனிற்கவும் பெற்ற ஜாதகர் நீர்வளமுள்ள பூமியும், இராஜ சுக முள்ளவ ராவராம்.

## 620

| | | | |
|---|---|---|---|
| | | செ | |
| ல | இராசிச் | | குரு |
| | சக்கரம். | | |
| | சு-பு ராசந் | | |

(இ - ள்.) செவ்வாய் 4-ம் இடத்தி லும், குருவுக்கு 11-லும் நிற்கவும், 4-க் குடையவர் சந்திரனுக்கும், புதனுக்குங் கேந் திர மடைந்து இராகுவோடு கூடி நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு நீர்வளமுள்ள பூமி யுடையவராம்.

## 621

| | | | |
|---|---|---|---|
| பு | செ சு | | |
| | இராசிச் | | சந் கே |
| குரு ரா | சக்கரம். | | |
| | | | ல |

(இ - ள்.) செவ்வாய் ஆக்ஷிபெற்று 2-9-க்குடையவரோடு கூடி சந்திரன், குருஇவர் களுக்கும் கேந்திர மடையவும், 4-க்குடைய வர் இராகுவோடு கூடி திரிகோண மடைந் தும், 2-9-க்குடையவரும், செவ்வாய், சந்தி ரன் ஆகிய நால்வருக்கும் கேந்திர மடைய வும், இலக்கினாதிபதி 7-ல்நிற்கவும். 4-ம் இட மும், 7-ம் இடமும் குரு வீடாயிருக்கவும் பெற்ற ஜாதகர் கல்விப் பொருளும் பூமியு முடையவராம்.

## 622

(இ - ள்.) 4-க்குடையவர் உத்தம ராசியில் இலக்கிஞதிபத்தியமும் பெற்று செவ்வாய்க்கு 2-லும், அல்லாமலும் 9-7-க் குடையவர்களுக்குப், திரிகோணம் பெற்று 11-ல் நிற்கவும், சந்திரன் 9-7-க்குடையவர் களுக்கும் கேந்திரமும், 11-க்குடையவருக்கு திரிகோணம் பெற்று 2-க்குடையவரோடு கூடி 4-ம் இடத்திற்கு 9-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் பூமியுடையவராய் அன்னியவேத வாழ்விற் சேர்பவராம்.

| | | | |
|---|---|---|---|
| சு | | | |
| கு பு | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| ல | சந் சனி | குரு | செ |

## 623

(இ - ள்.) செவ்வாய் 2-ல் ஆக்ஷி பெற்று 11-க்குடையவரோடு கூடி 4-ம் இடத்திற்கு 11-ல் நிற்கவும், அவர்களை 4-க் குடையவர் பார்க்கவும், சுக்கிரன் ஆக்ஷி பெற்று குரு, சந்திரனேடு கூடி இலக்கினத் திலும், 4-க்குடையவருக்கு 2-லும் நிற்கப் பெற்ற ஜாதகர் மூதோர்கள் தேடிய பூமி யிலும் மேன்மையான பூமி கொள்வாஞம்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| | செ கு | ல-சு கு சந் | சனி |

## 624

(இ - ள்.) 4-க்குடையவர் 4-ம் இடத் திற்கு திரிகோண மடையவும், அவருக்கு 11-ம் இடத்தில் 9-க்குடையவர் நிற்கவும், செவ்வாய் 4-க்குடையவருக்கு திரிகோண மடையவும், 9-க்குடையவர் 4-ம் இடத்தை பார்க்கவும், இலக்கினத்தில் 2-க்குடையவர் நிற்கவும், இலக்கிஞதிபதி 4-ம் இடத்தில் நிற்கவும், 4-க்குடையவரும், சுக்கிரனும் ஒரு வரால் நிற்கவும், 2-ம் இடம் 4-ம் இடத்தையும் குரு பார்க்கவும் பெற்ற ஜாதக ருள்ளவரையில் பூமியோக முடையவராம்.

| | | | |
|---|---|---|---|
| | குரு | | சு |
| செ | இராசிச் சக்கரம். | | ல கு |
| | | | |
| | | சந் | |

## 625

(இ - ள்.) 4-க்குடையவருஞ் செவ்வாயும் கூடி கேந்திரமேறி புனித னென்கின்ற இலக்கினாதிபதிக்கும் உறவா யிருந்து குருவின் வீட்டில் 11-க்குடையவர் வலியையு மடைந்து நிற்கவும், அவர் நின்ற இராசியாதிபதி சுபனாயிருந்து அல்லது 4-7-க்குடையவரா யிருந்து பூமி காரகனாகிய செவ்வாய்க்கு கேந்திர மடையவும், 1-11-க்குடையவர்கள் திரிகோண மடையவும், அல்லது செவ்வாய்க்கு 11-ம் இடத்தில் 1-11-க்குடையவர் நிற்கவும், குரு இலக்கின கேந்திர மடையவும், 2-9-க்குரியவர்கள் 2-ல் நிற்கவும், இலக்கினாதிபதி 11-ல் நிற்கவும் பெற்ற ஜாதகரும்.

## 626

(இ - ள்.) 7-க்குடையவரும், இராகுவும், குருவும் ஆகிய மூவரும் கூடி திரிகோணத்திலேனும், 7-ம் இடத்திலேனும் மேன்மையான தேவ வர்க்க பலமடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகர்கள் நீர்த் தாழ்ந்த பூமி யுடையவராய் உத்தமப் பெண்ணை விவாகஞ்செய்து நற்குணத்தோடு மிருப்பார்ாளாம்.

## 627

(இ - ள்.) 4-க்குடையவர் செவ்வாயாகி சுக்கிரன், குரு இவர்களோடு கூடி 4-க்கு கேந்திர மடைந்து இராகுவுக்கு திரிகோண மேறியும், 9-க்குடையவரை 11-ல் வைத்து நிற்கவும் பெற்ற ஜாதகர் நீர்வளமுள்ள பூமிகளும், பொருளு முடைய மன்மத மோகனாய் வாழ்பவனும்.




## 628

(இ - ள்.) 4-க்கும், 11-க்குடையவரெவரோ அவர் சுகமடைந்து 9-ல் நிற்கவும், 9-க்குடையவர் 4-லினும், 5-10-க்குடையவர்களுக்கு திரிகோண மடையவும், அவரை 2-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் பூமி, ஆயுள், விர்த்தி, பொருள் சுகமுடையவராம்.



## 629

(இ - ள்.) 4-க்குடையவரையும். சுக்கிரனையும் 10-க்குடையவரும், சூரியனும், 8 க்குடையவரும் கூடி நிற்கவும், அவர்களை குரு பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகர் நித்திய தரித்திரனுய் ஆயுள்வரையில் துக்கமுடையவனுவனும்.

| | | | |
|---|---|---|---|
| | ல | | |
| | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| | ச-சு-சனி கு-செ | | |

## 630

(இ - ள்.) 2-12-க்குடையவர்கள் நீச அஸ்தமன மடையவும், 4-க்குடையவரும், சுக்கிரனுங் கூடி ஈனவர்க்கம் பெற்றுலும் அவர்களுடன் பாபர் கூடி நிற்கவும், பார்க்கவும் பெற்ற ஜாதகர் குடும்பம் அழிந்து வேற்றாரி லலைவானும்.

| | | | |
|---|---|---|---|
| | சே | | செவ் சனி-சு |
| சந் | இராசிச் சக்கரம் | | |
| குரு | | | |
| | ல | ரா | |

## 631

(இ - ள்.) மேற்கூறிய வண்ணம் பலன் றவருபடாதாகினும் அதின் வேற்றுமை நுட்பம் கூறுகின்றனம். மேற்கூறிய கிரகங்கள் இராசியில் நற்செய லடைந்தால், வெடுவெடுத்திட்ட அமுதம் போலும், தீச்செய லடைந்தால் விடத்தில் நெருப்பு கலந்தன போலும், நல்லவர்கள் நற்செயலி லிருந்தால் தேனேடு பால் கலந்தனபோலும், அவர்கள் தீச்செயலி லிருந்தால் மருந்தில் தேன் கலந்தனபோலும் பலன் கூறல் வேண்டுமாம். இவர்கள் பாபர் சுபராயிருந்தாலும் அந்தந்த ஸ்தானத்துக்குரிய பலன்களையே கொடுப்பாராம்.

## 632

(இ - ள்.) 10-12-க் குடையவர்கள் ஆகிய இருவரும் 8-ல் நிற்கவும், 8-க்குடையவக் பகைத்து சந்திரன், சனி, 6-க்குடையவர்களோடு கூடி பார்க்கவும் பெற்ற ஜாதகர் தாம் சுகித்திருக்க தான் பிணத்தைப் புசிக்கும் நாய்போல் புசிக்கும் தரித்திரனும்.

| | | | |
|---|---|---|---|
| | சூ பு | | |
| | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| | | செ ச சனி | ல |




[2] 8-க்குடையவர் சந்திரன் 12-4-க்குடையவர்கள் ஆகிய நால்வரும் ஒரு ராசியில் நிற்கவும், இலக்கிநாதிபதி, சூரியன், செவ்வாய் ஆகிய மூவருங் கூடி ஒரு இராசியில் நிற்கவும் பெற்ற ஜாதகன் இறந்த போதிலும் வாய்க்கரிசிக் கிடமில்லாத தரித்திரனும்.

## 633




(இ - ள்.) இலக்கிநாதிபதியுஞ் சனியும் நீச்ச மடையவும், அவர்களை பாபர்கள் கூடவும், குரு பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகன் வீடில்லாமல் அசுத்த முள்ளவனாகிய தரித்திரனும்.

[2] 4-ம் இடத்தில் சனியோடு பாபர்கள் கூடி நிற்கவும், 9-ம் இடத்தில் செவ்வாயோடு 8-6-க்குடையவர்கள் கூடி நிற்கவும், இலக்கினத்தில் குளிகாதி பாபர்கள் நிற்கப்பெற்ற ஜாதகர் ஆயுள்வரையில் கேவல குடிசையி லிருந்து துயரப்படுவனும்.

## 634




(இ - ள்.) 4-க்குடையவர் சுக்கிரனோடு கூடி நீச ராசியில் நிற்கவும் பெற்ற ஜாதகன் பேய்போல தனி மனையில் தனியாயிருந்து தவிப்பானும்.

[2] மேற்கூறிய கிரகங்களை சனி பார்த்தால் முகப்பில்லாத ஒதுக்கு வீட்டின் மூலையில் துயரப்படுவனும்.

[3] அச் சனியோடு கேது கூடி மேற்கூறியவர் பார்க்கப் பட்டால் ஜாதகர் சொய வீடில்லாது சத்திரம், சாவடியில் தூங்குவானும்.

## 635

(இ - ள்.) 4-ம் இடத்தில் இராகுவோடு பாபர்கள் கூடி நிற்கவும், அவர்களை சனி பார்க்கவும் பெற்ற ஜாதகன் வீடு நாஸ்தி யடையுமாம்.

| | | | |
|---|---|---|---|
| | கே | | |
| | இராசிச் | | ல |
| சனி | சக்கரம். | | |
| | | ரா சு செ | |

[2] 4-ம் இடத்திலேனும், இலக்கினத்திலேனும் 8-க்குடையவர் வலி குறைந்து நிற்கவும், 4-ம் இடத்தில் குளிகன் நிற்கவும், அவரை குரு பார்க்காதிருக்கவும் பெற்றஜாதகர் சாலை சோலைகளிற் றிரிந்து பகலிருந்த ஊரி லிரவி லில்லாமலும் பசி யென்னும் பெண்ணுக்கு துணைவனா யிருப்பனாம்.

## 636

(இ - ள்.) 8-க்குடையவர் இலக்கினாதிபதிக்கு 6-ல் நிற்கவும், 6-ம் இடத்தில் 2-க்குடையவர் அமரவும் பெற்ற ஜாதகர் கட்டத் துணியற்று, உண்ணக் கஞ்சியு மற்று மங்குவானாம்.

| | | | |
|---|---|---|---|
| | குரு | | |
| | இராசிச் | | |
| பு | சக்கரம். | | ல |
| | சூ | | |

(இ - ள்.) 8-9-க்குடையவர்கள் கூடி ஒரு ராசியில் நிற்கவும், இலக்கினாதிபதி 8-ல் நிற்கப்பெற்ற ஜாதகன் கையால் சட்டிகொண்டு வீடுகள்தோறும் பசியினால் தவிப்பனாம்.

## 637

(இ - ள்.) 4-க்குடையவர் 12-க்குடையவரோடு கூடி நிற்கவும், சுக்கிரன் 10-க்குடையவரோடு கூடவும், அவரை 8-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் அன்னம் ஆடை யென்று கோடி சந்தி திரிபவனாம்.

| | | | |
|---|---|---|---|
| | | குரு செ | |
| சு பு | இராசிச் | | |
| | சக்கரம். | | சந் |
| ல | | | |

## அவயோகம்




[2] தேய்பிறைச் சந்திரன் 9-க்குடையவரோடு கூடி 8 ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு வேலை கிடைத்தாலும், கூலி கிடைக்காமல் வீணுக்கு உழைத்து மெலிந்து போவனும்.

## 638




(இ-ள்.) குருவிருந்த இராசியாதிபதி 12-க்குடையவரோடு கூடி 11-ல் நிற்கவும், சுபக் கிரகங்களெல்லாம் 6-8-12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் வீதியிலிருந்து கதியில்லாமல் வாடுவனும்.

[2] இலக்கினாதிபதி யிருந்த ராசியிலும் சந்திரன் நின்ற ராசியிலும் இரண்டு பக்கமும் பருவிருந்தது போல் பாபர்கள் நிற்பாராகில் பேராசை கொண்ட தரித்திரனும்.

## 639




(இ-ள்.) சந்திரனுக்கு 8-க்குடையவரை இலக்கினத்திற்கு 4-க்குடையவர் கூடி 6-ம் இடத்தில் நிற்கவும், 4-ம் இடத்திற் பாபர்கள் கூடி நிற்கவும் பெற்ற ஜாதகர் நாடோறுங் கூலி வேலையின்றி பொருளில்லா தலைவனும்.

[2] 9-க்குடையவர் நீசமடையவும், 4-ம் இடத்திலும், 10-ம் இடத்திலும், இலக்கினத்திலும் கொடிய பாபர்கணிற்கப்பெற்ற ஜாதகர் அம்பி லடிபட்ட மானைப்போல் அன்ன மாடை யில்லாது மயங்கி யலைவானும்.

## 640

(இ - ள்.) தேய்பிறைச் சந்திரன் நீசமடையவும், அவர் பக்கங்களில் இலக்கினதிபதி நிற்கவும், அந்த இலக்கினதிபதிக்கேழுக் குடையவரும், 2-க்குடையவருஞ் சனிக்கு 4-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகன் வறுமையி லிருந்து நொந்து விடுவானும்.

| | செ | | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| சனி | சக்கரம். | | |
| ல | சந் | குரு | |

[2] 10-க்குடையவர் 8-ம் இடத்தில் நிற்கவும், 4-க்குடையவருக்கு பகை பெற்றவர்கள் சந்திரனுக்கு 6-8-12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் சிந்தை நொந்து நாடோறும் வறுமை யுடையவனும்.

[3] செவ்வாய், சனி, சந்திரனுக்கு 8-க்குடையவர் ஆகிய மூவரும் 11-ம் இடத்தில் நிற்கவும், 11-க்குடையவர் 12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் பசியினு லலைந்து வாடுவானும்.

## 641

(இ - ள்.) சனியோடு சந்திரன் கூடி 9-ல் நிற்கவும், இலக்கினதிபதி நின்ற இராசிக்கு 8-க்குடையவர் இலக்கினத்திற் பாபர்கள் பார்வை கிடைத்து நிற்கவும் பெற்ற ஜாதகன் வறுமை சோம்பலினுல் துயரமடைவனும்.

| | | | கே செ |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| | சக்கரம். | | சந் சனி |
| ல-சு ரா-சு | பு | குரு | |

[2] சந்திரனும் 6-க்குடையவருங் கூடி நிற்கவும், அவர்கள் நின்ற இராசியாதிபதியும், அவ் விராசியாதிபதிக்கு 8-க்குடையவருங் கூடி இலக்கினத்தில் நிற்கவும், இலக்கினதிபதி 6-8-12-லிருந்து பலக் குறைவு அடையவும் பெற்ற ஜாதகன் பொடிக்கேனும் ஒரு காசு கிடைக்காதவனும்.

## 642

(இ - ள்.) 7-க்குடையவர் சனி வீட்டில் நிற்கவும், அவரை சனி பார்க்கவும், 7-க்கு 9-க்குடையவர் இலக்கினத்திற்கு 8-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் அன்னம் ஆடையில்லாமல் தானிருக்க நிழலு மில்லாமல் வாடுவனும்.

| | | சனி | |
|---|---|---|---|
| சந் | இராசிச் | | |
| ல | சக்கரம். | | குரு |
| | | | |

[2] 7-ம் இடத்தில் சுக்கிரன் சிறப்படைந்து நிற்கவும், அவரோடு பாபர்கள் கூடி நிற்கவும் பெற்ற ஜாதகன் விதவையை புணரும் கழுதை போன்றவனும் இவன் தொடுங் காரியங்கள் பலியாதாம்.

## 643

(இ - ள்.) 7-8-க்குடையவர்கள் கூடி நிற்கவும், திரிகோண கேந்திரங்களை பாபர்கள் நோக்கவும், 2-க்குடையவர் 8-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் முறையற்ற நீச மாதரையும், திரேக ஊனமுள்ள ஸ்திரீகளையும், தேவாலயம், குளக்கரை, மடம், கொல்லை முதலிய இடங்களில் புணர்ந்து வேறு கதியில்லா தலைவனும்.

| சூ | சு | ரா | குரு செ |
|---|---|---|---|
| பு | இராசிச் | | |
| சனி | சக்கரம். | | சந் |
| | கே | | ல |

## 644

(இ - ள்.) 7-ம் இடம் கன்னியா யிருக்கவும், அதில் 8-க்குடையவர் அமரவும், அவரைச் சனி பார்க்கவும், 12-ல் சுபர்கள் நிற்கவும், இராகு 9-லிருந்து கன்னியைப் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு அனேக வித்தைகளிருந்தும், இவன் பணியாளை பகைவர்கள் கூடி புணரப்படுவார்களாம் அன்னடைக்குள்ளாகி இவனென்றியின்றி வாடுவனும்.

| ல சனி | | கே | |
|---|---|---|---|
| குரு சந் | இராசிச் | | |
| | சக்கரம் | | பு சூ |
| | ரா | | சு |

## 645

(இ - ள்.) 4-ல் சூரியன் நிற்கவும், அவரை சனி பார்க்கவும், 12-ல் சந்திரன் அமரவும், 2-ல் 12-க்குடையவர் நிற்கவும், அல்லது 6-ம் இடத்தி லமரவும், அவரை 8-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் உடலெடுத்த நாள் முதல் அந்தியம் வரையில் தாரித்திரனுய் துன்ப மடைவானும்.

| சந் | ல | | |
|---|---|---|---|
| செ | இராசிச் | | சூ |
| சனி | சக்கரம். | | |
| | | | குரு |

## 646

(இ - ள்.) 4-க்குடையவர், சந்திரன், 9-க்குடையவர் ஆகிய மூவருங் கூடி 3-ம் இடத்தில் நிற்கவும், அவர்களை பாபர்கள் நோக்கவும், 3-க்குடையவர் 12-ல் நிற்கவும், அவரோடு இலக்கினதிபதி கூடவும், சந்திரன் காலி ராசியை பார்க்கவும் பெற்றஜாதகருக்கு செல்வம், குணம், நெறி முதலியவைகளு மில்லையாம்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம். | | ரா |
| கே | | | செ பு |
| | குரு சந்-சு | சூ | ல சனி |

## 647

(இ - ள்.) சுக்கிரனும், 10-12-க்குடையவர்கள் ஆகிய மூவருங் கூடி 9-ம் இடத்தில் நிற்கவும், 9-க்குடையவர் 2-க்குடையவரோடு கூடி 12-ல நிற்கவும் பெற்ற ஜாதகருடைய குடும்பம் அழிந்தே தீருமாம்.

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| செ | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| | சு சநி குரு | | |

[2] குருவுக்கு 10-ல் 12-க்குடையவர் நிற்கவும். 6-க்குடையவர் 2-ல் அமரவும், 8-க்குடையவர் 9-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு செல்வம் மிகுதிபாகக் காண்பித்து புகைபோல் மாறிவிடுமாம்.

| | | | |
|---|---|---|---|
| | | சு | |
| | இராசிச் சக்கரம். | | பு |
| | | | குரு |
| செ | ல | | |

## 648

(இ - ள்.) இலக்கினதிபதியும், சிங்க ராசிக்குரிய சூரியனுங் கூடி நிற்கும் இராசி ஒருவருக்கு நீசமாகவும், அன்னீசக் கிரகத்தை நீசம் பெற்ற சனி பகைபெற்று பார்க்கவும், இலக்கினத்தை குரு, சுக்கிரன் இவர்களில் ஒருவர் பாரக்காதிருக்கவும் பெற்ற ஜாதகன் தன் குலத்தைச் சுடும் நெருப்பாகவும், சஞ்சலமும், அகட விகடங்களு முள்ளவனும்.

| | | | |
|---|---|---|---|
| | சனி | | குரு |
| | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| | ல | சூ செ | சு |

## 649




(இ - ள்.) 12-க்குடையவர் சர ராசியில் நிற்கவும், 10-க்குடையவர் திர ராசியிலமரவும், உபய ராசியில் 2-க்குடையவர் நிற்கவும், இவர்களை பாபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகர் குடும்பம் விழலைப்போலாகுமாம்.

[2] 8-10-க்குடையவர்கள் பலஹீன மடைந்து 6-8-12-ல் நிற்கவும், இலக்கினாதிபதி 12-ல் அமரவும் பெற்ற ஜாதகர் மத்தியில் ஆடையாபரணங்களை தோர்ப்பானும்.

## 650




(இ - ள்.) 12-ம் இடம் சர ராசியாகவும்; அதில் 2-க்குடையவர் நிற்கவும், 12-க்குடையவர் 4-ல் நிற்கவும், இலக்கினாதிபதி சர ராசியில் அமரவும், அவரை குரு பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகர் துக்கமே வடிவாகக்கொண்டு மனையாள் ஏசவும், உறுதியில்லாதவனுமாவனும்.

## 651




(இ - ள்.) 2-ல் சூரியனும், இராகுவுங் கூடி நிற்கவும், 4-க்குடையவர் 12-ல் நிற்கவும், இவர்களை குரு பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகன் ஒருவரிடத்திற் கடன் வாங்கானென்றும், தானும் கொடானென்றும், பொருளைச்சோரர் கைபுகாதென்னும் வலிமையிருக்கினும், ஓர் பெண்ணாகிய தன் மனைவியால் மனங் கலங்கச்செய்து அவளோடேகி தீயுறவாகிய நட்படைவனும்.

## 652




(இ - ள்.) 2-9-11-க் குடையவர்களாகிய மூவர்களுக்கும், 4-7-ல் சனி, செவ்வாய், சூரியன் பகை யடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகன் அக்கினியிற் பற்றிய உரோமம் போல் துயரப்படுவனும்.

[2] 5-ம் இடம் அல்லது 3-ம் இடத்திற் சனி, சூரியன், செவ்வாய் நிற்கவும், இலக்கினதிபதி 8-ல் அமரவும் பெற்ற ஜாதகர் பூமி யிழந்து தந்தை தேடிய பொருள்களெல்லாம் வேசியருக்கு கொடுத்துவிட்டு கலங்கு வானும்.




## 653

(இ - ள்.) 8-ம் இடத்தில் 2-11-க்குடையவர்கள் நிற்கவும், சூரியனும், சனியும் கூடி 11-ல் அமரவும், 6-8-12-ல் சுக்கிரன் நிற்கவும் பெற்ற ஜாதகர் முன்னோர்கள் கீர்த்தியும், தமையனால் கொடுக்கும் பொருளையும், வேசையர்களுக்கு அளித்து விட்டு துயரப் படுவானும்,




## 654

(இ - ள்.) 3-1-11-9-2-க்குடையவர்களாகிய ஐவர்களையும், 6-8-12-க்குடையவரேனும், பாபர்களேனும் 2-பக்கமும் கட்டி நிற்கவும் பெற்ற ஜாதகர் பொருளை யெல்லாம் வேசியர்களுக்கு கொடுத்துவிட்டு மயங்குவனும்.




## 655

(இ - ள்.) 2-9-க்குடையவரோடு குருவுங் கூடி 6-ம் இடத்தில் நிற்கவும், அவர்களை 6-8-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் பொருளிழந்தவனானாலும், அன்னியர் பொருளை இச்சியாது கெடுதியும் நினையானும்.



[2] 1-10-6-க்குடையவர்களாகிய மூவரும் 12-ல் நிற்கவும், அல்லது பார்க்கவும் பெற்ற ஜாதகன் தன் பொருளிழந்து பந்துக்களால் சன்மானம் பெறுவனும்.

## 656




(இ - ள்.) 1-4-க் குடையவர்களும், செவ்வாயுமாகிய மூவருங் கூடி 10-ல் நிற்கவும், அவர்களை 4-லிருந்து சூரியன் பார்க்கவும் பெற்ற ஜாதகரின் பொருள் பலவிதங்களில் விரையப்படுமாம்.

[2] சிங்கம், மகரம், கன்னி இந்த ராசிகளுக்குரிய சூரியன் சனி, புதனாகிய மூவரும் 11-ல் நிற்கவும், 11-க்குடையவர் பலஹீனமடையப் பெற்ற ஜாதகரின் பொருள் அழிந்து விடுமாம்.

## 657




(இ - ள்.) 5-6-க்குடையவர்களும், சந்திரனும் ஆகிய மூவரும் 2-ம் இடத்தில் நிற்கவும், 2-7-க்குடையவர்கள் 6-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் பொய் சொல்லி பிழைப்பனும்.




[2] 4-9-க்குடையவர்கள் 8-ல் நிற்கவும், அவர்களோடு 12-க்குடையவர் உச்சமடைந்து கூடி நிற்கவும் பெற்ற ஜாதகர் பந்துக்களும், நேசர்களும் கொடுக்கும் பொருளாலும், தன்னடையினாலும் சுக மடைவானும்.

## 658

| ல | | பு | சூ ரா |
|---|---|---|---|
| சந் | இராசிச | | குரு சு |
| | சக்கரம். | | செ சனி |
| கே | | | |

(இ - ள்.) சந்திரனுக்கு 6-ம் இடத்தில் லக்கினாதிபதி 8-க்குடையவரோடு கூடி நிற்கவும், அவர்களை பாபர்கள் 2-பக்கமும் கட்டி நிற்கவும் பெற்ற ஜாதகன் தன் மனையாளிடம் துன்பப்படுவனும்.

| செ சனி | | | |
|---|---|---|---|
| சு | இராசிச் | | ரா |
| சந் கே | சக்கரம். | | |
| | | | ல |

[2] சந்திரனுங் கேதுவுங் கூடி 5-ல் நிற்கவும், 7-ல் 8-க்குடையவரும் சனியுங் கூடி அமரவும், 9-க்குடையவர் 6-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் குணமுள்ள மனைவியை யிழந்து சுகக் குறைவு படுவராம்.

## 659

| சூ | | ல-ச ரா | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| குரு | சக்கரம். | | |
| | கே | | சந் |

(இ - ள்.) ராகுவும், சனியுங் கூடி லக்கினத்தில் நிற்கவும், சூரியன் சந்திரனைப் பார்க்கவும், ராகு கேந்திர மடையவும், 8-க்குடையவர் 9-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் தனக்குள்ள பாகத்தை முற்றிலும் சுகியானென்றும், ஈனமாது ருடையவனென்றும், அந்தியத்திற் கலங்குவனென்றுங் கூறியது.

## 660

| | கே | | சு |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| சந் | சக்கரம். | | செ |
| | குரு | ல-ச ரா | |

(இ - ள்.) 2-க்குடையவர் 11-ல் நிற்கவும், சந்திரன் 4-ம் இடத்தில் அமரவும், சுக்கிரன் 9-ல் நிற்கவும், குரு 2-ல் நிற்கவும், சனி ராகுவோடு கூடி உச்சம் பெற்று திரிகோண மடையவும் பெற்ற ஜாதகன் இடும்பாகிய வித்தையை யடைந்து, குருவை நிந்தை செய்யுந் தரமுள்ளவனும்.

## ஆயுட் பாவகம்

## 662 - 674

(வினா.) மங்கள பாவக முதல் யோக பாவகம் ஈருக பல பாவகங்களும், அவற்றின் சாரமும், அவசாரங்களும் தெரிந்தன. அரசனுக்கும், பறையனுக்கும் ஒரே காலத்தில் குழந்தைகள் பிறக்கின்றன. அரசகுமாரன் ராஜாங்கஞ் செய்கின்றான், பறையன் அவ்வரச குமாரனுக்கு ஊழியஞ் செய்கின்றான், இராஜன் நூறு பெண்களை கலியாணஞ் செய்கிறான், பறையனோ அதிக வருத்தத்துடன் ஒரு பெண்ணை விவாகஞ் செய்து கொள்கின்றான், அரசனுக்கோ புத்திர சந்தானம் அற்றுப் போகிறது, பறையனுக்கோ ஏராளமான புத்திர சந்தான முண்டாகிறது. ஒரு பெண் வயிற்றில் ஏக காலத்தில் இரண்டு பிள்ளைகள் பிறக்கின்றன, அதில் ஒன்று ஆணாகவும், மற்றொன்று பெண்ணாகவும் இருக்கிறது, இன்னும் அதில ஒரு பிள்ளை உடனே சாகிறது, மற்றொரு பிள்ளை பூரண ஆயுளுடனிருக்கிறது, ஒரு கருப்பத்தில இரண்டும் ஆணாகப் பிறக்கின்றன, அதில் ஒன்று அரிஷ்டமும், மற்றொன்று பூரண ஆயுளுடனிருக்கிறது, இதுவன்றி ஒரு கருப்பத்தில் இரண்டு ஆண்கள் ஏக காலத்தில் ஒன்றாய்ப் பிறந்தும் ஒன்று யோக முள்ளதாகவும், மற்றொன்று அவயோக முள்ளதாகவும் இருக்கிறது. ஒரு கருப்பத்தில் இரண்டு பெண்கள் ஏக காலத்திற் பிறக்கின்றன, அதிலொன்று சுமங்கலியாகவும், மற்றொன்று அமங்கலியாகவும் இருக்கிறது, இவ் வுலகத்தி லுதிக்கும் ஜீவர்களாகிய எழுவகைத் தோற்ற முதலிய பலவகைகள் ஒரே லக்கினத்தில் பிறக்கின்றன, இவற்றின் பேதாபேதங்களை பக்ஷம் வைத்து அருள் செய்வீராகவும்.

மேற்கண்ட பேதாபேதங்களை யறிய கிரக ஸ்புடங்கள் செய்து வழுவில்லாமல் கணக்கை நன்றாய் வகுத்து நிதானித்தறிந்தால் அப்பேதங்களின் விவரம் நன்றாய் விளங்கும்.

## ஜெனன கால நிச்சய மறிய

## 675 - 678

ஜாதகன் ஜனித்த மாதத்திலே சூரியன் வந்த நாழிகை முதல் அந்த மாதத்தில் சூரியன் தங்கியிருந்த வரையில் தேதியை சுத்தமாயெடுத்து வந்ததே அம் மாத சுத்த தேதியாம். பிறகு, அம் மாத

ராசியின் நாழிகையை மேலெடுத்த சுத்த தேதியினால் வகுத்து வந்த ஈவை ஜாதகன் உதயாதி வரையில் சென்ற தேதியினால் பெருக்கி வந்த தொகையை ஷை மாத ராசி நாழிகையிற் கழித்து பாக்கி நாழிகையுடன் அடுத்த ராசிகளின் நாழிகைகளைக் கூட்ட ஜாதகன் உதித்த நாழிகையின் தொகைக்குச் சரியாய் வருகிற ராசியே லக்கினமாம். இவற்றுள், சுத்த தேதி எடுக்கும் விதங் காண்க. ரிஷப மாதமாகிய வைகாசி மாதம் முதல் தேதியில் சூரியன் 24-நாழிகை 17-வினாடியில் ஷை ரிஷபத்தில் வந்தார். ஷை ஸ்ரீ 32உ 48-நாழிகை 29-வினாடிக்கு மிதுனத்திற்குப் போகின்றார். ஆகையால் 1உ நாழிகை (60-24-17) 35 43 32உ 48-29 இவ் விரண்டையுங் கூட்ட 84-நாழிகை 12-வினாடி. இதற்கு தேதி 1-24-12 முதல் தேதிக்கும் 32-ம் தேதிக்கும் இடையிலுள்ள தேதி 30-ஆக தேதி 31-24-12-இதுவே சுத்த தேதியாம். லக்கின மெடுக்கும் விபரம் முன் சொல்லப்பட்டிருக்கிறபடியால் அங்கு காண்கலாம்.

லக்கினமாகிய ராசியின் நாழிகையை 6-ல் வகுத்து வந்த ஈவானது பாத மெனப்படும்.

## லக்கின ராசியின் பாதச்செல் கலையறிய

ராசியின் பாத நாழிகையினால் ராசியின் பாத பாகைகை வகுத்து வந்த ஈவை ராசியின் சென்ற நாழிகையினால் பெருக்ய வந்த தொகையே லக்கின ராசியின் செல் கலையாம்.

## விபரம்

ராசி 1-க்கு பாதம் 9.

ஒவ்வொரு ராசிக்கும் நாழிகை இவ்வள வென்பது முன் சொல்லப்பட்டிருக்கிறது.

| | |
|---|---|
| நாழிகை 1-க்கு | வினாடி 60 |
| ராசி 1-க்கு | பாகை 30 |
| பாகை 1-க்கு | கலை 60 |
| கலை 1-க்கு | விகலை 60 |

## 916

(இ - ள்.) இவ்விதமாக பெண்ணுக்கும், புருஷனுக்கும் பங்கமாகிய பாபத்தைக் கண்டு பிறகு பெண்ணுக்கு எவ்வளவு பாபம் அமைந்ததோ அதைவிட புருஷனுக்கு இரண்டு பங்கு பாபம் வேண்டுமென்றுங் கூறப்பட்டது.

## 917

(இ - ள்.) இப்படி புருஷனுக்கு இரண்டு பாபங்கள் வருமேயாகில், திரண்ட புத்திரரும், யோகமுஞ் செழிக்குமாம். அல்லது ஒன்றுக்கு ஒன்றறைப் பாபமானாலும், பார்த்தாலும் முன்போல நற்பலனென்றுங் கூறுவார்கள்,

## 918

(இ - ள்.) பெண்ணின் பாபத்திற்குமேற் புருஷன் பாபம் கால் கூடியிருந்தால் விவாகம் செய்யலாம். பெண் பாவம் கால் கூடியிருந்தால் புருஷனைக் கொல்லுமென்றும் மதித்துக் கொள்க.

## 919

(இ - ள்.) பூமியின்கண் உடற் பொருத்தங்களும், உயிர்ப் பொருத்தங்களும் இருந்தால் விவாகஞ் செய்யலாமென்றும், புத்திரர் பெருகுமென்றுங் கூறியது. இதில் உயிர்ப் பொருத்த மில்லாவிடிற் பாழாய்ப் போகுமாம். ஆனதால் உடற் பொருத்தத்திற்கு உயிர்ப் பொருத்தம் மேலென்றுங் கூறியது.

## 920

(இ - ள்.) எனதாசிரியரே! இதுவரையில் நான் கேட்டபடி உரைசெய்து என் சந்தேகத்தை நிவர்த்தி செய்தீர்; இனி 12-பாவகமும் அருளிச்செய்து பூமியிலுள்ளோர் என்னை மதிக்கும்படி விதி முறைப்படி கூற வேண்டுமாம்.

### கிரக வலிமை

## 921

(இ - ள்.) அசைவில்லாது நிலைபெற்ற குரு ரூபமாய் திருவேரக மலையினிடத்து சிவனுக்கு வேதங்களை உபதேசித்தவராகிய சுப்ரமண்யருடைய அருளைப் பெற்று நிறைந்த கணித மென்னுங் கடலை

முற்று முணர்ந்து பெரிய சித்தி பெற்று வசையில்லாது பேரடைந்த வீரப்ப பிள்ளை யென்னு நாமத்தை யடைந்த எமது வள்ளலுடைய திருவடித் தாமரை மலரை துணையாய் வணங்கி பூசித்து நின்று நவ நாயகர்க்கு அமைந்து நின்ற திசை புத்தி விபரம் இஃது ஒருவாறு தேர்ந்த மட்டுங் கூறுவேனாகவும், ஜென்ம லக்கினம் புருஷ ராசியாகில் வலமாகவும், பெண் ராசியாகில் இடமாகவும், லக்கின முதல் 12-ராசி வரையில் இவ்வாறு கண்டு கொள்ளவும் வலமாகில் முன் பார்வை யென்றும், இடமாகில் பின் பார்வை யென்றும் ராசியின் தானமும் அதுவே யென்றுங் கூறப்பட்டது.

## 922

(இ - ள்.) கூறிய விதிப்படி அவரவர் ராசி பலன் கண்டு கிரகத்தின் வலி குறைவு தெரிந்து ஜென்மமானது பாபமென்றும் புண்ணியமென்றுந் தெரிந்து தந்தையின் யோகம் அவயோகமும் கண்டு முன் கூறிய விதிப்படி அமைந்த இலக்கத்தில் பொருந்திய 10-4-க்குடையவர் வலியும் கோசர விதிகளும் ஆகிய பலன்களை யெல்லாம் ஆசிரியரால் சொல்லத் தெரிந்து பிறகு திசைபுத்தி அந்தரம் அந்தரா அந்தர முதலியவற்றின் உண்மையைத் தெரிந்த பிறகு பலன் கூறல் வேண்டுமாம். அப்படியில்லாது துடிதுடித்துக் கொண்டு பதட்ட ஆராய்ச்சி செய்து சொல்பவர்களுக்கும் நூல் கூறிய ஜோதிடர்களுக்கும் பழுது வருமென்றும் பழமையாகிய வேதங்கள் கூறுமென்பதாம்.

## 923

(இ - ள்.) 1-2-4-5-10-11-7 இவ் விராசிக்குடையவர்கள் சுக பலனைக் கொடுப்பா ரென்றும், இவர்களில் சிரேஸ்ட்ட ஸ்தானாதிபதி 4-10-க்குடையவ ரென்றுங் கூறியது. 6-8-3-7-12-க்குடையவர்கள் சொர்ப்ப பலன் கொடுத்தபோதிலும் பாபபலனே கொடுப்ப ரென்றுங் கூறியது. இன்னும் நல்லோர்கள் திசையில் செம்பாதி நற்பலன் கொடுப்பா ரென்றும் தீயோராகில் தமது திசையில் நற்பலன் தருவது வழக்கமா யிருக்கினும், என்னாளும் நிலைபெற்ற தல்ல வென்றும், 3-க்குடையவர் உச்ச மடைந்தால் நற்பலன் கூறப்

படாதென்றும், 12-ம் இடத்திற் சுபர்கள் கூடி நிற்க 12-க்குடையவர் திசையில் அதிலிருந்த சுபர்கள் புத்தியில் சுகமாகிய வாழ்வைத் தருபவரென்றுங் கூற வேண்டுமாம்.

## 924

(இ - ள்.) ஒரு ராசியில் 2-3-கிரகங்கள் ஏறி யிருந்தால் அவர்களில் எவர் வலியரோ அவர் மற்றவர்கள் வலியைத் தானடைந்து தன் திசையில் மேன்மையான பலனைக் கொடுப்பா ரென்றுங் கூறப்பட்டது. பிறகு இவர் பலத்தை அவர்களுக்கு கொடுப்பரென்றும், 6-க்குடையவருக்கு 8-க்குடையவர் சுபராயிருக்கில் முன் கூறிய 6-க்குடையவர் திசையில் நற்பலன் கொடுப்பாரென்றும், மேற்கூறிய 8-க்குடையவர் பாபரா யிருக்கில், 6-க்குடையவர் பாபபலனைக் கொடுப்பாரென்றும், அல்லது அவர்களிருந்த நக்ஷத்திரத்திற்குரிய திசாநாதன் அவர் பலனை யடைந்து தன் திசை காலத்தில் தன் பலனைக் கொடுப்ப ரென்றும் மேலோர்கள் கூறுவார்கள். இனிசரம், ஸ்திரம், உபயம் இவ்விராசிகளிற் பிறந்தவர்களுக்கு பலன்கள் அறியுமாறு விதி முறைப்படி கூறுவோமாகவும்.

## 925

(இ - ள்.) சரத்திற் பிறந்தவர்களுக்கு உபயராசியும், சர ராசிக்குடையவரும் நற்பலன் கொடுப்ப ரென்றும், ஸ்திர ராசியிற் பிறந்தவர்களுக்கு உபய சர ராசி யோர் தீம்பலன் கொடுப்பா ரென்றும், இத் தன்மைபோல் ஸ்திர ராசியிற் பிறந்தவர்களுக்கு உபய ஸ்திர ராசிக்குடையோர்பலன் கொடுப்பாரென்றும், சரராசிக்குடையவர் தீம்பலன் கொடுப்பாரென்றுங் கூறியது. உபய ராசியில் ஜனித்தவர்களுக்கு உபய ஸ்திர ராசிக்குடையவர்கள் பலன் கொடுப்பா ரென்றும், சர ராசிக்குடையவர் தீம்பலன் கொடுப்பாரென்றும், 7-க்கு 10-லிருந்தவர்களும், மேற்கூறிய மூவர்களும் ஆகிய நால்வர்களையும் 8-க்குடையவர் நோக்கில், அவர் பலனை ஒன்றாக முறைப்படி கொடுப்பா ரென்றும், 9-க்குடையவரை 12-க்குடையவர் நோக்கில், தன் பலனை அவருக் களித்து 8-க்குடையவர் பலனை தானடைந்து பலன் கொடுப்பார்களாம்.

## 926

(இ - ள்.) 2-3-க்குடையவர்களை 6-க்குடையவர் சேர்ந்தாலும், பார்த்தாலும், நற்பலன் துர்பலமாகவும், துர்பலன் நற்பலமாகவும், செய்பவரென்றுங் கூறியது. இன்னமும் ஓர் சூட்சுமமுளது. ஒரு கிரகத்திற்கு இரண்டு ஆதிபத்தியமும், ராசியாதிபத்தியமும் பெற்று 8-க்குடையவர் நோக்கப்பட்டாலும், சராராசியிலிருந்தாலும், மூவர்கள் கூடி ஒருவாறு தீங்கு பெற்றும் ஒருவாறு நன்கு பெற்றிருந்தாலும், இவை யெல்லாங் கத்தி முனையில் நிற்பவர்கள் மனம்போல் கூர்மையாக நோக்கி அவர்கள் திசை புத்தி வலுவுமிடருந் தெரிந்துவருந் தீங்கெல்லாம் அற்ப மென்றும், நற்பலன் ஒன்றிற்கிரண்டு செய்வாரென்றுங் கூறியது.

## 927

(இ - ள்.) திசாநாதன் பாவியாயிருந்தாலும் முன்கூறிய செயலெல்லாம் பொருந்தி யிருந்தாலும், தீம்பலனெல்லாஞ் சொற்ப நற்பலனாகவும், நற்பலனெல்லாம் அதிக தீம்பலனாகச் செய்வரென்றுங் கூறியது. இன்னும் ஒருவன் திசையில் நிற்கின்றவர் வலியடைந்தாலும் கேந்திராதிபதியும் அவரோடு கூடினாலும், அவரைப் பார்த்தவர்களும் திரிகோண ராசியில் நின்றவர்களும் அத் திசையின் பதியின் பலனை யடைந்து தங்களில் வலுத்த பேர்கள் எவரோ அவர்கள் முற்பலனாகக் கொடுப்பரென்றும், 3-2-11 இதற்குடையவர்கள் திசை பொருந்தி பலமுள்ளவர்கள் பார்த்தவர்கள் அத் திசையோர் பலத்தை வாங்கி மேன்மையான பலனைக் கொடுப்பரென்றுங் கூறியது. பிறகு திசாநாதனுடைய பலனென்று கண்டு தெரிந்துள்ளோர் கூறுவார்களாம்.

## 928

(இ - ள்.) 8-12-க்குடையவர்கள் ஒருவர்க்கொருவர் மாறி நின்றால் அவர்கள் நடத்தும் பலனைக் கூறுகின்றனம். மேற்கூறியவரோடு இருந்தோர்கள் பார்த்தோர்கள் இவர்களுடைய பலனும், சேர்ந்தோர் பலனும் கொடுப்பரென்றும் கூறப்பட்டது. இன்னமும், இதில் ஓர் வினயங் கூறுவோமாகவும், மாரகாதிபத்தியம் எவருக்கு உரித்தமதெனில் மாரகாதிபரோடு சேர்ந்தவர்கள் அவரை நோக்கினவர்கள் இவர்களை நன்றாக வரிந்து நிலைபெற்ற மேலான

அதிகாரி திசை இன்னதெனக் கண்டு அக்காலையில் இவ்வித வலி யுடையவ ரெவரோ அவர் புத்தியில் மாரகம் வருமென் றறிந்துக் கொள்கவும்.

## முதற் பாவகம்

### 929

(இ - ள்.) இலக்கினத்தைக் கொண்டு கீர்த்தி, குணம் யோகம் அழகு, ஆயுள் சுதேச வாசம், விர்த்தி கல்வி, அறிவு, பரிசுத்தம் ஆகிய பலன்களைக் கூறும் வண்ணம் ஞானரூப தயாநிதியைத் துதி செய்வோமாகவும்.

## யோக்கிய தாமிசை

### 930




(இ - ள்.) 9-ம் இடத்தில் 2-3-க்குடையவர்கள் கூடி நிற்கவும், 5-க்குடையவர் 2-ல் அமரவும், சுபக் கிரகங்கள் இலக்கினத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகர் யோக முடையவனும்.




[2] 9-க்குடையவரும், இலக்கினாதிபதியுங் கூடி 4-ம் இடத்தில் நிற்கவும், 2-ம் இடத்தில் குருவோடு சுபர்கள் கூடி யமரவும் பெற்ற ஜாதகர் கல்வி புகழ் தனம் செல்வ முடையவராம்.

## வாய்மை

### 931




(இ - ள்.) 5-க்குடையவர் உச்சமடையவும், அவரை 2-க்குடையவர் பார்க்கவும், இலக்கினத்தில் சுபக்கிரகங்கள் கூடி நிற்கவும் பெற்ற ஜாதகர் உவமை யில்லாத குடையாள னுவனும்.




[2] 3-க்குடையவர் பகைவர் வீட்டில் மாறி நிற்கவும், அவரை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் சத்திய முடையவனும் மேற் கூறிய கிரகங்கள் தேவ வர்க்கத்தில் பலம் பெற்றால் தசரதன் போலும் அதிக குடை யாள னுவனும்.

## சற் குணம்

### 932




(இ - ள்.) 5-10-க்குடையவர்கள் கூடி சனிக்கு 3-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகரை வஞ்சமில்லாத கொடையாளி என்றும் தனவானென்றுங் கூறப்படும்.

[2] சந்திரனுக்கு 2-க்குடையவரும், குருவுங் கூடி சந்திர னுக்கு கேந்திரமடையவும் பெற்ற ஜாதகர் குணமும் சுகமு முடைய வராம். அன்றியும் இவனைக் கண்டவர்கள் மேகத்தைக் கண்ட மயிலை போல சந்தோஷப் படுவர்களாம்.

## உதாரண குணம்

### 933




(இ - ள்.) 5-க்குடையவர் 10-ல் நிற்க வும், சனிக்கு 5-ம் இடத்தில் 11-க்குடைய வர் உச்சமடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகர் கொடையாளியாயும், கல்வி கேள்வியில் வல் லவ னுவனும்.

[2] 5-ம் இடம் சனி வீடாகவும், அதிற் சந்திரன் அமரவும், சூரியன் உச்சமடையவும் பெற்ற ஜாதகர் கொஞ்சமேனும் கபட மில்லாதவராயும், கபடமுள்ளவர்களைத் தெரிந்து கொள்ளுஞ் சக்தி யுள்ளவராயும், நன்னடக்கை யுடையவராயும், கொடையாளியு மாவராம்.




934

(இ - ள்.) புதனும் 9-5-3-க்குடைய வர்களும் ஆகிய நால்வருங் கூடி கேந்திர மடைந்துநிற்கவும் பெற்ற ஜாதகரை விஷ்ணு அம்சமென்று உலகங் கூறுமாம்.




[2] சந்திரனுக்கு 3-க்குடையவர் உச்ச மடையவும், 10-9-க்குடையவர்கள் கூடி 3-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் கொடையிற் பெருமையுந் தனமு முடையவராம்.

## தருமமு மழகும்




935

(இ - ள்.) இலக்கினாதிபதியும் 4-க்குடை யவருங் கூடி கேந்திர மடையவும், சந்திரன் நட்பு பெற்றுமேற் கூறியவர்களை பார்க்கவும் பெற்ற ஜாதகர் இராஜசுக முடையவராம்.




[2] இலக்கினாதிபதியும் 3-க்குடையவ ருங் கூடி கேந்திர மடையவும், அவர்களை 9-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகன் வாகனுய் தர்மகுண முள்ளவராம்.

## கல்வியும் செல்வமும்

### 936

(இ - ள்.) இலக்கினாதிபதியும் 10-க் குடையவருங் கூடி திரிகோண மடையவும், இவர்களை சனி பார்க்கவும் பெற்ற ஜாதகர் கல்விப் பொருள், செல்வப் பொருள் உடையவராம்.




[2] இலக்கினாதிபதியும் 3-க்குடையவருங் குருவும் ஆகிய மூவர்களும் உச்சமடையவும் பெற்ற ஜாதகர் சுகவானும்.

[3] இலக்கினாதிபதி உச்சமடையவும் அவ்விராசியாதிபதி திரிகோணம் பெற்று நிற்கவும், 5-க்குடையவர் மேற் கூறியவரைப் பார்க்கவும் பெற்ற ஜாதகர் அதிக தனவானும்.

## பாக்கியமும் யோக்கியமும்

### 937




(இ - ள்.) இலக்கினாதிபதி திரிகோண கேந்திர மடையவும் அவரை சுபக் கிரகங்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகன் பாக்கியம், பூமி நிதான முடையவராம்.

[2] சந்திரனும் 2-9-1-க் குடையவர்களாகிய நால்வரில் 2-கிரகங்கள் ஆக்ஷி உச்சமடைந்து 3-க்குடையவரோடு கூடி நிற்கப் பெற்ற ஜாதகர் நல்ல தர்மவானுயும், தனவானுயும் நெறியுள்ளவனுமாவானும்.

## கல்வியுஞ் செல்வமும்

### 938




(இ - ள்.) இலக்கினாதிபதியும் 9-2-க் குடையவரும் ஆகிய மூவரும் கூடி நிற்கவும் பெற்ற ஜாதகர் பூமி, தனம், உடையவராம், அதில் உச்சமடைந்த ராசியாதிபதியே அதிக பலன் கொடுப்பாரெனக் கொள்கவும்.

[2] இலக்கினாதிபதி கேந்திர மடையவும், 4-க்குடையவர் திரிகோணமேறி நிற்கவும் பெற்ற ஜாதகர் பாக்கியவானவனும். இதில் திரிகோண மடைந்தவரெவரோ அவரே பலன் கொடுப்பாரென்றும் கேந்திர மடைந்தவர்கள் பலன் வந்து வந்து மாறு மென்றுங் கொள்க.

## கலைஞான தீரம்

### 939




(இ - ள்.) 2-3-க்குடையவர்கள் திரிகோண மடையவும், அவர்களைச் சந்திரன் பார்க்கவும் பெற்ற ஜாதகன் சோதிடம், சிற்பம், நன்னூல், கணிதம் இவைகளுணர்ந்த கலைவானவனும்.




[2] 2-க்குடையவரும், சந்திரனுங் கூடி சரராசியில் நிற்கவும், அவ்விராசியாதிபதியும், இலக்கினாதிபதியுங் கூடி கேந்திர மடையவும், இவர்களை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் இலக்கணமும், இலக்கியமும் உணர்ந்தவராம்.

## கவிதா தீரம்

### 940

(இ - ள்.) லக்கினாதிபதி கேந்திர மடையவும், 2-க்குடையவர் சந்திரகேந்திரத்தில் நிற்கவும், 9-க்குடையவர் ஆக்ஷி யடையவும் பெற்ற ஜாதகர் தமிழ் நூலுக்கு சிறந்த ஆசிரியராம்.




[2] லக்கினாதிபதி ஆக்ஷி யடையவும், 2-க்குடையவரும் ஆக்ஷியில் நிற்கவும், குரு கேந்திர மடையவும் பெற்ற ஜாதகர் புலவருக்கு சேகரராம்.




### 941

(இ - ள்.) லக்கினாதிபதி 11-ல் நிற்கவும், 2-க்குடையவர் சந்திரனுக்கு 2-ல் அமரவும், 9-க்குடையவரும் புதனுங் கூடி 3-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் தமிழ் நூலுக்கு நேயனும்.




[2] லக்கினாதிபதி ஆக்ஷி யடையவும், 2-ல் குரு நிற்கவும், குருவுக்கு கேந்திரத்தில் 2-க்குடையவர் அமரவும் பெற்ற ஜாதகர் பல கலைக ளுணர்ந்த கல்வியும் உண்மையுமுடையவராம்.



## பூபாக்கியமுங் கல்வியும்

### 942




(இ - ள்.) லக்கினாதிபதி 9-ல் நிற்கவும், 2-க்குடையவர் புதனுக்கு கேந்திரமடையவும் பெற்ற ஜாதகர் அரச சமானனாயும், இதிகாச முதலிய நூற்களை உணருங் கல்வி நிலைமை யுடையவராம்.




[2] 12-3-க்குடையவர்களாகிய இருவருங் கூடி திரிகோண மடையவும், 2-க்குடையவர் புதனுக்கு 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் இவ் வுலகத்தில் கணித நூல் ஜோதிட நூல் வல்லவனாய் அதில் நிலையுள்ளவனாவனாம்.

## தனபாக்கியமுங் கல்வியும்

### 943




(இ - ள்.) லக்கினாதிபதி 5-க்குடையவரோடு கூடி 2-ல் நிற்கவும், 2-க்குடையவர் லக்கினத்தில் அமரவும், 4-க்குடையவர் குருவுக்கு திரிகோண மடையவும் பெற்ற ஜாதகர் நிதி யுடையவராம்.




[2] லக்கினாதிபதி கேந்திர மடையவும், லக்கினத்திற் குருவும், 2-க்குடையவரும் நிற்கவும் பெற்ற ஜாதகன் தனவானாயும் கல்வியிற் றேர்ந்தவனு மாவனாம்.

## வாகட வித்தையும் அயிஸ்வரியமும்

### 944




(இ - ள்.) லக்கினாதிபதி 11-க்குடையவரோடு கூடி 2-ல் நிற்கவும், 2-க்குடையவர் 3-ல் அமரவும் பெற்ற ஜாதகர் கிருபை பொருந்திய வாகட நூலில் வல்லவனாவனும்.




[2] லக்கினாதிபதி 12-ல் நிற்கவும், 12-க்குடையவர் லக்கினத்தில் மாறி நிற்கவும், திரிகோணத்தில் ராகு அமரவும் பெற்ற ஜாதகர் மிகுந்த ஐஸ்வரிய முடையவனாவனும்.

### 945




(இ - ள்.) லக்கினாதிபதி சந்திரனுக்கு திரிகோண மடையவும், 2-க்குடையவர் கேந்திரத்தில் நிற்கவும், சந்திரன் கேந்திரமடையவும் பெற்ற ஜாதகர் பெருத்த பாக்கியமும் கல்வியு முடையவராம்.




[2] லக்கினாதிபதி கேந்திர மடையவும், 2-9-க்குடையவர்கள் கூடி குருவுக்கு திரிகோண மடையவும் பெற்ற ஜாதகர் பூமி, கல்வி, தவம் நிறைந்தவராம்.

## சகல பாக்கியம்

### 946




(இ - ள்.) இலக்கினாதிபதியும், 2-க்குடையவரும் ஆகூதி யடையவும், 9-க்குடையவர் 4-ல் நிற்கவும், 10-க்குடையவர் இலக்கினத்தி லமரவும் பெற்ற ஜாதகர் கல்வியுஞ் செல்வமும் நிலைபெற்று வாழ்பவராம்.

[2] 9-11-க்குடையவர்கள் கூடி 3-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் சத்தியம், தர்மம், பூமி, கல்வி, நற்குண முடையவ ராவராம்.

## தனமுங் கல்வியும்

### 947




(இ - ள்.) இலக்கினத்திற் சூரிய னிற்கவும், 2-ல் புதன் அமரவும், 9-க்குடையவர் 11-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் பொருளுடையவராம்.




[2] 1-3-4-க் குடையவர்களாகிய மூவரும் கூடி திரிகோண மடையவும், 2-க்குடையவர் குருவுக்கு 11-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் கல்வி செலவம் ஆகிய 2-பொருளை யுடையவராம்.

## தெய்வ பத்தி பாக்கியம்

### 948




(இ - ள்.) 4-க்குடையவர் 4-ல் நிற்கவும், 2-க்குடையவர் மேற்கூறியவருக்கு 2-ல் நிற்கவும், 9-க்குடையவர் 12-ல் அமரவும் பெற்ற ஜாதகர் மோக்ஷ பாக்கியம் நிலைக்கும் பொருட்டு வேதாகமங்களில் மனத்தை நிறுத்துவனும்.

[2] இலக்கினதிபதி 10-ல் நிற்கவும்' 2-க்குடையவர் 9-ல் அமரவும், 4-க்குடையவர் 4-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் பாக்கிய முடையவராகி சிவயநமவென்னுங் கொள்கை மாறாதவ ரெனவுங் கூறியது.

| | ல | | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | சந் |
| செ | | | |
| சு | | | |

## கலைஞான வித்துவத்துவம்

## 949

(இ - ள்.) இலக்கினதிபதி கேந்திர மடையவும், அக்கேந்திராதிபதி திரிகோணத்தில் நிற்கவும் சந்திரன் ஆக்ஷி யடையவும், 12-க்குடையவர் சந்திரனுக்கும், குருவுக்கும் கேந்திரத்தில் நின்று உச்சமடையவும், தனுசில் 5-க்குடையவர் கேந்திர மடையவும் பெற்ற ஜாதகர் ராஜரீகனுவனும். அதுதவரில் வேதாகமவாடக ஜோதிட சித்தாந்த கணித இலக்கின விலக்கிய கவிஞனுவனும்.

| பு | சு | | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | சந் |
| குரு | | | |
| சனி | | | ல |

## பூபாக்கியம்

## 950

(இ - ள்.) இலக்கினதிபதியும், 2-க்குடையவருங் கூடி இலக்கினத்தில் நிற்கவும், 4-க்குடையவர் இராகுவோடு கூடி 10-ல் அமரவும் பெற்ற ஜாதகர் பாக்கியாதிபதியாய் லீலா விநோதனு மாவனும்.

| | | | குரு ரா |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| | கே | | ல-சு பு |

[2] இலக்கினதிபதி கேந்திர மடையவும், அக் கேந்திராதிபதி இலக்கினத்திற்கு 7-ல் நிற்கவும், 9-க்குடையவர் 3-ல் அமரவும் பெற்ற ஜாதகர் பூமி, பொருள், புகழ் நிலைபெற்று வாழ்பவனும்.

## கல்வி

### 951

(இ - ள்.) இலக்கினாதிபதியும் 2-க்குடையவருங் கூடி கேந்திர மடையவும், 4-க்குடையவர் 9-ல் நிற்கவும், 10-க் குடையவர் திரிகோண மடையவும், இவர்களை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் தர்மம், கல்வி, தெய்வ பக்தி யுடையவராயும், தந்தையினும் ஏழுமணங்கு யோக முடையவனும்.

| | | | |
|---|---|---|---|
| | செ | | |
| சூ 4 | இராசிச் | | |
| | சக்கரம். | | ல குரு |
| சு | | | |

### 952

(இ - ள்.) இலக்கினாதிபதி ஆக்ஷி யடையவும், 9-2-க்குடையவர்கள் குருவுக்கு திரிகோணத்தில் நிற்கவும், 10-க்குடையவர் கேந்திர மடையவும் பெற்ற ஜாதகர் தெய்வச் செலவும், சுகவாழ்வு முடையவராம்.

| | | | |
|---|---|---|---|
| குரு | | | 4 |
| | இராசிச் | | சனி சூ |
| | சக்கரம் | | |
| ல | | | |

[2] இலக்கினாதிபதி 11-ல் நிற்கவும், 4-க்குடையவர் 9-ல் அமரவும், 5-க்குடையவரை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகரை பிரபுவென்றுங் கூறியது.

| | | | |
|---|---|---|---|
| சு | | சந் | செ |
| | இராசிச் | | ல |
| | சக்கரம். | | |
| குரு | | | |

## அன்னியதேசவசா சுகம்

### 953

(இ - ள்.) இலக்கினாதிபதி 9-ல் நிற்கவும், 2-க்குடையவர் 11-ல் அமரவும், 2-ல் குரு நிற்கவும் பெற்ற ஜாதகர் அன்னிய தேசம் போய் வாழ்பவனும்.

| | | | |
|---|---|---|---|
| | | 4 | |
| | இராசிச் | | சு |
| | சக்கரம். | | |
| | | குரு | ல |




[2] 5-க்குடையவர் இலக்கினத்திற்கு 12-லும், குருவுக்கு திரிகோணத்திலும் நிற்கவும், 4-க்குடையவர் 9-ல் அமரவும், சந்திரன் குருவுக்கு கேந்திர மடையவும், பெற்ற ஜாதகருக்கு மேற் கூறிய பலனேயாம்.

## கல்வி

### 954




(இ - ள்.) சர ராசியில் 3-க்குடையவர் நிற்கவும், அச் சர ராசிக்குடையவரும் இலக்கினதிபதியும்கூடி கேந்திர மடையவும் பெற்ற ஜாதகருக்கு மலையில் தீபம் வைத்ததுபோல் கீர்த்தியுங் கல்வியு முண்டாம்.

## இரக்ஷண்யம்

### 955




(இ - ள்.) 9-க்கு கேந்திரத்தில் 3-க்குடையவர் நிற்கவும், அவ் விராசிக் குடையவரோடு சந்திரன் கூடி கேந்திர மடையவும், அவரைச் சுக்கிரன் பார்க்கவும் பெற்ற ஜாதகர் இரக்ஷிக்கும் தன்மை யுடையவராம்.

### 956




(இ - ள்.) 11-க்குடையவரும் செவ்வாயுங் கூடி ஒரு ராசியில் நிற்கவும், அவ் விராசியாதிபதி உச்ச மடையவும், அவரை சுக்கிரன் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு தனதான்யம் பெருகுமாம்.

## வீரத்துவம்

### 957

(இ - ள்.) 3-க்குடையவரும், இலக்கினுதிபதியும் மாறி நிற்கவும், இவர்களை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் வீராதிவீர முடையவனும்.

## கல்வி

### 958




(இ - ள்.) 4-2-க்குடையவர்கள் கூடி இலக்கினத்தில் நிற்கவும், அவரை புதன் பார்க்கவும் பெற்ற ஜாதகர் கல்வியிற் சிறந்தவனும்.

## தனுதி வாகனம்

### 959




(இ - ள்.) 3-2-11-க் குடையவர்கள் ஆகிய மூவரும் 9-ல் நிற்கவும், அவர்களை 5-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் சுகம், தனம், வாகனமும், தந்தைக்கு மேல் யோகமு முடையவராம்.

## வாய்மை

### 960




(இ - ள்.) 7-2-க்குடையவர்கள் கூடி 4-ம் இடத்தில் நிற்கவும், 4-க்குடையவர் உச்சமடையவும், அவரை சுபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகர் நீதியும் உறுதியு முள்ள வராம்.

## சற்குணம்

### 961




(இ - ள்.) இலக்கினாதிபதி ஆக்ஷியடையவும், 5-ம் இடத்திற் சந்திரனுக்கு 4-க்குடையவர் நிற்கவும், அவரை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் சற்குண முடையவராம்.

## புண்ணியம்

### 962




(இ - ள்.) சந்திரனுக்கு 3-க்குடையவர் உச்சமடையவும், அவ் வுச்ச னின்றராசியாதிபதி 5-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகர் புண்ணியகுண முடையவராம்.

## ஆச்சாரம்

### 963




(இ - ள்.) செவ்வாயும், 3-க்குடையவருங் கூடி 5-ல் நிற்கவும், அவர்களை பாபர்கள் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகர் ஆசார முடையவனாம்.

## வைணவ பக்தி

### 964




(இ - ள்.) 3-க்குடையவரை 2-க்குடையவர் பார்க்கவும் இலக்கினாதிபதி 2-ல் நிற்கவும், அவரை புதன் பார்க்கவும் பெற்ற ஜாதகர் நாராயணன் திருவடிக் கடிமை யாவனாம்.

## கீர்த்தி

### 965




(இ - ள்.) குரு இலக்கினத்தில் நிற்கவும், அவரை 5-2-9-க்குடையவர்கள் 7-ல் இருந்து பார்க்கவும் பெற்ற ஜாதகர் கீர்த்தியுடையவராம்.

## வீரத்துவம்

### 966




(இ - ள்.) 4-ம் இடத்திற் செவ்வாய் ஆக்ஷி யடையவும், அவரை குரு உச்சமடைந்து பார்க்கவும் பெற்ற ஜாதகர் பொல்லாதவர்களுக்கு சிம்மம் போன்ற அச்ச மில்லாத ஆண்மை யுடையவராம்.

## பல பாக்கியம்

### 967




(இ - ள்.) குருவும், இலக்கினதிபதியுங் கூடி 4-ல் நிற்கவும், அவர்களை 4-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் கல்விப் பொருள், ஆளடிமை, செல்வ முடையவராம்.

## கீர்த்தி

### 968




(இ - ள்.) இலக்கினதிபதி 9-ல் நிற்கவும், 9-க்குடையவர் 4-ல் நிற்கவும், அல்லது சந்திரனுக்கு 3-ல் 9-க்குடையவர் நிற்கவும் பெற்ற ஜாதகர் கீர்த்தியை நிலைக்கச் செய்பவராம்.

## 969




(இ - ள்.) இலக்கினாதிபதி கேந்திர மடையவும், 5-ம் இடத்திற் குரு நிற்கவும், 12-க்குடையவர் குருவுக்கு கேந்திரமடைய வும் பெற்றஜாதகருக்கு மேற்கூறிய பலனும்.

## சுதேசவாசி

## 970




(இ - ள்.) !)-4-க்குடையவர்கள் கூடி இலக்கினத்தில் நிற்கவும், இலக்கினாதிபதி யும்; 2-க்குடையவருங் கூடி உபய ராசியில் நிற்கவும், அவர்களோடு உபய ராசியாதிபதி களுங் கூடி நிற்கவும்பெற்ற ஜாதகர் சுதேச வாசியாம்.

[2] இலக்கினாதிபதி ஸ்திர ராசியில் கேந்திர மடையவும் அவரை குரு பார்க்கவும், அல்லது இலக்கின ஸ்திர ராசியா யிருக்க வும், அதில் அதற்குரியவர்கள் நிற்கவும், அவர்களை சுபக் கிரகம் பாக்கவும் பெற்ற ஜாதகர் மேற்கூறிய பல னுடையவராம்.

## 971

(இ - ள்.) இலக்கினம் சர ராசியா யிருக்கவும், அதற்குடைய வர் சர ராசியில் நிற்கவும், அவரை சர ராசிக்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் தனவானாய் சுதேச வாசியாம்.

[2] இலக்கினம் ஸ்திர ராசியா யிருக்கவும், அதற்குடையவர் கள் உபய ராதியாதியோடு கூடி உபய ராசியில் நிற்கவும் பெற்ற ஜாதகர் மேற்கூறிய பலனுடையவரேயாம்.

## சுப யோக்கியம்

## 972

(இ - ள்.) இறக்கினம் சர ராசியா யிருக்கவும், அந்த இலக்கி னாதிபதி 2-க்குடையவரோடு கூடி சர ராசியில் கேந்திர மடையவும் பெற்ற ஜாதகர் இந்திரனைப்போல் தன் மனையாளோடும் அன்னிய மனையாளோடும் வாழ்வானும்.

## அன்னியவாசன்

### 973




(இ - ள்.) ஸ்திர ராசி லக்கினமாயிருக்கவும், அதற்குரியவர் சர ராசியில் தனித்து நிற்கவும், லக்கினத்தில் ராகு நிற்கவும், 11-ல் செவ்வாய் அமரவும் பெற்ற ஜாதகர் அன்னிய தேசம் போய் சுக மடைவானும்.

### 974




(இ - ள்.) லக்கினம் உபய ராசியாகவும், அதற்குரியவர் உபய ராசியில் 12-க்குடையவரோடு கூடி லக்கினத்தில் நிற்கவும், செவ்வாய் 4-க்குடையவரோடு கூடி ஒரு ராசியில் நிற்கவும் பெற்ற ஜாதகர் தனக்குரிய பூமியை விற்றும் ஊரையும் விட்டு அன்னிய தேசம் போய் பாழ் நிலத்தை வாங்குவனும்.

## அயோக்கியதாமிசை

### 975




(இ - ள்.) லக்கினாதிபதி 6-8-12-ல் நிற்கவும், 3-க்குடையவர் 8-ல் அமரவும், 9-க்குடையவர் 6-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் கர்மத்தினால் நிந்தைகளையே பொருளாகக் கொள்பவனும்.

### 976




(இ - ள்.) லக்கினாதிபதியும், 2-க்குடையவருங் கூடி 6-8-12-ல் நிற்கவும், 3-க்குடையவர் 8-ல் அமரவும், 9-க்குடையவரும், 8-ல் பலஹீன மடைந்திருக்கவும் பெற்ற ஜாதகர் கீர்த்தியை எக் காலமு மடையானும்.

## 977




(இ - ள்.) லக்கினாதிபதியும், 9-குடையவருங் கூடி 3-ல் நிற்கவும், அவர்களை சுபர்கள் பார்க்கா திருக்கவும், 6-க்குடையவர் கேந்திர மடையவும், சனி சிறப்படைந்து நிற்கவும் பெற்ற ஜாதகர் ஒரு காசு பெறாது கையில் வோடுடையவ னவனாம்.

## 978




(இ - ள்.) சந்திரனுக்கு 4-க்குடையவரும், 12-க்குடையவருங்கூடி 8-ல் நிற்கவும், 8-க்குடையவர் 6-ல் அமரவும், 6-க்குடையவர் 12-ல் நிற்கவும் பெற்றஜாதகர் உலகோர் வாந்தி செய்யத்தக்க பாவனைபோ லிருந்து அந்தரங்கத்தில் கடவுளுக்கன்பனா யிருப்பனாம்.

## 979




(இ - ள்.) சந்திரன் நீச மடையவும், அவரை சனியும், ராகுவும் பார்க்கவும், சுபக்கிரகங்களும், புண்ணிய கிரகங்களும் இவர்களை பாரா திருக்கவும் பெற்ற ஜாதகர் ஒரு காசு பெறாதவனாயும், துற்குண முடையவனுமாவனாம்.

## 980




(இ - ள்.) லக்கினாதிபதி பகை பெற்று நிற்கவும், 3-12-க்குடையவர்கள் கூடி நின்ற ராசி நட்பும் நீசமுமாய் நிற்கவும் இவர்களை குரு பார்க்கா திருக்கவும் பெற்ற ஜாதகர் நீச குணத்தை யுடைய கேவலனாம்.

## 981




(இ - ள்.) 8-க்குடையவர் 4-க்குடையவரோடு கூடி இழிவடைந்து 3-ல் நிற்கவும், குரு 12-ல் நிற்கவும், மற்ற பாபர்களும் 3-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகர் அக்கினி குண முடையவனும்.

## 982




(இ - ள்.) பாபர்கள் 4-ம் இடத்தில் நீசமடையவும், அன்னீச ராசியாதிபதி பகை பெற்று நிற்கவும், அவரை 6-க்குடையவர் பார்த்தும் நல்லோர்கள் பாராதிருக்கவும் பெற்ற ஜாதகர் பூமி, பொருள் முழுது மிழந்து அலைவானும்.

## 983

(இ - ள்.) 4-க்குடையவர் 8-க்குடையவர் பார்வையை கொடுமையாய் அடைந்து 3-ம் இடத்தில் நீசமடையவும் பெற்ற ஜாதகர் நல்லொழுக்க மில்லாத துற்குண முடையவனும்.

## 984




(இ - ள்.) 9-க்குடையவர் 12-ல் நிற்கவும், 12-க்குடையவர் 4-ல் அமரவும், 3-க்குடையவர் பகை பெற்று நிற்கவும், பாபர்கள் இலக்கினத்தைப் பார்க்கவும் பெற்ற ஜாதகன் தாய் தந்தை செய்த பாபமே உருவாகக் கொண்டு வந்தவனும்.

### புறநடை

## 985

(இ - ள்.) மேற் கூறிவந்த பாபபலன்கள் நீங்கும் விதங் கூறுகின்றனம். அதாவது மேற் கூறிவந்த கிரகங்களை குரு பார்த்தாலும், அல்லது இலக்கினத்தைப் பார்த்தாலும், முற் கூறிய தோஷங்கள் நீங்கி புகழ் பெறுவனும்.

## பூரண வாயுள்

### 986




(இ - ள்.) சனிக்கு 4-ல் 8-க்குடைய வர் நிற்கவும், சனிக்கு 2-ல் சந்திரன் அமர வும், 8-க்குடையவர் நட்படைந்து இலக்கி னத்தைப் பார்க்கவும் பெற்ற ஜாதகர் மார கம் அடையாரென்றும் ஒருவாறு கூறப் படும்.




[2] 3-ம் இடத்தில் 8-க்குடையவர் நிற்கவும், 8-க்குடையவரை குருவும், சுக்கிர னும் முன்னும் பின்னுங் கட்டி நிற்கவும், சந் திரன் சுக்கிரனுக்கு 7-ல் அமரவும் பெற்ற ஜாதகர் 90-வயதுள்ளவராம்.

### 987

(இ - ள்.) சனிக்கு 4-ல் சூரியன், செவ்வாய் இல்லாதிருக்க வும், சந்திரன் 6-8-12-லில்லாமல் நிற்கவும், 12-2-க்குடையவர்கள் 6-துர்ப்பலமின்றி சுபக் கிரகங்களாய் நிற்கவும் பெற்ற ஜாதகர் பூரண வயதுடையவராம்.

[2] கேந்திரத்திற்குரிய கிரகங்களெல்லாந் திரிகோண மடைய வும், சனியோடு பாபர்கள் கூடாதிருக்கவும் பெற்ற ஜாதகருக்கு 100-வயது கூறியது.

### 988




(இ - ள்.) செவ்வாய் சனியை பார்க்கா திருக்கவும், சனியை குரு பார்க்கவும், சந் திரனோடு 3-க்குடையவரும், இலக்கினாதிபதி யுங் கூடி சுபர் மனையில் நிற்கவும், அதில் 3-க்குடையவர் நட்படைந்து நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு 100-வயதாம்.

[2] 8-க்குடையவர் சந்திர சுபாம்சத்தில் நிற்கவும், சந்திர னின்ற ராசியாதிபதியும், 8-க்குடையவர் நின்ற ராசியாதிபதியும் பல மடைந்து நிற்கப் பெற்ற ஜாதகருக்கு 100-வயது கூறப்படும்.

## 989

(இ - ள்.) சந்திரனுக்கும் சனிக்கும் 8-ம் இடத்திற் செவ்வாயும், புதனும் நிற்கவும், 8-க்குடையவர் 12-ல் அமரவும், 7-லும் 4-ம் இடத்திலும் சுபக்ரகங்கள் நிற்கவும், அவர்களை தீயர்கள் பார்க்கா திருக்கவும் பெற்ற ஜாதகருக்கு 100-வயது கூறப்படும்.

| சந் | | | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| சனி | சக்கரம். | | செ |
| சு | சூ | பு | ல |

[2] 8-க்குடையவருக்கு 2-பக்கமும் சுபர்கள் நிற்கவும், சனிக்கு 7-அல்லது 4-ல் சுக்கிரனும், குருவும் நிற்கவும், சூரியனுக்கு 12-ல் சந்திரன் அமரவும் பெற்ற ஜாதகருக்கு பூரண வயதென்றுங் கூறியது.

| சனி | ல | | |
|---|---|---|---|
| | இராசிச் | | ச-பு |
| | சக்கரம். | | செ சூ |
| | | | குரு சு |

## 990

(இ - ள்.) சனி, கேந்திர மடையவும், குரு திரிகோணத்தில் நிற்கவும், 8-க்குடையவர் சந்திரன், சுக்கிரன் ஆகிய மூவர்கள் கூடி குருவுக்கு கேந்திர மடையவும் பெற்ற ஜாதகர் 100-வயதுடையவராம்.

| | | | குரு |
|---|---|---|---|
| ல | இராசிச் | | |
| செ | சக்கரம். | | |
| | சனி | | ச-சு பு |

## 991

(இ - ள்.) 8-க்குடையவர் சனியாயிருந்து 3-ம் இடத்தில் நிற்கவும், அச்சனிக்கு இரண்டு பக்கமும் சுபக்ரகம் நிற்கவும், இலக்கினத்திற்கு இரண்டு பக்கமும் சுபக்ரகங்கள் நிற்கவும், குரு 10-ல் அமரவும் பெற்ற ஜாதகர் நோயில்லாது 100-வயதிருப்பாராம்.

| குரு | | ஈ | ல |
|---|---|---|---|
| | இராசிச் | | பு |
| | சக்கரம். | | சனி |
| | | | சந் |

## 992

(இ - ள்.) இலக்கினத்திற்கு குரு, சுக்கிரன், சந்திரன் ஆகிய மூவர்கள் நிற்கவும், 8-க்குடையவர் 11-க்குடையவரோடு கூடி ஆக்ஷி உச்சமடையவும், சனி 6-ம் இடத்தில் நிற்கவும், இலக்கினத்திற்கு 3-ல் 9-க்குடையவர் அமரவும் பெற்ற ஜாதகருக்கு 100-வயது பொருந்தி முத்தி பெறுவாராம்.




## 993

(இ - ள்.) 8-ம் இடத்தில் 11-9-க்குடையவர்கள் நிற்கவும், சனி, குருவுக்கு திரிகோண மடையவும், 8-6-க்குடையவர்கள் சுக்கிரனுக்கு 11-ல் அமரவும், குரு 4-க்கு கேந்திர மடையவும் பெற்ற ஜாதகர் செல்வமும், புத்திரரும் பொருந்தி 87-வயதிருப்பவராம்.




## 994

(இ - ள்.) 8-க்குடையவர் சனியாகி, 4-11-2-க்குடையவர்கள் ஆகிய மூவருடன் கூடி கேந்திர மடையவும், 8-ம் இடத்தில் புதன் நிற்கவும், சந்திரனோடு குருவுங் கூடி கேந்திரமடையவும் பெற்ற ஜாதகர் நோயில்லாது 90-வயதிருந்து சிவபத மடைவாராம்




[2] 11-க்குடையவர் திரிகோண மடையவும், 3-ம் இடத்தில் குரு நிற்கப்பெற்றாலும் மேற்கூறிய பலனேயாம்.

## 995

(இ - ள்.) 3-ம் இடத்தில் சனி நிற்கவும், 8-க்குடையவருக்கு இரண்டு பக்கமும் சுபர்கள் நிற்கவும், இலக்கினத்திற்கு இரண்டு பக்கமும் சுபர்கள் அமரவும், 8-ம் இடம் குருவுக்கு 11-ம் இடமாகவும், 12-க்குடைய வரும், பாவர்களும் கேந்திரம் அடையவும் பெற்ற ஜாதகருக்கு 90-வயதென்றுங் கூறியது.



## 996

(இ - ள்.) சனியும், சந்திரனுக்கு 8-க்குடையவரும் ஆகிய இருவரும் சந்திர கேந்திர மடையவும், இலக்கினத்திற்கு 11-ல் சூரியன் அமரவும், சந்திர கேந்திரத்தில் 11-க்குடையவர் நிற்கவும், 8-க்குடையவர் 12-ல் அமரவும், தீயர்கள் கேந்திர மடையவும் பெற்ற ஜாதகருக்கு 100-வயதிருக்கினும் 87-வயது வரையில் காலன் எதிரில் வாரானென்றுங் கூறியது.

| சு | | சந் | |
|---|---|---|---|
| ல ரா | இராசிச் | | |
| பு | சக்கரம். | | கே சனி |
| சூ | செ | குரு | |

## 997

(இ - ள்.) 8-க்குடையவர் ஆக்ஷி யடையவும், சனி கேந்திரத்தில் நிற்கவும், சந்திரன் 11-ல் அமரவும், இலக்கினாதிபதி கேந்திர மடையவும், பாபர்களுக்குத் துணையாக சுபர்கள் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு 83-வயதென்று கூறியது.

| பு | சு செ சூ | | |
|---|---|---|---|
| | இராசிச் | | சந் கே |
| குரு ரா | சக்கரம். | | |
| சனி | | | ல |

## 998

(இ - ள்.) இலக்கினத்திற் சுக்கிரனுங் குருவுங் கூடி நிற்கவும், 10-க்குடையவர் சுபர்களுடன் கூடி அமரவும், சனி 6-8-12-ல் நிற்கவும், 8-12-க்குடையவர்கள் சுபர்களாய் நிற்கவும், 12-க்குடையவர் 3-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் 90-வயதிருந்து கடவுள் திருவடி சேர்வானும்.

| | | | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| பு | | ல-சு கு-சந் | சனி |

## 999

(இ - ள்.) 8-க்குடையவர் ஆக்ஷியில் நிற்கவும், சனி ஆக்ஷி உச்சம் பெற்று கேந்திர மடையவும், அவரை சுபர்கள் நோக்கவும் பெற்ற ஜாதகருக்கு 100-வயதென்றுங் கூறியது.

| சூ கே | ல சந் பு-சு | | |
|---|---|---|---|
| குரு | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| | செ | சனி | ரா |

[2] 8-க்குடையவருக்கு 2-பக்கமும் சுபர்கள் நிற்கவும், சனி 3-ல் அமரவும், 2-7-க்குடையவர்கள் நட்படையவும் பெற்ற ஜாதகருக்கு 100-வயது பூரணமாய்க் கூறவும்.

## 1000

(இ - ள்.) 3-8-க்குடையவர்கள் ஆக்ஷியடையவும், இவர்களை சுபர்கள் பார்க்கவும், சுக்கிரன் இலக்கினத்தில் நிற்கவும், அவரையும் சுபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு 100-வயதென்றுங் கூறியது.

| | | | |
|---|---|---|---|
| | | | குரு |
| சனி | இராசிச் | | சந் |
| பு | சக்கரம். | | |
| ல சு | | | |

[2] 8-க்குடையவர் 2-ல் நிற்கவும், 7-க்குடையவர் இலக்கினத்தில் நிற்கவும், 9-ல் குரு, சந்திரன் முதலிய சுபர்கள் அமரவும், 8-க்குடையவரை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு 100-வயது கூறியது.

## 1001

(இ - ள்.) 8-6-க்குடையவர்கள் கூடி 12-ல் நிற்கவும், இலக்கினத்திற்கு குரு, சுக்கிரன் அமரவும் பெற்ற ஜாதகருக்கு 100-வயதென்றுங் கூறியது.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| | ல-சு குரு | செ பு | |

[2] சந்திரன், சுக்கிரனுக்கு 7-ல நிற்கவும், குரு இலக்கினத்தில் அமரவும், 7-க்குடையவர் 4-ல் நிற்கவும், சனி நட்படையவும், பாபர்கள் கூடாது 8-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு 100-வயதென்றுங் கூறியது.

| | | | |
|---|---|---|---|
| | சு | ல குரு | ரா |
| | இராசிச் | | |
| | சக்கரம். | | செ |
| கே | | சந் | சனி |

## 1002

(இ - ள்.) இலக்கினத்திற் சுபர்கள் நிற்கவும், குருவும் 8-க்குடையவருங் கூடி 12-ல் அமரவும், சந்திரன் 8-க்குடையவரை பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு 100-வயதென்றுங் கூறியது.

| | | | |
|---|---|---|---|
| | சந் | | |
| | இராசிச் | | |
| | சக்கரம். | | |
| | | குரு செ | ல-சு பு |

[2] சனி 8-க்குடையவர் சந்திரன் லக்கினாதிபதி ஆகிய நால்வர்களும் ஆக்ஷி உச்ச மடையவும் பெற்ற ஜாதகருக்கு 100-வயதென்றுங் கூறியது.

## 1003

(இ - ள்.) 8-க்குடையவருஞ் சனியுங் கூடி கேந்திர மடையவும், சந்திரன் திரிகோணத்தில் நிற்கவும், லக்கினத்திற் குரு நிற்கவும், லக்கினாதிபதி திரிகோணமேறி நிற்கவும், 12-க்குடையவர் 6-8-12-ல் அமரவும் பெற்ற ஜாதகர் 70-வயதில் மோக்ஷ மடைவனும்.

| | | | |
|---|---|---|---|
| செ சனி | சூ | பு | |
| | இராசிச் | | |
| சந் | சக்கரம். | | |
| | | | ல குரு |

## 1004

(இ - ள்.) 8-க்குடையவர் திரிகோண மடையவும், 12-க்குடையவர் ஆக்ஷியில் நிற்கவும், லக்கினாதிபதி லக்கினத்தில் நிற்கவும், சனி 12-ல் அமரவும், சந்திரன் கேந்திர மடையவும் பெற்ற ஜாதகருக்கு 70 வயதில் மோக்ஷ முண்டாம்.

| | | | |
|---|---|---|---|
| | | செ | |
| | இராசிச் | | |
| | சக்கரம். | | சூ சந் |
| சந் | | | ல பு |

## 1005

(இ - ள்.) லக்கினாதிபதியும், 8-க்குடையவரும் ஒருவராகி கேந்திர மடையவும், 12-க்குடையவர் 8-ல் நிற்கவும், 2-11-க்குடையவர்கள் கூடி திரிகோண மடையவும் 3-ம் இடத்திற் குருவிருந்து சனியைப் பார்க்கவும் பெற்ற ஜாதகர் 70 வயதிருந்து மோக்ஷ மடைவனும்.

| | | | |
|---|---|---|---|
| | சு | பு | சூ செ |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | சனி |
| குரு | | ல | |

## 1006

(இ - ள்.) சனி குருவுக்கு திரிகோண மடையவும், 8-12-க்குடையவர்கள் 6-ல் நிற்கவும், சுக்கிரன் 8-ல் அமரவும், குரு 4-ல் நிற்கவும், 1-க்குடையவர் கேந்திர மடையவும் பெற்ற ஜாதகர் 70-வயதில் மோக்ஷ மடைவனும்.

| | | | |
|---|---|---|---|
| பு | சு | | |
| சூ செ | இராசிச் | | |
| | சக்கரம் | | சனி |
| குரு | | | ல |

## 1007

| பு | சூ ரா | | செ |
|---|---|---|---|
| குரு சந் | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| | | கே | ல |

(இ-ள்.) லக்கினாதிபதி கேந்திர மடை-யவும், 8-க்குடையவர் 10-ல் நிற்கவும், 8-ல் 12-க்குடையவர் அமரவும், சந்திரனுங் குருவுங் கூடி ஒரு ராசியில் நிற்கவும், கேது 2-ல் அமரவும் பெற்ற ஜாதகருக்கு 66-வயதில் மோக்ஷ மடைவனும்.

## 1008

| | ல | சனி | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | செ சு |
| | | | |
| | குரு சந் | | |

(இ-ள்.) 8-ம் இடத்தில் சுபர்கள் நிற்கவும் சனி நட்பில் நிற்கவும், 8-2-க்குடையவர்கள் கூடி 4-ல் அமரவும், அவர்களை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு 86-வயதென்றுங் கூறியது.

| சந் | ல செ | | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | குரு |
| | | | |
| | சு | சனி | பு |

[2] சனிக்கு 2-பக்கங்களிலும் 6-ம் இடத்திலும் சுபர்கள் நிற்கவும், 8-க்குடையவர் ஆக்ஷியில் அமரவும், குரு 4-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு 90-வயதென்றுங் கூறியது.

## 1009

(இ-ள்.) 8-க்குடையவருக்கு 12-ல் சந்திரன் நிற்கவும், அவரைக் குரு பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு 88-வயதென்றுங் கூறியது.

| சு | பு | | ல குரு |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| செ | | | சனி சந் |

[2] 8-12-6-க்குடையவர்கள் ஆகிய மூவர்களும் அவரவர்கள் 4-க்கு 4-ஆக அமரவும். அவர்களை சுபர்கள் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகருக்கு 83-வயதென்றுங் கூறியது.

## 1010




(இ - ள்.) 3-க்குடையவர் 10-ல் நிற்கவும், குரு 3-ல் அமரவும், சனியும் 8-க்குடையவரும் இலக்கினத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு 90- வயதென்றுங் கூறியது.

[2] சந்திரன் வலுத்து நிற்கவும், 8-க்குடையவர் சுபர் வீட்டில் அமரவும், சுபர் வீட்டில் சனி நிற்கவும், இலக்கினாதிபதி ஆக்ஷியடையவும் பெற்ற ஜாதகருக்கு 100-வயதென்றுங் கூறியது.

## 1011




(இ - ள்.) பாபர்களெல்லாம் வலிகுறைந்து நிற்கவும்; சுபர்களெல்லாம் வலுத்து நிற்கவும்; சனி, சந்திரன் வீட்டிலும், அல்லது சூரியன் வீட்டிலாகிலும் மேற்கூறியவர்களுடன் கூடி நின்றாலும், 6-8-12 சுபர்களுடைய வீடாயிருக்கவும், குரு பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு 100-வயது பூரணமாம். தவறினால் இந் நூலை கிழிக்கப்படுமாம்.

## 1012




(இ - ள்.) இலக்கினாதிபதி கேந்திரமடையவும், 8-க்குடையவர், சந்திரன், சுக்கிரனோடு கூடி திரிகோணத்தில் நிற்கவும், குரு 11-லிருந்து சனியையும் 8-க்குடையவரையும் சூரியனையும் பார்க்கவும், 6-ல் 12-க் குடையவரேனும், புதனாகிலும் நிற்கவும் பெற்ற ஜாதகர் 90-வயதிருந்து மோக்ஷமடைவனாம்.

## 1013




(இ - ள்.) 3-ம் இடத்திற் சனி நிற்கவும், சந்திரன் இலக்கினத்தில் நிற்கவும், சுபர்கள் 11-ல் அமரவும். 8-6-க்குடையவர்கள் சுபர்களாய் நிற்கவும், குரு திரிகோணமடையவும் பெற்ற ஜாதகர் வேளாள மூலத்திற் பிறந்து 100-வயதிருப்பனும்.

## 1014




(இ - ள்.) குரு கேந்திர மடையவும், குருவுக்கு திரிகோணத்தில் இலக்கினுதிபதி நிற்கவும், அல்லது இலக்கினுதிபதி தனியாகத் திரிகோண மடையவும், சந்திரன் 6-ல் நிற்கவும், 12-க்குடையவர் 4-ல் அமரவும், இலக்கினத்தைக் குரு பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு 100-வயதும், மகாவிஷ்ணு கிருபையு முண்டாம்.

## 1015




(இ - ள்.) கேந்திரங்களில் குருவிருந்து சனியைப் பார்க்கவும், 8-க்குடையவர் திரிகோண கேந்திர மடையவும். 3-ம் இடத்திற் சந்திரனும், 2-க் குடையவருங் கூடி நிற்கவும் பெற்ற ஜாதகர் 90-வயதிருப்பராம்.

## 1016




(இ - ள்.) 6-க்குடையவர் சந்திரனோடும், 8-க்குடையவரோடுங் கூடி ஆகூதி யடையவும், 12-க்குடையவர் செவ்வாயோடு கூடி 10-ல் நிற்கவும், இலக்கினுதிபதி 11-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் 90-வயதுடையவராம்.

## 1017

(இ - ள்.) முன்னுரைத்த ஆயுற்பாகமெல்லாம் பிசகில்லையென்றுங் கூறியது. ஆனால், இதற்கு உயிர்த்திசையும், உடற்றிசையும் விரோதமாகி நிறைந்த மரணம் வந்து நேர்ந்தாலும் 60-வயதுக்கு குறைந்து மாரகமடையாரென்றும் அன்றியும், 60-வயது கடந்தால் நிறைவயதென்றுங் கூறப்படும். இதில் 50-க்குள் இறப்பவரெல்லாம் அற்ப வயதுடையவராம்.

## 1018

(இ - ள்.) செவ்வாய் புதன் வீட்டிலும், சுக்கிரன் சந்திரன் வீட்டிலும் நிற்கவும், சனி ஆக்ஷிபெற்று கேந்திர மடையவும், சந்திரன், குரு, இராகு ஆகிய மூவர்களும் 6-ல் நிற்கவும், புதன் 8-ல் அமரவும் பெற்ற ஜாதகர் 80-வய துடையவராம்.

| | | | சந் குரா |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | சு |
| ல சனி | | | பு |
| கே | | | செ |

## இரண்டாம் பாவகம்

## 1019

### குரு வணக்கம்

(இ - ள்.) கர்ப்பகத்தருக்கள் நிறைந்த திருவேரகப் பதியில் வாழும் இலக்ஷிமி தங்கிய புயங்களையுடைய வீரப்பபிள்ளை யென்னும் என தாசிரியருடைய திருப்பாதங்களைப் பணிந்து 2-ஆம் பாவகத்தைக் கூறுவதற்கு சரஸ்வதி சந்ததமும் என்னுவினிடத்து வசிக்கின்ற ளென்பதாம்.

## 1020

(இ - ள்.) 2-ம் பாவகத்தினல் எவர்களும் நினைத்து வந்தபடி கூறவும், வாக்கு நிலமையும், வித்தை, தனம், நேத்திரம், வன்மை, குடும்பம், யோகம், மங்களம், மரணம் முதலியவற்றை விபரமாய்க் கூறுகின்றனம் கேட்பாயாக.

### தன பலன்

## 1021

(இ - ள்.) 2-9-க்குடையவர்கள் கூடி கேந்திர மடையவும், அவர்களை இலக்கினதிபதி பார்க்கவும் பெற்ற ஜாதகர் சில காலந் துன்பமுற்று பிறகு தனவானு யிருப்பானும்.

| | குரு சூ | | |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | ல |
| | | | |
| | | சந் | |

## 1022




(இ - ள்.) 1-11-2 - க்குடையவர்கள் ஆகிய மூவர்களும், அவரவர்களுக்கு திரிகோண கேந்திர மடையவும் பெற்ற ஜாதகர் தனவானும்.




[2] 11-க்குடையவர் 2-ல் நிற்கவும், 9-ல் 2-க்குடையவர் அமரவும், 9-க்குடையவர் 9-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் தனவானும்.

## 1023




(இ - ள்.) இலக்கினாதிபதியோடு 2-க்குடையவர் கூடி நிற்கவும், செவ்வாய் 9-ல் அமரவும், அவரை சுக்கிரன் பார்க்கவும், குரு இலக்கினத்தை நோக்கவும் பெற்ற ஜாதகர் பொருள் மிகுந்த தனவானும்.




[2] 3-2-க்குடையவர்கள் கூடி 9-ல் நிற்கவும், அவர்களை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் மேற் கூறிய யோக முடையவரேயாம்.

## 1024




(இ - ள்.) 2-9-1-12-க்குடையவர்கள் ஆகிய மூவர்களுங் கூடி இலக்கினத்தில் நிற்கவும், சந்திரன் 9-லிருந்து 6-க்குடையவரைப் பார்க்கவும், செவ்வாய் 11-ல் நிற்கவும், குரு கேந்திரமேறி தனது 4-ம் இடத்தைப் பார்க்கவும் பெற்ற ஜாதகர் மிகுந்த பாக்கியமும் சதுரங்காதி சேர்க்கையும் இராஜரீகமும் உடையவராம்.

## 1025

(இ - ள்.) 2-1-க்குடையவர்கள் கூடி லக்கினத்தில் நிற்கவும், லக்கினாதிபதியும், 5-க்குடையவருங் கூடி 2-ல் அமரவும், 9-க் குடையவரை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் செல்வவா னென்றுங் கூறியது.

| | | சனி | ல-கு சந் |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | சு பு |
| | | | |
| | குரு | | |

[2] 2-க்குடையவர் லக்கினத்தில் நிற்கவும், லக்கினாதிபதி தனியாக 4-ல் அமரவும், புதன் சந்திரனோடு கூடி கேந்திர மடையவும் பெற்ற ஜாதகர் செல்வ முடையவராம்.

| | | பு சந் | |
|---|---|---|---|
| செ | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| | ல குரு | | |

## 1026

(இ - ள்.) 2-9-க்குடையவர்கள் சந்திரனுக்கு 2-ல் நிற்கவும், 4-7-க்குடையவர்கள் லக்கின கேந்திர மடையவும், 9-க் குடையவருக்கு கேந்திரத்தில் லக்கினாதிபதி நிற்கவும், 3-க்குடையவர் 7-ல் அமரவும் பெற்ற ஜாதகருக்கு சுகமாகிய மனைவியும் மிகுந்த பாக்கியமும் கொடையாளியு மாவராம்.

| செ | | பு | |
|---|---|---|---|
| சு | இராசிச் சக்கரம். | | |
| சந் | | | |
| | | | ல குரு |

## 1027

(இ - ள்.) 9-க்குடையவர் 10-ல் நிற்கவும், 2-க்குடையவர் லக்கினத்தில் நிற்கவும, லக்கினாதிபதி கேந்திர மடையவும். 4-க் குடையவர் 12-ல் அமரவும், லக்கினத்திற்கு 2-பக்கமும் சுபர்கள் நிற்கவும் பெற்ற ஜாதகர் துயர மில்லாத தனவானும்.

| | குரு | | சு |
|---|---|---|---|
| | இராசிச் சக்கரம். | | ல கு |
| | | | பு |
| | | சந் | |

## 1028

(இ-ள்.) 2-க்குடையவருஞ் சந்திரனும் 12-ல் நிற்கவும், 7-க்குடையவர் 3-ல் நிற்கவும், 9-க்குடையவர் குருவுக்கு திரிகோண மடையவும், குரு 11-ல் அமரவும், 11-க்குடையவர் ராகுவோடு கூடி 4-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் பொருளைத் தருமஞ் செய்து புகழ் பெறுவனும்.




## 1029

(இ-ள்.) 2-க்குடையவர் 4-11-க்குடையவர்களோடு கூடி கேந்திர மடையவும், 9-க்குடையவர் 12-ல் நிற்கவும், 9-ல் 10-க்குடையவர் அமரவும். 4-ம் இடத்தில் ராகுவோடு சந்திரன் கூடி நிற்கவும் பெற்ற ஜாதகன் சிம்மம்போ லிருந்து குன்றாத வாழ்வுடையவராம்.




## 1030

(இ-ள்.) 9-க்குடையவர் ஆக்ஷி யடைந்த சூரியனோடும், சந்திரனோடுங் கூடி நிற்கவும், 10-ம் இடத்தில் ஆக்ஷி பெற்ற சுக்கிரனோடு குருவுஞ் செவ்வாயுங் கூடி அமரவும், 11-ல் லக்கினதிபதி வலுப்பெற்று நிற்கவும், 2-ம் இடத்தில் ராகு அமரவும் பெற்ற ஜாதகர் தனம், கனம், பூமி யுடையவராம்.




## 1031

(இ-ள்.) 4-2-க்குடையவர்கள் லக்கினத்தில் நிற்கவும், 4-ம் இடத்தில் 9-க்குடையவர் அமரவும் பெற்ற ஜாதகர் என்னும் தனவானா யிருப்பானும்.






[2] 7-2-க்குடையவர்கள் கூடி 7-ல் நிற்கவும், சுக்கிரன் ஆக்ஷி யடையவும், சுக்கிரனுக்கு 7-க்குடையவர் நட்பு வீட்டில் நிற்கவும் பெற்ற ஜாதகர் என்னளும் தனங் குணமுடையவராம்.

## 1032




(இ - ள்.) 9-க்குடையவர் குருவுக்கு திரிகோண மடையவும், 11-க்குடையவர் பலம் பெற்று நிற்கவும், 7-10-க்குடையவர்கள் கேந்திர மடையவும், இலக்கினாதிபதியும் 4-க்குடையவருங் கூடி 4-ல் நிற்கவும், சந்திரன் குருவுக்கு 3-ல் அமரவும் பெற்ற ஜாதகர் தனமுங் கனமும் கெடாத வாழ்வு முடையவராம்.

## 1033




(இ - ள்.) 2-க்குடையவர் ராகுவோடு கூடி கேந்திர மடையவும், 4-க்குடையவர் 9-ல் அமரவும், சுக்கிரன் ஆக்ஷி பெற்று சந்திரனோடு கூடி திரிகோண மடையவும், குரு 11-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் தனம், பூமி கன்று காலி பெருக்க முடையவனும்.

## 1034




(இ - ள்.) 2-ல் ராகு நிற்கவும், 2-க்குடையவர் 9-ல் தனித்து நிற்கவும், 4-க்குடையவர் ஆக்ஷி யடையவும், குரு சந்திரனோடு கூடி 11-ம் இடத்தில் நிற்கவும், இலக்கினாதிபதி 10-ல் அமரவும் பெற்ற ஜாதகர் பொருள் மிகுதியும், சத்தியமும் உடையவராம்.

## 1035




(இ - ள்.) 9-2-க்குடையவர்களும் சூரியனும் ஆகிய மூவர்களும் திரிகோண மடையவும், அவர்களை 5-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் சன்மார்க்க முடைய பாக்கியவானும்.

[2] 2-4-க்குடையவர்கள் கூடி திரிகோண கேந்திரமடையவும் பெற்ற ஜாதகருக்கும் மேற் கூறிய பலனும்.

### அவதன பாகம்

## 1036




(இ - ள்.) 2-6-க்குடையவர்கள் நீசமடையவும், அவர்களை தீயர்கள் நோக்கவும் பெற்ற ஜாதகர் மனைவியினால் துயரடைந்து காலங் கழிப்பவனும்.

## 1037




(இ - ள்.) சந்திரனுஞ் சூரியனும் 2-ல் அமரவும், 2-க்குடையவர் 6-ல் நிற்கவும், குரு 12-ல் அமரவும் பெற்ற ஜாதகர் தன் சுதந்தரப் பொருள் பூமிகளை யிழந்து வாடுவானும்.

## 1038




(இ - ள்.) 6-க்குடையவர் உச்சமடையவும், 2-க்குடையவர் ஈனமடைந்து 12-ல் அமரவும், இவர்களோடு பாபர்கள் கூடி நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு பிச்சைத் தொழிலன்றி வேறு ஜீவன மில்லையாம்.

## 1039

(இ - ள்.) 1-12க்குடையவரும் ராகு வும் ஆகிய மூவர்களும் கூடி 2-ல் நிற்கவும் அவர்களை சுபர்கள் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகர் கனவிலுஞ் செல்வ மடையா னும்.




## 1040

(இ - ள்.) சந்திரனும் 2-க்குடையவ ருங் கூடி நிற்கவும் செவ்வாய் திரிகோண மடையவும் லக்கினாதிபதி நீச்சம்பெற்று 8-க் குடையவரோடு கூடி நிற்கவும் பெற்ற ஜாத கர் ஆடையின்றி தாரித்திரிய னவனும்.




## 1041

(இ - ள்.) சந்திரனுக்கு 2 - 12 - 6 -க் குடையவர்களும், இலக்கினத்திற்கு 2 -க் குடையவரும் ஆகிய நால்வர்களும் 6-ல் நிற்க வும் பெற்ற ஜாதகர் மனத்துயரரோடு காலங் கழிப்பவனும்.




## 1042

(இ - ள்.) சுபக்கிரகங்கள் 6-8-12-ல் நிற்கவும், பாபக்கிரகங்கள் சுபஸ்தானங்க ளில் அமரவும், அவர்களை சனி பார்க்கவும் பெற்ற ஜாதகர் கொடிய தாரித்திர னவனும்.



## வாக்கு வளம்

### 1043




(இ - ள்.) இலக்கினாதிபதியும், 4-க் குடையவரும், குருவும் ஆகிய மூவர்கள் கூடி நன்மையான ராசிகளில் திரிகோண கேந்திர மடையவும், சந்திரன், சுக்கிரன், புதன் இவர்களில் ஒருவர் 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் ஜோதிட வித்துவானென்றுங் கூறியது.




[2] குரு அழகிய கேந்திர மடையவும், சுக்கிரன் 4-ல் நிற்கவும், புதன் திரிகோண மடையவும் பெற்ற ஜாதகர் ஜோதிட சித்தாந்தியாவனும்.

### 1044




(இ - ள்.) குரு திரிகோண மடையவும், சுக்கிரன் குருவுக்கு கேந்திர மடையவும், புதன் கேந்திரத்தில் நிற்கவும், குருவின் கேந்திரத்திற் சந்திரனும் கேதுவுங் கூடி நிற்கவும் பெற்ற ஜாதகர் இலக்கண விலக்கிய வாகட ஜோதிட வல்லவனும்.

### 1045




(இ - ள்.) இக்கினத்திற் குரு நிற்கவும், 9-ல் புதன் அமரவும், புதனுக்கு 10-ல் சுக்கிர னிற்கவும் பெற்ற ஜாதகர் காவிய நூலுணர்ச்சி யுள்ளவனும்.

[2] சுக்கிரன் உச்சமடையவும், புதன் 3-ல் நிற்கவும், தனுர் இலக்கினமா யிருந்து, 11-ல் குரு நிற்கவும் பெற்ற ஜாதகர் வாக்கிற் சிறந்தவனும்.

### 1046

(இ - ள்.) 2-ல் புதனிற்கவும், குரு திரிகோண மடையவும், 4-ல் சந்திர னமரவும் பெற்ற ஜாதகர் வித்வசேகரனும்.




[2] 2-க்குடையவர் இலக்கினத்தில் நிற்கவும், 7-ல் சந்திரன், புதன் அமரவும் பெற்ற ஜாதகர் தமிழ்ப் பண்டிதனும், பாக்கியவானும் வாழ்பவராம்.

## 1047




(இ - ள்.) 2-க்குடையவர் இலக்கினத்தில் நிற்கவும்; சந்திரனும், புதனும் கேந்திர மடையவும், 4-க்குடையவர் 11-ல் நிற்கவும், செவ்வாய் கேந்திர மடையவும், அல்லது சுக்கிரன், செவ்வாய்க்கு 3-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் பாக்கியம், செல்வம், பல பாஷை பண்டிதனுய் மகாவிஷ்ணுவைப் போல் வாழ்ந்திருப்பானும்.

## 1048




(இ - ள்.) 2-ல் புதன் நிற்கவும், 2-க் குடையவர் இலக்கினத்தில் அமரவும், 4-ல் சந்திரன் நிற்கவும், குரு 10-ல் அமரவும், அவருக்கு 3-ல் சுக்கிரன் நிற்கவும் பெற்ற ஜாதகர் யோக்கியனுய், வாக்குவள்ம், யூகம், கல்வி யுடையவராம்.

## 1049




(இ - ள்.) இலக்கினுதிபதி இலக்கினத்தில் நிற்கவும், 2-ல் புதன் அமரவும், 4-ல் சந்திர னிற்கவும், குரு திரிகோண மடைந்து இலக்கினத்தைப் பார்க்கவும் பெற்ற ஜாதகர் சாஸ்திர ஆராக்ஷியில் அகத்தியனைப் போலுமிருந்து சிவபெருமானுக்கு மெய்யடி யருமாவராம்.

## 1050

(இ - ள்.) 2-ல் குரு நிற்கவும், 2-க்குடையவரை குரு பார்க்கவும், புதன் குருவுக்கு 11-ல் நிற்கவும், சுக்கிரன் இலக்கினத்தில் அமரவும் பெற்ற ஜாதகருக்கு யோக்கிய பாக்கியம், கல்வி, உண்மை நிலை யுண்டாகுமாம்.

| | | | |
|---|---|---|---|
| | | செ | |
| | இராசி சக்கரம். | | |
| | | | |
| | குரு | ல சு | பு |

## 1051

(இ - ள்.) இலக்கினத்திற் குரு, சுக்கிரன், சந்திரன் ஆகிய மூவரும் நிற்கவும், 3-ல் புதன் அமரவும், 2-ல் செவ்வாயும், 11-க்குடையவருங் கூடி நிற்கவும் பெற்ற ஜாதகர் கல்வியிலும், உண்மையிலுந் தேர்ந்தவனும்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| பு | செ கு | ல-சு சந் கு | |

[2] செவ்வாய் புதனுக்கு கேந்திர மடையவும், சந்திரன் சுக்கிரனோடு கூடி திரிகோண மடையவும், குரு 11-ல நிற்கவும் பெற்ற ஜாதகர் சாஸ்திர ஆராக்ஷியிற் றேர்ந்தவனும்.

| | | | |
|---|---|---|---|
| | | சந் சு | பு |
| | இராசிச் சக்கரம். | | |
| ல | | | |
| | குரு | | செ |

## 1052

(இ - ள்.) குருவுக்கு 2-ல் 2-க்குடையவர் நிற்கவும், அவரோடு சந்திரன் கூடி நிற்கவும்; புதனும் 9-க்குடையவருங் கூடி 3-ல் அமரவும், 4-ல் சுக்கிரன் நிற்கவும் பெற்ற ஜாதகர் கவி மாலைசெய்து ஈசன் றிருவடிக்கிச் சாற்றி சுகமடைவனும்.

| | | | |
|---|---|---|---|
| சு | | | |
| கு பு | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| ல | சனி சந் | குரு | |

## 1053

(இ - ள்.) சுக்கிரனும் புதனும் 2-ல் நிற்கவும், இவர்களை குரு பார்க்கப் பெற்றாலும்,

[2] சந்திரன், சுக்கிரன், புதன் ஆகிய மூவருங் கூடி 2-ல் நிற்கவும் இவர்களை குரு பார்க்கப் பெற்றாலும்,

[3] 2-3-4-5-7-9-10 இதற்குரியவர்கள் சுபர்களாயிருந்து ஆகூஷி பெற்று நின்றாலும், இம் மூன்று ஜாதகர்களும் கல்விமானாயிருந்து புகழ் பெறுவார்களாம்.

## 1054

(இ - ள்.) சூரியனை 2-க்குடையவர் பார்க்கவும் செவ்வாயை குரு பார்க்கப் பெற்றாலும்,

[2] புதனை லக்கினாதிபதி பார்க்கவும், சனி நட்படைந்து நிற்கப் பெற்றாலும்,

[3] சுக்கிரன் உபய ராசியில் நிற்கவும், அவருக்கு நேரில் சந்திரன், புதன், குரு இவர்கள் நிற்கவும் பெற்ற இம் மூன்றுதாமுள்ள ஜாதகர்கள் ஆரிய நூலிற் சிறந்தவராயுந் தமிழ்ப் புலவருமாவராம்.

## 1055

(இ - ள்.) 2-க்குடையவருஞ் சுக்கிரனும் கூடி நிற்கவும், அவர்களை புதன் பார்க்கப் பெற்றாலும்,

[2] 2-க்குடையவரும், புதனுங் கூடி அதில் ஒருவர் உச்சமடையவும், லக்கினத்திற் குரு நிற்கப் பெற்றாலும்,

[3] 7-க்குடையவர் திரிகோண மடையவும், குரு கேந்திரமடைந்து நிற்கவும் பெற்ற இம் மூன்றுதா ஜாதகர்கள் இலக்கண நூலில் வல்லவராயும், செந்தமிழ்ப் புலவருமாவராம்.

## 1056

(இ - ள்.) புதனும் 2-க்குடையவரும், குருவும் ஆகிய மூவர்களும் திரிகோண மடைந்தாலும்.

[2] செவ்வாயோடு 2-க்குடையவர் கூடி 2-ல் நிற்கவும், அவரை புதன் பார்க்கப் பெற்றாலும்,

[3] செவ்வாய், புதன், பாபர்கள் கூடி 2-ல் நிற்கவும், அவர்களை குரு பார்க்கப் பெற்றாலும்.

[4] புதன் 2-ல் நிற்கவும், செவ்வாய் திரிகோண மடையவும் குரு லக்கினத்தில் நிற்கவும் பெற்ற இந் நான்குதர முள்ள ஜாதகர் களும், தமிழ்ப் புலவரென்று வெளிப்பட்டவர்களாம்.

## 1057

(இ - ள்.) 2-ல் புதன் நிற்கவும், செவ்வாய் திரிகோண மடையவும், சுக்கிரன் ஆக்ஷி பெற்று நிற்கவும், சந்திரன் நட்பில் நிற்கவும், குரு 9-லிருந்து மேற்கூறிய நால் வர்களையும் பார்க்கவும். சூரியன் லக்கினத் தில் நிற்கவும் பெற்ற ஜாதகர் சரஸ்வதி கிருபை யுடையவராய் உயர்ந்த காவிய நூற் செய்பவராம்.

| | குரு | | |
|---|---|---|---|
| | இராசிச் | சக்கரம். | |
| | | | ல-சூ செ |
| சந் | | சு | பு |

## 1058

(இ - ள்.) குரு திரிகோண மேறி சூரி யனையும், சுக்கிரனையும், புதனையும், சந்திரனை யும், லக்கினத்தையும் பார்க்கவும், சனி லக் கின கேந்திர மடையவும் பெற்ற ஜாதகர் அழியாத கீர்த்தியாய் தீபம்போலு மிருந்து சிவன் முன்பாக அன்புள்ள காவியங்க ளியற்றுவராம்.

| | சூ செ | | ல சனி |
|---|---|---|---|
| சு சந் | இராசிச் | சக்கரம். | |
| | | | |
| | | குரு | |

## 1059

(இ - ள்.) குரு 5-லிருந்து கேதுவையும், சுக்கிரனையும், லக்கி னத்தையும் பார்க்கவும் பெற்ற ஜாதகர் ஞானமும் கல்வியு முடைய வராம்.

[2] 5-ல் குருவிருந்து ராகுவையும், சுக்கிரனையும், லக்கினத் தையும் பார்க்கவும் பெற்ற ஜாதகர் மேற்கூறிய பலனுடையவராம்.

## 1060

(இ - ள்.) லக்கினத்திற் குருவிருந்து புதனையும், சந்திரனையும், சுக்கிரனையும் பார்க்கவும், ஸ்திர லக்கினத்தில் ஜனிக்கவும் பெற்ற ஜாதகருக்கு தனமும், கல்வியும், தவமும் உண்டாகுமாம்.

| சு | | சந் பு | |
|---|---|---|---|
| | இராசிச் | சக்கரம். | |
| | | | |
| | ல குரு | | |

[2] இலக்கினத்திற் குருவிருந்து கேது, சந்திரன், செவ்வாய், புதன் ஆகிய நால்வரையும் பார்க்கவும் பெற்ற ஜாதகர் கல்வியும், ஒழுங்கும் தனமு முடையவராம்.

## 1061

(இ - ள்.) 11-ல் குருவிருந்து புதன், சந்திரன், கேது ஆகிய மூவர்களையும் பார்க்கவும் பெற்ற ஜாதகர் கல்வியிலும், கேள்வியிலும் வல்லப முடையவராம்.

[2] 11-ல் குருவிருந்து சந்திரன், சுக்கிரன், சூரியன், சனி, ராகு ஆகிய ஐவரையும் பார்க்கவும் பெற்ற ஜாதகர் கல்விப் பொருளும், அறிவு முடையவராம்.

| | | | |
|---|---|---|---|
| | | சந் சு-சூ | |
| | இராசிச் சக்கரம். | | சனி ரா |
| ல கே | | | |
| | குரு | | |

## 1062

(இ - ள்.) 11-ல் குருவிருந்து புதனையும், 9-க்குடையவரையும் பார்க்கவும் பெற்ற ஜாதகர் கல்வி, கேள்விகளில் தேர்ந்தவராம்.

[2] 11-ல் குருவிருந்து சுக்கிரன், புதன், சந்திரன், செவ்வாய், கேது, லக்கிஞாதிபதியாகிய அறுவர்களையும் பார்க்கவும் பெற்ற ஜாதகர் ஞான நூலுக்கு ஆசிரிய பீட முடையவராம்.

| | | | |
|---|---|---|---|
| | சு பு | | சந் செ |
| ல ரா | இராசிச் சக்கரம். | | |
| | | | சனி கே |
| குரு | | | |

## 1063

(இ - ள்.) 11-ல் குருவிருந்து புதன், சூரியன், பூர்வ சந்திரன் ஆகிய மூவர்களையும் பார்க்கவும் பெற்ற ஜாதகன் கல்வியிற் றேர்ந்த உத்தமனும்.

| | | | |
|---|---|---|---|
| | சூ பு | | சந் |
| | இராசிச் சக்கரம். | | |
| | | | |
| ல | | குரு | |

| செ | சூ | சு—பு சந் | |
|---|---|---|---|
| | இராசிச் | | |
| ல | சக்கரம். | | |
| | குரு | | |

[2] 11-ல் குருவிருந்து சுக்கிரன், செவ்வாய், பூர்வ சந்திரன், புதன் ஆகிய நால்வர்களையும் பார்க்கவும் பெற்ற ஜாதகர் கல்வியும் வீரத் தன்மையு முடையவராம்.

## புறனடை யங்கம்

### 1064

(இ - ள்.) திண்ணமாக எடுத்து மேற்கூறிய துண்மை யெனி னும், அதிற் கூறிய கிரக நாயகர்கள் தேவவர்க்கங்களில் சுபாங்கி சங்களேறி நின்றால் மேற்கூறிய கல்வி நிலைமையிற் றேர்ந்தவர்களென் றும், மேற் கூறிய கிரகங்கள் பாப வர்க்காங்கிசங்களேறி பலஹீனப் படுவாராகில், ஜாதகர்கள் கல்வியிற் றாழ்ந்தவர்களென்றுங் கூறியது. அப்படி தளர்ச்சி யடைந்தால் சாமான்ய வித்துவானாக வாகினு மிருப்பனாம்.

### 1065

(இ - ள்.) மேற் கூறிய கிரகங்கள் நல்ல நிலைமைகளிற் றேய்ந் தும்; சில கிரகங்கள் பாப நிலைமையிற் றேய்ந்தும் இருப்பாராகில் சொல்லிய பலன்களில் சிலது நடக்குமென்றும், சிலது தவறு மென் றுங் கூறியது. இதிற் சொல்லாத கிரகங்கள் நல்ல ஸ்தானங்களில் நிற்பாராகில் தோஷமல்ல வென்றும், வேறு பலன்களை சுகமாக செய்பவராம். அல்லாமலும், குரு இலக்கினத்திலேனும், 5-9-11-லேனும் நிற்பாராகில் கல்வி நிலைமையில் வலி பெற்றவர்க ளென்றுங் கூறப்படும்.

## கணித நூல் வளம்

### 1066

(இ - ள்.) 4-க்குடையவரும், இலக்கினாதிபதியுங் கூடி திரி கோண மடையவும், அவர்களை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் கணித வல்லவனும்.

|  |  |  | ல |
|---|---|---|---|
|  | இராசிச் | சக்கரம். |  |
|  |  |  |  |
| குரு |  | பு சூ |  |

[2] இலக்கினுதிபதி சூரியனேடு கூடி 5-ல் நிற்கவும், இலக்கினத்தை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் கணித வல்லவனும்.

[3] சுக்கிரனும், குருவும் ஒருவரை ஒருவர் பார்த்து நிற்கவும் பெற்ற ஜாதகர் மேற்கூறிய பல னுடையவராம்.

## வைத்திய வளம்

### 1067

|  |  | சனி |  |
|---|---|---|---|
|  | இராசிச் | சக்கரம். |  |
| குரு |  |  |  |
|  | சு சூ | ல பு |  |

(இ - ள்.) 4-ல் குருவிருந்து சனியைப் பார்க்கவும், புதன் இலக்கினத்தில் நிற்கவும், 2-ல் சூரியனும் சுக்கிரனும் கூடி சனியைப் பார்க்கவும் பெற்ற ஜாதகர் வாகட நூல் பண்டித வல்லவனும்.

[2] இலக்கினத்திற்கு 4-லினும், சுக்கிரனுக்கு திரிகோணத்தி லும் சனி நிற்கவும் பெற்ற ஜாதகர் மேற்கூறிய விதி யுடையவராம்.

## விநோத வித்தியாவளம்

### 1068

(இ - ள்.) 7-6-க்குடையவர்கள் கூடி 4-ல் அமரவும், இலக்கி னத்தில் இராகு நிற்கவும் பெற்ற ஜாதகரும்,

[2] சூரியனும், சந்திரனுங் கூடி நட்பு உச்சமடையவும், 2-ல் 4-10-க்குடையவர் நிற்கவும் பெற்றுலும்,

[3] இலக்கினுதிபதியும், 4-க்குடையவருங்கூடி 9-ல் நிற்கவும், அவர்களோடு இராகு கூடவும், புதன் 5-ல் நிற்கவும், இவர்களை குரு இலக்கினத்தில் நின்று பார்க்கவும் பெற்ற மூன்று தரமுள்ள ஜாதகர்களும் விநோத வித்தையில் கீர்த்திமா னென்றுங் கூறியது.

